# நூஹ் நபியின் கப்பல்

## (கிஷ்தி நூஹ்)

தமிழாக்கம்:
மர்ஹூம் A.M.S. பஷீர் அஹ்மது
சாத்தான்குளம்

வெளியிடுவோர்

தமிழக புத்தக வெளியீட்டுக் குழு (வடமண்டலம்)
**அஹ்மதிய்யா முஸ்லிம் ஜமாஅத்**
11, முதல் பிரதான சாலை, யு.இ. காலனி,
கோடம்பாக்கம், சென்னை- 600 024.



**'NOOH NABIYIN KAPPAL'**

**Tamil Version of the book 'KISTHI NOOH' (Urdu)**

**By Hadhrat Mirza Ghulam Ahmad (as)**

**The Promissed Messiah and Imaam Mahdhi**

**Translated by :**

**Marhoom A.M.S. BASHEER AHMAD**

**First Edition : 2014**

**ISBN: 978 81 7912 298 3**

Published by :

**Tamilnadu Book Publishing Committee (North Zone)**
**AHMADIYYA MUSLIM JAMA'ATH**
No. 11, First Main Road,
United India Colony, Kodambakkam,
Chennai - 600 024. Tamilnadu.
**Website: www.alislam.org\tamil**
**Toll Free Number : 1800 425 40000**

For:
**NAZAARAT NASHR-O-ISHAAT**
Sadr Anjuman Ahmadiyya, Qadian

بسْمِ اللهِ الرَّحْمَنِ الرَّحِيمِ

# முன்னுரை

ஹஸ்ரத் காத்தமுன் நபிய்யீன் முஹம்மது முஸ்தஃபா (ஸல்) அவர்களின் முன்னறிவிப்பிற்கேற்ப இறுதி காலத்தில் தோன்றிய வாக்களிக்கப்பட்ட மஸீஹும், இமாம் மஹ்தியும் ஆகிய ஹஸ்ரத் மிர்ஸா குலாம் அஹ்மது (அலை) அவர்கள் 1902-ஆம் ஆண்டு கிஷ்தி நூஹ் (நூஹின் கப்பல்) என்ற பெயரில் ஒரு நூலை எழுதினார்கள். அதற்கு அவர்கள் தஃவத்துல் ஈமான் (இறை நம்பிக்கைக்கான அழைப்பு) என்ற இரண்டாவது பெயரையும், தக்வியத்துல் ஈமான் (இறை நம்பிக்கையை உறுதிப்படுத்துதல்) என்ற மூன்றாவது பெயரையும் சூட்டினார்கள்.

அன்னாரின் காலத்தில் பிளேக் நோய் பரவும் என திருக்குர்ஆனிலும், ஹதீஸிலும், பைபிள் பழைய ஏற்பாட்டிலும் புதிய ஏற்பாட்டிலும் சூசகமாக முன்னறிவிக்கப்பட்டிருக்கிறது. இந்த பிளேக் நோய் பற்றி அவர்கள் இந்த நூலில் எச்சரித்திருப்பதுடன் அதிலிருந்து தமது வீட்டிலுள்ளவர்களும் ஜமாஅத்தைச் சார்ந்தவர்களும் தடுப்பூசி போடப்படாமலேயே காப்பாற்றப்படுவார்கள் என்றும் இறைவனிடமிருந்து பெற்ற அறிவிப்பின்படி முன்னறிவித்திருந்தார்கள். அதன்படி 1902 அக்டோபர் மாதத்தில் பிளேக் நோய் பஞ்சாபில் மிகத் தீவிரமாகப் பரவியபோது ஆங்கிலேய அரசாங்கம் பிளேக் நோயிற்கான தடுப்பூசி போடும் திட்டத்தை பரந்த அளவில் சொற்பொழிவுகள், எழுத்துகள் மூலமாக எடுத்துரைத்து ஒவ்வொருவரும் தடுப்பூசி போட வேண்டும் என பிரசாரம் செய்தது.

அரசாங்கத்தின் இந்த திட்டத்தை பாராட்டிய ஹஸ்ரத் வாக்களிக்கப்பட்ட மஸீஹ் (அலை) அவர்கள், ‘எவர் உமது இந்த நான்கு சுவருக்குள் இருப்பாரோ மேலும் எவர் முழுமையான பின்பற்றுதல், கீழ்ப்படிதல் உண்மையான இறையச்சம் ஆகியவற்றுடன் உம்மிடம் தம்மை மாய்த்துக் கொள்வாரோ அவர் பிளோக் நோயிலிருந்து காப்பாற்றப்படுவார். மேலும் இது கடைசி காலத்தில் ஓர் இறை அடையாளமாக இருக்கும்’ என்ற இறையறிவிப்புக் கிணங்க நாம் தடுப்பூசி போட மாட்டோம். ஆயினும் இறைவன் தனது இந்த வாக்குறுதிக்கேற்ப எம்மையும், எம்மைச் சார்ந்தவர்களையும் காப்பாற்றுவான் எனக் கூறினார்கள்.

இந்த நூலை மர்ஹூம் **A.M.S.** பஷீர் அஹ்மது சாஹிப் அவர்கள் தமிழாக்கம் செய்துள்ளார்கள். மேலும் இதனை நூல் சரிபார்ப்புக் குழு மூல நூலுடன் சரி பார்த்து தேவையான திருத்தங்களை செய்துள்ளது. அவர்கள் அனைவருக்கும் அல்லாஹ் நற்கூலியை வழங்குவானாக. மேலும் நல்ல உள்ளம் கொண்ட அனைவருக்கும் இறைவன் இதன் மூலம் நேர்வழி வழங்குவானாக. ஆமீன். – **வெளியீட்டாளர்**

# பொருளடக்கம்

بِسْمِ اللهِ الرَّحْمَنِ الرَّحِيمِ

# நூஹ் நபியின் கப்பல்

## பிளேக் நோயின் தடுப்பூசி

அல்லாஹ் எங்களுக்கு விதித்திருப்பது தான் எங்களுக்கு ஏற்படும். அவன் எங்கள் பாதுகாவலனாவான். மேலும் நம்பிக்கையாளர்கள் அவன் மீதே நம்பிக்கை வைக்க வேண்டும்.

*(திருக்குர்ஆன் 9:51)*

மேலான ஆங்கில அரசானது தனது குடிமக்கள் மீதுள்ள கருணையால் மீண்டும் பிளேக் என்னும் நோயிலிருந்து மக்களை காப்பாற்றுவதற்காக தடுப்பூசிக்கான ஏற்பாடுகளைச் செய்ததற்காகவும் மேலும் இறைவனது அடியார்களின் நலனுக்காக பல லட்சக்கணக்கான பணச் செலவை அது ஏற்றுக் கொண்டதற்காகவும் அதற்கு நாம் நன்றி செலுத்த வேண்டியதாயிருக்கிறது. உண்மையில் மகத்தான இந்தப் பணியினை நன்றியறிதலுடன் வரவேற்பது அறிவுள்ள மக்களின் கடமையாகும். தடுப்பூசியைப் பற்றி தவறான எண்ணம் கொள்பவன் பெரும் அறிவீனனும் தனக்குத் தானே பகைவனுமாவான். ஏனெனில் முன் எச்சரிக்கையுடன் செயல்படும் இந்த அரசு அபாயகரமான மருத்துவமுறைகளை கடைபிடிக்க விரும்புவதில்லை என்பதும் இப்படிப்பட்ட விஷயங்களில் எந்தத் திட்டம் உண்மையில் பயனளிக்கக் கூடியது என பல்வேறு அனுபவங்களுக்கு பிறகு நிரூபணமாகின்றதோ அதனையே எடுத்துரைக்கின்றது என்பதும் பலமுறை அனுபவங்களால் தெளிவாகியுள்ளன. உண்மையில் எந்த நலனுக்காக இந்த அரசு லட்சக்கணக்கான ரூபாய்களை செலவு செய்கின்றதோ அல்லது செலவு செய்யவிருக்கின்றதோ இதனால் அந்த அரசுக்கு ஏதாவது உள்நோக்கம் இருக்க வேண்டும் என்று சிலர் கூறுவது பகுத்தறிவுக்கும் மனிதத் தன்மைக்கும் அப்பாற்பட்டதொரு விஷயமாகும். ஆகவே தப்பெண்ணம் கொள்ளும் இம்மக்கள் நற்பேறிழந்தவர்களா யிருக்கிறார்கள்.



இதுவரை இவ்வுலகில் பயன்படுத்தப்பட்ட திட்டங்களில் இந்த மேலான அரசு பயன்படுத்துகின்ற தடுப்பூசி போடும் திட்டமே மிகச் சிறந்த திட்டமாகும் என்பதில் சிறிதளவும் சந்தேகமில்லை. மேலும் இந்தத் திட்டத்தால் பலன் உண்டானதை எந்த விதத்திலும் மறுக்க முடியாது. பௌதீக சம்பந்தமான வழிமுறைகளைக் கடைப்பிடிக்கும் எல்லா குடிமக்களும் இதன்படி செயல்பட்டு அவர்களின் உயிர் குறித்து அரசிற்கு இருந்து வரும் கவலையிலிருந்து அதனை விடுவிக்க வேண்டியது அவர்களின் முக்கிய கடமையாகும். ஆனால் எங்களுக்கு வானத்தின் தடை மட்டும் இல்லாமலிருந்தால் குடிமக்களில் எல்லாரையும் விட முதலாவதாக நாங்களே எங்களுக்குத் தடுப்பூசி போடுமாறு கூறி இருப்போம் என்பதனை நன்மை புரிந்து வரும் இந்த அரசிற்கு மிக மரியாதையுடன் தெரிவித்துக் கொள்கிறோம். வானத்தின் தடையென்னவெனில், இக்காலத்தில் மனித குலத்துக்காக கருணை பற்றிய வானத்தின் ஓர் அடையாளத்தை வெளிப்படுத்த இறைவன் நாடியுள்ளான். ஆகவே, நீரும், உமது வீட்டின் நான்கு சுவர்களுக்குள் இருப்பவரும், இறையச்சத்துடன் முழுமையாக உம்மை பின்பற்றியவாறு உமக்கு கீழ்ப்படிந்து உம்மோடு ஒன்றிவிடுகின்றவரும் ஆகிய எல்லாரும் பிளேகிலிருந்தும் காப்பாற்றப்படுவார்கள் என்று இறைவன் என்னை நோக்கி கூறியுள்ளான்.

சமுதாயங்களுக்கிடையில் அவன் வேறுபாட்டை எடுத்துக் காட்டுவதற்காக இந்த கடைசி நாட்களில் இது இறைவன் புறமிருந்து வந்த ஒரு மகத்தான அடையாளமாகும். எனினும் எவரொருவர் முழுமையாக உம்மை பின்பற்ற மாட்டாரோ அவர் உம்மைச் சார்ந்தவர் அல்லர். ஆகவே அவரைப் பற்றி நீர் கவலை கொள்ள வேண்டாம் என்றும் அவன் கூறியுள்ளான். இது இறைவனின் தீர்ப்பாகும். இக்காரணத்தால் நாம் நமக்காகவும், நமது வீட்டின் நான்கு சுவர்களுக்குள் இருக்கக் கூடிய எல்லாருக்காகவும் தடுப்பூசி போட எவ்வித அவசியமுமில்லை. ஏனெனில் இப்போது நான் விவரித்ததைப் போல் இன்றிலிருந்து சில காலங்களுக்கு முன்னர் வானங்களுக்கும் பூமிக்கும் உரிமையாளனும் எல்லா பொருள் பற்றிய ஞானமும் அதிகாரமும் உடையவனுமான இறைவன் எனக்கு உம்மையும் உமது வீட்டின் நான்கு சுவர்களுக்குள் இருக்கக் கூடிய ஒவ்வொருவரையும் - அவர் எல்லாவிதமான எதிர்ப்பு எண்ணங்களையும் விட்டு விட்டு

முழுமையான மனத்தூய்மையுடனும் கட்டுப்படுதலுடனும் பணிவுடனும் பைஅத் எனும் ஒப்பந்தம் செய்து இந்த இயக்கத்தில் நுழைபவரையும் இறைவனது கட்டளைகளுக்கும் அவனால் நியமிக்கப்பட்டவருக்கு முன் எவ்வகையிலும் தற்பெருமை, கீழ்ப்படியாமை இறுமாப்பு, அலட்சியம், பிடிவாதம், சுயநலம் இவற்றைக் கடைப்பிடிக்காதவரையும், போதனைகளுக்கு ஏற்ற செயல்களைக் கொண்டவராக இருக்கின்ற அனைவரையும் பிளேக் நோயினால் மரணிப்பதிலிருந்து நான் காப்பாற்றுவேன் என்று வஹி (இறைவெளிப்பாடு) இறக்கியுள்ளான். மேலும், பொதுவாக மக்கள் நாய்கள் போல் மரணிக்கும் அளவுக்கு பேரழிவை உண்டாக்கக் கூடிய, மேலும் துக்கத்தாலும் கவலையாலும் அவர்களை பைத்தியக்காரர் களாக்கிவிடும் அளவிலுள்ள பிளேக் நோய் காதியானில் வராது என்றும் அவன் என்னை நோக்கி கூறியுள்ளான். ஆனால் இவர்களில் எவராவது இறைவனோடு செய்து கொண்ட தங்களது உடன்படிக்கையில் முழுமையாக நிலைத்திருக்க மாட்டார்களாயின் அல்லது இவர்களைப் பற்றிய ஏதாவது மறைவான காரணம் இறைவனது அறிவில் காணப்படுமாயின் அவர்களுக்கு பிளேக் நோய் உண்டாகலாம்.

ஆனால் மற்றவர்களை விட அதிகமாக இறைவனது உதவி இந்த கூட்டத்தினர் மீது இருப்பதையும் இதன் உதாரணம் எங்கும் காணப்படாத அளவுக்கு அவன் தனது சிறந்த கருணையால் இவர்களை காப்பாற்றியிருக்கின்றான் என்பதையும் மக்கள் இறுதியில் ஆச்சரியத்துடன் ஒப்புக் கொள்வார்கள். இதைக் கண்ட சில அறிவீனர்கள் பிரமித்துப் போவார்கள். சிலர் நகைப்பார்கள், சிலர் என்னை பைத்தியக்காரன் என்பார்கள். மேலும் சிலர் வழி முறைகளை பயன்படுத்தாமல் அருளை இறக்கக் கூடிய இறைவன் இருக்கின்றானா? என நினைத்து திகைத்துப்போவார்கள். ஆம்! சந்தேகமின்றி இப்படிப்பட்ட வல்லமையுடைய இறைவன் ஒருவன் இருக்கிறான் என்பதே இதன் விடையாகும். அவன் அவ்வாறு இல்லாதிருப்பின் அவனோடு தொடர்புள்ளவர்கள் உயிர் இருந்தும் இறந்து போயிருப்பார்கள். அவன் வியப்புமிக்க சக்தியுள்ளவனா யிருக்கிறான். அவனது தூய்மையான வல்லமைகள் வியப்பளிக்கக் கூடியவை. ஒரு பக்கம் அறிவீனர்களான பகைவர்களை தன் நண்பர்கள் மீது நாய்களை போல் ஆதிக்கம் செலுத்த வைக்கின்றான். மறுபக்கம் அவர்களுக்கு (நண்பர்களுக்கு) தொண்டு செய்யுமாறு மலக்குகளுக்கு





கட்டளையிடுகிறான். அவ்வாறே உலகை அவனது கோபம் சூழ்ந்து கொள்ளும்போதும் அவனது தண்டனை கொடியோர்கள் மீது கொதித்து எழும்போதும் அவனது கண்கள் அவனது சிறப்பிற்குரிய மனிதர்களையே பாதுகாக்கின்றன. இவ்விதம் ஆகாமலிருந்தால் உண்மையாளர்களின் எல்லாப் பணிகளும் சிதறுண்டு போகும். மேலும் அவர்களுள் எவரையும் பிரித்தறிந்து கொள்ள முடியாமல் போகும். அவனது வல்லமைகள் முடிவற்றவையாகும். ஆனால் மக்களின் நம்பிக்கைக்கேற்பவே அவை வெளிப்படுகின்றன. எவர்களுக்கு திட நம்பிக்கையும், அன்பும் இறைவனைச் சார்ந்திருத்தலும் வழங்கப்பட்டுள்ளதோ, மேலும் எவர்கள் மன இச்சையின் பழக்க வழக்கங்களை விட்டும் வெளியேற்றப்பட்டுள்ளார்களோ, அவர்களுக்காகவே வழக்கத்திற்கு மாறான அற்புதங்கள் வெளிப்படுகின்றன. இறைவன் எதை நாடுகின்றானோ அதனை செய்கிறான். ஆனால் எவர்கள் இறைவனுக்காக தங்களது பழக்க வழக்கங்களை விட்டு விடுகின்றார்களோ அவர்களுக்கு இறைவன் வழக்கத்திற்கு மாற்றமான தனது வல்லமையை வெளிப்படுத்த விரும்புகின்றான். இக்காலத்தில் அவனை அறிந்தவர்களும் அவனது அற்புதமான வல்லமைகள் மீது நம்பிக்கை கொள்பவர்களும் மிகக் குறைவாகவே இருக்கிறார்கள். இதற்கு மாறாக இந்த மாபெரும் வல்லமையுள்ள இறைவன் மீது நம்பிக்கை இல்லாதவர்களே அதிகமாக இருக்கிறார்கள்.

ஆனால் அவனது குரலை ஒவ்வொரு பொருளும் கேட்கிறது. அவனுக்கு முன் எந்த ஒரு விஷயமும் இயலாததாக இல்லை. இந்த இடத்தில் நினைவில் கொள்ள வேண்டியது என்னவென்றால், பிளேக் போன்ற வியாதிகளுக்கு மருத்துவம் செய்வது பாவம் இல்லைதான். மேலும் இறைவன் மருந்தை உருவாக்காத எந்த வியாதியும் இல்லை என்று ஒரு ஹதீதில் உள்ளது. ஆனால் எந்த அடையாளத்தை இறைவன் பூமியில் நமக்காக தெளிவுடன் வெளிப்படுத்த நாடுகிறானோ அவ்வடையாளத்தை தடுப்பூசியைக் கொண்டு சந்தேகத்திற்குரியதாக ஆக்குவதை நான் பாவமாக கருதுகிறேன். மேலும் அவனது உண்மையான அடையாளம், வாக்குறுதி ஆகியவற்றின் மகத்துவத்தை இழிவுபடுத்தி தடுப்பூசியின் பக்கம் நான் திரும்ப நாடவில்லை. நான் அவ்வாறு செய்வேனாயின் இறைவன் என்னோடு செய்த வாக்குறுதி மீது நான் நம்பிக்கை

கொள்ளவில்லையென்ற பாவத்திற்கு நான் இறைவனின் பிடியில் வர நேரிடும். மேலும் நான் அவ்வாறு செய்வேனாயின் இந்த நான்கு சுவர்களுக்குள் இருக்கும் ஒவ்வொருவரையும் காப்பாற்றுவேன் என்று எனக்கு வாக்குறுதி அளித்த அவ்விறைவனுக்கு நன்றி செலுத்தாமல் தடுப்பூசி மருந்தை கண்டுபிடித்த அம்மருத்துவருக்கே நன்றி செலுத்த வேண்டியது வரும்.

நான் அகப்பார்வையுடன் கூறுகிறேன். வல்லமையுள்ள இறைவனின் வாக்குறுதிகள் உண்மையானவையாகும். மேலும் இனி வரவிருக்கும் அந்த நாட்களை வந்து சேர்ந்து விட்டதாக நான் பார்க்கிறேன். எவ்விதத்திலாவது பிளேக் நோயிலிருந்து மக்கள் காப்பாற்றப்பட வேண்டும் என்பதே நமது உயர்ந்த அரசின் உண்மையான குறிக்கோள் என்றும், இனி ஏதாவது சமயத்தில் பிளேக்கிலிருந்து இரட்சிப்புப் பெற தடுப்பூசியை விட மேலான வேறு திட்டம் காணப்படுமானால் அதனையே அது மகிழ்ச்சியுடன் ஏற்றுக் கொள்ளும் என்றும் நான் அறிவேன். ஆகவே இந்நிலையில் என்னை இறைவன் நடத்திச் சென்ற இவ்வழியானது இவ்வுயர்ந்த அரசின் குறிக்கோளுக்கு மாறானதன்று என்பது வெளிப்படையாகும். மேலும் இன்றிலிருந்து இருபது ஆண்டுகளுக்கு முன்பு இம்மாபெரும் அழிவை விளைவிக்கக் கூடிய பிளேக்கைப் பற்றிய இச்செய்தி பராஹீனே அஹ்மதிய்யா எனும் எனது நூலில் முன்னறிவிப்பாக இடம் பெற்றிருக்கிறது. மேலும் இந்த இயக்கத்திற்கு கிடைக்க இருக்கும் சிறப்பான அருள்களை பற்றிய வாக்குறுதிகளும் இடம் பெற்றிருக்கின்றன. *(பராஹீனே அஹ்மதிய்யா பக்கம் 518, 519 பார்க்கவும்.)*

இதுமட்டுமல்லாமல் இறைவனுக்கும் அவனால் அனுப்பப்பட்டவருக்கும் முன்னால் தற்பெருமை கொள்ளாமல் எனது வீட்டை சூழ்ந்திருக்கும் நல்லவர்களை நாசத்தை விளைவிக்கக் கூடிய பிளேக்கிலிருந்து காப்பாற்றி அவன் இரட்சிப்பு அளிப்பான். அத்துடன் மற்றவர்களை விட அதிகமாக இந்த இயக்கத்தின் மீது இறைவனது சிறப்பான கருணை இருந்து வரும் என்றும் இறைவனிடமிருந்து உறுதியான முன்னறிவிப்பு கிடைத்துள்ளது. இருந்தபோதிலும் ஒருவருடைய நம்பிக்கையில் பலவீனமோ, நடைமுறையில் குறைபாடோ, முன்பே விதியில் நிர்ணயிக்கப்பட்ட மரணமோ அல்லது இறைவன் அறிவில் வேறு ஏதாவது காரணமோ இருக்குமானால் அவற்றால் அரிதாக ஏதாவது சம்பவம் இந்த ஜமாஅத்தில் நிகழலாம்.





ஆகவே அரிதாக என்பது அறவே இல்லை என்ற நியதிக்குட்பட்டதாகும். எப்போதும் ஒப்பாய்வின் போது பெரும்பான்மையே கவனத்தில் கொள்ளப்படுகிறது.

பிளேக் வியாதிக்காக தடுப்பூசி போடக் கூடியவர்கள் மற்றவர்களை விட மிகக் குறைவாகவே மரணம் அடைகிறார்கள் என்பதை அரசு தனது அனுபவத்தின் மூலம் நன்கு அறிந்திருக்கிறது. ஆகவே அரிதான மரணம் தடுப்பூசியின் மதிப்பை குறைத்து விட முடியாததைப் போன்றே காதியானில் மற்றவர்களுடன் ஒப்பிட்டுப் பார்க்கும் போது மிகவும் குறைந்த அளவில் பிளேக் நோய் சம்பவங்கள் ஏற்பட்டாலோ மிக அரிதாக இந்த ஜமாஅத்திலிருந்து யாராவது இந்த நோயால் மரணமடைந்தாலோ அதனால் இந்த அடையாளத்தைப் பற்றிய மதிப்பு எவ்வகையிலும் குறைந்து விடாது. இறைவனது பரிசுத்த கூற்றிலிருந்து வெளியாகும் சொற்களைப் பின்பற்றியே இந்த முன்னறிவிப்பு எழுதப்பட்டிருக்கிறது. இறைவெளிப்பாடு வெளியான தொடக்கத்திலேயே அதைப்பற்றி நகைப்பது அறிவாளிகளின் செயல் அன்று. இது இறைவனின் கூற்றாகும்; எந்த ஒரு சோதிடனின் கூற்றுமன்று. இது ஒளியின் பார்வையிலிருந்து வெளியானதாகும். இருளில் இருந்து கொண்டு அனுமானமாய் வெளிப்படும் வெற்று வார்த்தை அல்ல. இது பிளேக்கை இறக்கியவனும் அதனை அகற்றக் கூடியவனுமாகிய இறைவனின் கூற்றாகும்.

தடுப்பூசி போடக் கூடியவர்களை விட இவர்கள் சுகமாகவும் ஆரோக்கியமாகவும் இருப்பதற்கு அற்புதமான வேலை என்ன நடந்தது? என்பதை அரசு காணும் போது சந்தேகமின்றி இந்த முன்னறிவிப்பிற்கு மதிப்பளிக்கும். உண்மையில் இருபது இருபத்திரண்டு ஆண்டுகளாகப் பிரபலம் அடைந்து வரும் இந்த முன்னறிவிப்பின்படி எதுவும் நிகழவில்லை என்றால் நான் இறைவனால் அனுப்பப்பட்டவன் அல்லன் என்பதனை நான் உண்மையாகவே கூறுகிறேன்.

நான் இறைவனால் அனுப்பப்பட்டவன் என்பதற்கு இது ஒரு அடையாளமாகும். அதாவது எனது வீட்டின் நான்கு சுவர்களுக்கிடையே இருக்கும் நல்லவர்கள் இந்த நோயினால் மரணிப்பதிலிருந்து காப்பாற்றப்படுவார்கள். மேலும் எனது இயக்கத்திலுள்ள அனைவரும் ஒப்பாய்வில் மற்றவர்களை விட அதிகமாக பிளேக்கின் தாக்குதலிலிருந்து தப்பித்துக் கொள்வார்கள். இவர்களிடம் காணப்படும் சாந்தியும் சமாதானமும் மற்ற எந்தக்

கூட்டத்திலும் இருக்காது. மிகவும் குறைவாகவும் அரிதாகவும் ஏதும் உண்டாவதைத் தவிர பிளேக்கால் அழிவை உண்டு பண்ணக் கூடிய ஆபத்து காதியானில் தோன்றாது.

ஆனால் அந்தோ பரிதாபம்! இந்த மக்கள் நேர்மையான உள்ளம் படைத்தவர்களாகவும் இறைவனுக்கு அஞ்சக் கூடியவர்களாகவு மிருந்தால் இவர்கள் அனைவரும் இந்த அழிவிலிருந்து முற்றிலும் காப்பாற்றப்பட்டிருப்பார்கள். ஏனெனில் மார்க்க வேறுபாட்டின் காரணத்தால் உலகில் எவர் மீதும் தண்டனை இறங்குவதில்லை. இதற்கான தண்டனை நியாயத் தீர்ப்பு நாளில்தான் கிடைக்கும். உலகில் கெடுதிகள், குழப்பங்கள், அக்கிரமங்கள் மற்றும் அதிகமாக இழைக்கப்படும் பாவங்களினால் மட்டுமே தண்டனை வருகிறது. வாக்களிக்கப்பட்ட மஸீஹின் காலத்தில் பிளேக் உண்டாகும் என்று திருக்குர்ஆனிலும் - ஏன் - தவ்ராத்தின் சில* நூல்களிலும் கூட இச்செய்தி இடம் பெற்றிருக்கிறது என்பதையும் நினைவில் கொள்ள வேண்டும்.

இதைத் தவிர ஹஸ்ரத் ஈசா (அலை) அவர்களும் பைபிளின் புதிய ஏற்பாட்டில் இந்த விஷயத்தைப் பற்றி குறிப்பிட்டுள்ளார்கள். ஆகவே நபிமார்களின் முன்னறிவிப்புகள் நிறைவேறாமல் போகாது. மேலும் இந்த இறை அடையாளத்தை எதிரிகள் வேறுபக்கம் சம்பந்தப்படுத்தக் கூடாது என்பதற்காக இந்தத் தெய்வீக வாக்குறுதிகளுக்கு எதிராக நாம் மனித திட்டங்களை விட்டு விலக வேண்டியது கட்டாயமாகும் என்பதையும் நினைவில் கொள்ள வேண்டும். எனினும் இதனோடு இறைவன் தனது வசனத்தின் மூலம் வேறு ஏதாவது திட்டத்தை அவனே புரிய வைத்தால் அல்லது ஏதாவது மருந்தை தெரிவித்தால் அந்தத் திட்டத்தாலோ அல்லது மருந்தாலோ அவ்வடையாளத்தில் எவ்வித பாதிப்பும் உண்டாகாது. ஏனெனில் அவை இந்த அடையாளத்தை இறக்கிய இறைவன் புறமிருந்து வந்தவையாகும். நமது ஜமாஅத்தில் அரிதாக யாராவது பிளேக்கின் காரணமாக மரணித்தால் இந்த அடையாளத்தின் மதிப்பும் உயர் நிலையும் பாதிக்கப்படும் என்ற எண்ணம் யாருக்கும் தோன்றி விடவேண்டாம்.

** வாக்களிக்கப்பட்ட மஸீஹின் காலத்தில் பிளேக் உண்டாகும் என்று பைபிளின் கீழ்க்கண்ட புத்தகத்தில் காணப்படுகிறது. சகரிய்யா 14:12 பைபிளின் புதிய ஏற்பாடு மத்தேயு 24:8 வெளிப்பாடுகள் 22:8*





ஏனெனில் எவர்கள் வாளைக் கொண்டு நூற்றுக்கணக்கான மக்களை கொன்று குவித்தார்களோ அவர்கள் வாளைக் கொண்டே கொல்லப்பட வேண்டும் என்ற முற்காலங்களில் மூஸா, யோசே ஆகியோருக்கும் இறுதியில் நமது திருநபி (ஸல்) அவர்களுக்கும் கட்டளை உண்டானது. இது நபிமார்களின் புறமிருந்து வந்த ஒரு அடையாளமாகும். இதன்பின் மாபெரும் வெற்றி கிடைத்தது. ஆனால் மிகவும் குறைந்த அளவில் குற்றவாளிகளுக்கு எதிராக உண்மையாளர்களும் அவர்களது வாளால் கொல்லப்பட்டனர்.

ஆகவே இந்த குறைந்த நஷ்டத்தால் அடையாளத்தில் சிறிதளவும் பாதிப்பு உண்டானதில்லை. இவ்வாறே அரிதாக நமது ஜமாஅத்திலும் சிலருக்கு, முன்பு குறிப்பிட்ட காரணங்களினால் பிளேக் நோய் தோன்றினால் அப்படிப்பட்ட பிளேக்கினால் இறைவனது இந்த அடையளத்திலும் எவ்வித பாதிப்பும் உண்டாகாது. (இது மாபெரும்) சிறப்புக்குரிய அடையாளமில்லையா?

நான் திரும்பத் திரும்ப கூறுகிறேன். உண்மையை தேடக் கூடிய ஒவ்வொருவருக்கும் எவ்வித சந்தேகமும் ஏற்படாதவாறு இந்த முன்னறிவிப்பை இறைவன் வெளிப்படுத்திக் காட்டுவான். இறைவன் அற்புதமான நிலையில் இந்த ஜமாஅத்தோடு தொடர்பு கொண்டுள்ளான் என்பதை அவர்கள் புரிந்து கொள்வர். மேலும் இந்த இறை அடையாளத்தின் விளைவாக, பிளேக் மூலமாக இந்த ஜமாஅத் மிகவும் வளர்ச்சி பெறும். அற்புதமான முறையில் அது முன்னேற்றம் அடையும். இந்த முன்னேற்றம் வியப்புடன் பார்க்கப்படும்.

இந்த முன்னறிவிப்பின் படி இறைவன் இந்த ஜமாஅத்திற்கும் மற்ற ஜமாஅத்துக்களுக்குமிடையில் எவ்வித வேறுபாட்டையும் காட்டாமலிருந்தால் நான் நூஸூலுல் மஸீஹ் என்ற நூலில் குறிப்பிட்டிருப்பதைப் போன்று, ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும் தோல்வியடைந்து கொண்டே செல்கின்ற எதிரிகளுக்கு என்னை பொய்யன் என்று கூறும் உரிமை உண்டு. இதுவரை அவர்கள் என்னை பொய்யன் என்று கூறியதில் இறைவனது சாபத்தையே வாங்கியுள்ளனர்.

உதாரணமாக, எனது முன்னறிவிப்பின்படி (அப்துல்லாஹ்) ஆத்தம் பதினைந்து மாதங்களுக்குள் மரணிக்கவில்லையே என்று திரும்பத் திரும்ப கூச்சல் போட்டனர். ஆனால் அவர் உண்மையின் பக்கம் திரும்பி விட்டால் பதினைந்து மாதங்களுக்குள் மரணிக்க

மாட்டார் என்று முன்னறிவிப்பு தெளிவான சொற்களில் கூறப்பட்டிருந்தது. அவ்வாறே அவர் விவாத மாநாட்டில் எழுபது பிரமுகர்களுக்கு முன் ஹஸ்ரத் ரஸூல் (ஸல்) அவர்களைத் ‘தஜ்ஜால்’ என்று கூறுவதிலிருந்து பின்வாங்கினார். அதுமட்டுமல்லாமல் அவர் பதினைந்து மாதங்கள் வரை மௌனம் அச்சம் ஆகியவற்றின் மூலமாக தனது பின்வாங்குதலை நிரூபித்துக் காட்டினார். அவர் ஹஸ்ரத் ரஸூல் (ஸல்) அவர்களை ‘தஜ்ஜால்’ என்று கூறி வந்ததே முன்னறிவிப்பின் அடிப்படையாகும். ஆகவே அவர் பின் வாங்கிக் கொண்டதன் காரணமாக அவர் அடைந்த பலன் எல்லாம் அவர் பதினைந்து மாதங்களுக்குப் பின்னர் மரணமடைந்துதான். ஆயினும் மரணமடைந்து விட்டார். இவ்வாறு நடப்பதற்குக் காரணம் இரு பிரிவினரில் எவர் தமது கொள்கையில் பொய்யராக இருப்பாரோ அவர் முதலில் மரணம் அடைவார் என்று முன்னறிவிப்பில் குறிப்பிடப்பட்டிருந்தது. இதன்படி அவர் என்னை விட முன்பாக மரணமடைந்தார்.

இவ்வாறே இறைவன் எனக்கு அறிவித்துள்ள மறைவான விஷயங்களெல்லாம் அவற்றிக்குரிய நேரங்களில் நிறைவேறின. அவை பத்தாயிரத்திற்கும் குறைந்தவை அல்ல. ஆனால் எடுத்துக்காட்டாக தற்போது அச்சாகிக் கொண்டிருக்கும் ‘நுஸூலுல் மஸீஹ்’ என்னும் நூலில் நூற்றி ஐம்பது முன்னறிவிப்புகள் சான்றுகளுடனும் சாட்சிகளுடனும் எழுதப்பட்டுள்ளன. எனது முன்னறிவிப்புகளில் நிறைவேறாமல் போனது ஏதும் இல்லை அல்லது அதன் இருபாகங்களில் ஒரு பாகம் நிறைவேறாமல் போனதாக இல்லை. ஒருவர் தமது மரணம்வரை தேடிக் கொண்டிருந்தாலும் எனது வாயிலிருந்து வந்த எந்தவொரு முன்னறிவிப்பும் நிறைவேறாமல் போனது எனக் கூற முடியாது. ஆனால் ஒருவன் வெட்கமின்றியும் அறியாமையாலும் எதை வேண்டுமென்றாலும் கூறட்டும். ஆயிரக்கணக்கான தெள்ளத் தெளிவான எனது முன்னறிவிப்புகள் மிகத் தெளிவாக நிறைவேறிவிட்டன. இதற்கு லட்சக்கணக்கான மக்கள் சாட்சிகளாக இருக்கின்றார்கள் என்பதனை வாதிட்டுக் கூறுகிறேன். இந்த ஒப்புமையை சென்று போன நபிமார்களில் தேடிப் பார்ப்போமேயானால் ஹஸ்ரத் ரஸூல் (ஸல்) அவர்களைத் தவிர வேறு எங்கும் அதற்கான உதாரணத்தை பெற முடியாது. என் பகைவர்கள் இதே வழி முறைப்படி தீர்ப்பு செய்திருந்தால் எப்போதோ அவர்களது கண்கள் திறந்திருக்கும். அவர்கள் இந்த முன்னறிவிப்புகளைப்





போன்று ஏதாவது ஒரு உதாரணத்தை உலகில் காட்ட முடியுமென்றால் அவர்களுக்காக ஒரு பெரிய சன்மானத்தை அளிக்க நான் ஆயத்தமாக இருந்தேன். முழுக்க முழுக்க தீய எண்ணத்துடன் அல்லது அறியாமையில் இன்ன முன்னறிவிப்பு நிறைவேறவில்லை என்று கூறுபவர்களின் கூற்றுகள் அசுத்தமானதும் தப்பெண்ணமும் கொண்டவை என்று கூறுவதை தவிர நம்மால் வேறு என்ன கூறமுடியும்?

ஏதாவது கூட்டமொன்றில் இதே விஷயத்தை ஆய்வுக்காக எடுத்து பேசினால் அவர்கள் தங்களது கூற்றிலிருந்து பின்வாங்க வேண்டியிருக்கும் அல்லது அவர்கள் வெட்கம் கெட்டவர்கள் என்று பிறர் அழைக்க வேண்டியிருக்கும். ஆயிரக்கணக்கான முன்னறிவிப்புகள் அதே விதத்தில் நிறைவேறி இருப்பதும் அவை நிறைவேறியதற்கு ஆயிரக்கணக்கான சாட்சியாளர்கள் உயிருடன் இருந்து வருவதும் ஒரு சிறிய விஷயமல்ல. இது வல்லமையுள்ள, கண்ணியத்திற்குரிய இறைவனை வெளிப்படுத்திக் காட்டுவதேயாகும்.

ஹஸ்ரத் எம்பெருமானார் (ஸல்) அவர்களின் காலத்தைத் தவிர வேறு எக்காலத்திலாவது, கூறப்பட்ட ஆயிரக்கணக்கான முன்னறிவிப்புகள் சூரியனின் ஒளியைப்போல் நிறைவேறியதையும் அவை நிறைவேறியதற்கு ஆயிரக்கணக்கான மக்கள் சாட்சியங்கள் அளித்ததையும் எப்போதாயினும் எவராவது கண்டிருக்கின்றாரா? எவ்வாறு இக்காலத்தில் இறைவன் அருகில் வந்து தோற்றம் அளித்துக் கொண்டிருக்கின்றானோ, நூற்றுக்கணக்கான மறைவான விஷயங்களை தனது அடியான் மீது வெளிப்படுத்திக் கொண்டிருக்கின்றானோ, இதுபோன்றே இக்காலத்தின் உதாரணத்தைக் கடந்த காலங்களில் மிகக் குறைவாகவே பெறமுடியும் என்பதனை நான் நிச்சயமாக அறிவேன். அவன் வானத்திலிருந்து இறங்குவது போல் இக்காலத்தில் அவனது முகம் வெளிப்படுவதை மக்கள் மிகச் சமீபத்தில் கண்டு கொள்வார்கள். அவன் நீண்ட காலம் வரை தன்னை மறைத்து வைத்திருந்தான். மேலும் அவன் மறுக்கப்பட்டான். ஆயினும் அவன் மௌனமாகவே இருந்தான். ஆனால் இப்போது அவன் தன்னை மறைத்துக் கொள்ளமாட்டான். அவர்களின் மூதாதையர் கண்டிராத அவனது வல்லமையின் முன்மாதிரிகளை நிச்சயம் உலகம் கண்டு கொள்ளும். இவ்வாறு நிகழ வேண்டிய காரணம் என்னவெனில்

உலகம் மிகவும் சீர்கேடு அடைந்து விட்டது. மேலும் வானங்களையும் பூமியையும் படைத்த இறைவன் மீது மக்களுக்கு நம்பிக்கை இல்லாது போய்விட்டது. வெறும் உதட்டளவில் அவனைப் பற்றி நினைவு கூரல் காணப்பட்டாலும் உள்ளம் அவனை விட்டும் விலகி விட்டது. இதனாலேயே இப்போது நான் புதிய வானத்தையும் புதிய பூமியையும் உண்டாக்கப் போகிறேன் என்று இறைவன் கூறியுள்ளான். இதன் கருத்தென்னவெனில் பூமியானது மரணித்து போய் விட்டது. அதாவது பூமியில் வாழும் மக்களின் இதயங்கள் கடினமாகிவிட்டன. அவர்கள் இறந்தவர்களைப் போல் ஆகிவிட்டனர். ஏனெனில் இறைவனது முகம் அவர்களை விட்டும் மறைந்து போய் விட்டது. சென்ற கால வானத்தின் அடையாளங்களெல்லாம் வெறும் கதைகளாக ஆகிவிட்டன. இதனால் புதிய பூமியையும் புதிய வானத்தையும் இறைவன் படைக்க எண்ணம் கொண்டான். அந்தப் புதிய வானம் புதிய பூமி என்றால் என்ன? புதிய பூமி என்பது இறைவன் தன் கரங்களால் உண்டு பண்ணிக் கொண்டிருக்கும் தூய்மையான இதயங்கள் ஆகும். அவை இறைவனால் தோன்றியவையாகும். அவற்றால் இறைவன் தோற்றம் அளிப்பான். மேலும் புதிய வானம் என்றால் இறைவனின் ஆணையின்படியே அவனது அடியார்களின் கரங்களால் வெளியாகும் அடையாளங்களாகும்.

ஆனால் அந்தோ பரிதாபம்! உலகம் இறைவனது இப்புதிய தோற்றத்தின் மீது பகைமை கொண்டு விட்டதே! இவர்களின் கரங்களில் கதைகளைத் தவிர வேறு எதுவுமே இல்லை! இவர்களின் இறைவன் இவர்களின் சொந்த கற்பனைகளே! அவர்களின் இதயங்கள் கோணலாய் இருக்கின்றன. அவர்களது தைரியங்களெல்லாம் குன்றி விட்டன! அவர்களின் கண்கள் மீது திரைகள் போடப்பட்டிருக் கின்றன. மேலும் பிற சமுதாயங்கள் உண்மையான இறைவனை இழந்து விட்டன. மனித குழந்தைகளை தெய்வமாக்கிவிட்டவர்களைக் குறித்து நாம் என்ன கூறுவது?

முஸ்லிம்களின் நிலையைப் பாருங்கள். இவர்கள் இறைவனை விட்டும் எந்த அளவுக்கு தூரம் சென்று விட்டனர்! உண்மைக்கு பெரும் பகைவர்கள் ஆகிவிட்டனர். இவர்கள் நேர்வழிக்கு உயிர் பகைவரைப் போன்று எதிரிகளாக இருக்கின்றார்கள். உதாரணமாக, இஸ்லாத்திற்காக வாதம் புரிந்து வந்த 'நத்துவத்துல் உலமா' (என்னும் ஆலிம்களின் பேரவை) அல்லது இஸ்லாத்தின் பெயரால் முஸ்லிம்களிடமிருந்து





பொருள் திரட்டி வரும் 'அஞ்சுமனே ஹிமாயத்துல் இஸ்லாம் லாஹூர்' என்னும் பேரவை ஆகியவை இஸ்லாத்தின் நன்மையை நாடக் கூடியவையா? இவர்கள் 'ஸிராத்தல் முஸ்தக்கீம்' என்னும் நேரான பாதைக்கு உதவி செய்கிறார்களா? இஸ்லாம் எப்படிப்பட்ட சோதனைகளால் நசுக்கப்பட்டிருக்கிறதென்றும் அதனை மீண்டும் புதுப்பிப்பதற்கு இறைவனது நடைமுறை என்ன? என்பதைக் குறித்தும் அவர்களுக்கு ஞாபகம் உண்டா? நான் தோன்றியிராவிட்டால் இஸ்லாத்தை பாதுகாப்பதாக கூறி வரும் இவர்களின் வாதம் ஓரளவுக்கு ஏற்றுக் கொள்ளப்படுவதற்கு தகுதியுள்ளதாக இருந்திருக்கும் என்பதை உண்மையாகவே கூறுகிறேன். ஆனால் இஸ்லாத்திற்கு உதவி புரிந்து வருவதாக வாதம் செய்த இவர்கள் எப்போது வானத்திலிருந்து நட்சத்திரம் வெளியானதோ அப்போது எல்லாரையும் விட முதலாவதாக இவர்களே நிராகரித்தனர் என்ற இறைவனது குற்றச்சாட்டிற்கு இப்போது உட்பட்டவர்களாயிருக்கிறார்கள். என்னைக் குறித்த நேரத்தில் அனுப்பிய அந்த இறைவனுக்கு இப்போது அவர்கள் என்ன பதில் கூறுவார்கள்? ஆனால் இவர்களுக்கு இதனைப் பற்றி எவ்வித கவலையுமில்லை.

சூரியன் நடுப்பகலை நெருங்கிவிட்டது. ஆனால் இப்போதும் அவர்களுக்கு இரவாகவே இருக்கிறது. இறைவனது நீருற்று சுரக்கத் தொடங்கி விட்டது. ஆனால் அவர்கள் இன்னும் பாலைவனத்தில் கண்ணீர் வடித்துக் கொண்டிருக்கின்றனர். அவனது ஆன்மீக ஞானங்களின் ஆறு ஒன்று ஓடிக் கொண்டிருக்கின்றது. ஆனால் அவர்கள் ஒன்றுமே அறியாதவர்களாயிருக்கின்றனர். அவனது அடையாளங்கள் வெளியாகிக் கொண்டிருக்கின்றன. ஆனால் இவர்கள் முற்றிலும் கவனமற்றவராய் இருக்கின்றனர். கவனமற்றவராய் இருப்பது மட்டுமின்றி இறைவனது இயக்கத்துடன் பகைமை பாராட்டுகின்றனர். ஆகவே இவர்களது கரங்களால் நடைபெற்று வரும் 'ஹிமாயத்தே இஸ்லாம்' (இஸ்லாத்திற்கு உதவிபுரிவது) 'தர்வீஜே இஸ்லாம்' (இஸ்லாத்தை நடைமுறைபடுத்துவது) தஃலீமே இஸ்லாம் (இஸ்லாத்தை போதிப்பது) என்பது இதுதானா ? ஆரம்பத்திலிருந்தே எல்லா நபிமார்களும் சாட்சியம் அளித்து வந்திருக்கும் இறைவனது உண்மையான நாட்டத்தை இவர்கள் தங்களின் புறக்கணிப்பால் தடை செய்து விடுவார்களா? சாத்தியமில்லை. மாறாக, நிச்சயமாக நானும் எனது தூதரும் வெற்றி பெற்றே தீருவோம் (திருக்குர்ஆன் 58:22) என்ற இறைவனது இந்த

முன்னறிவிப்பு விரைவில் உண்மையாகப் போகிறது.

இன்றிலிருந்து பத்து ஆண்டுகளுக்கு முன்னர் இறைவன் தனது அடியானின் உண்மைக்குச் சான்றாக ரமலான் மாதத்தில் சூரிய கிரகணத்தையும் சந்திர கிரகணத்தையும் ஏற்படுத்தினான். இரவின் பிரகாசத்தையும் பகலின் பிரகாசத்தையும் எனக்கு சாட்சிகளாக அமைத்து இரு அடையாள்ஙகளை வெளிப்படுத்தினான். அவ்வாறே அவன் நபிமார்களின் முன்னறிவிப்பிற்கேற்ப பூமியிலும் இரு அடையாளங்களை வெளிப்படுத்தினான். அவற்றில் ஓர் அடையாளத்தை நீங்கள் திருக்குர்ஆனில் படிக்கின்றீர்கள். அதாவது:

“வ இதல் இஷாரு உத்திலத்.” (திருக்குர்ஆன் 81: 5)

பொருள்: பத்து மாத கருக்கொண்ட ஒட்டகங்கள் கைவிடப்படும்.

மேலும் ஹதீதிலும் படிக்கின்றீர்கள்.

“வலயுத்ர கன்னல் கிலாஸு ஃபலா யுஸ்ஆ அலைஹா” பொருள்: ஒட்டகங்கள் கைவிடப்படும்; அவற்றின் மீது சவாரி செய்யப்படமாட்டாது. ***(சஹீஹ் முஸ்லிம்)***

இது நிறைவேறும் பொருட்டு மக்கத்து ஹஜாஸ் பூமியில் அதாவது, மக்கா மதீனா நகரங்களில் தொடர் வண்டியும் ஆயத்தமாகிக் கொண்டிருக்கிறது.

## இரண்டாவது அடையாளம் பிளேக் நோயாகும்

இறைவன் கூறுவதாவது,

“வ இம்மின் கர்யத்தின் இல்லா நஹ்னு முஹ்லிகூஹா கப்ல யவ்மில் கியாமத்தி அவ் முஅத்ஸி பூஹா அதாபன் ஷதீதா.” ***(திருக்குர்ஆன் 17:59)***

இறுதி நாளுக்கு முன்னர் நாம் அழித்து விடாத அல்லது கடும் தண்டனை அளிக்காத எந்த ஊரும் (இப்பூமியின் மீது) இருக்காது என்பது இதன் பொருளாகும்.

ஆகவே பூமியும் வானமும் சாட்சியாக இருக்கும் பொருட்டு இறைவன் நாட்டில் தொடர் வண்டியையும் ஓட வைத்தான்; பிளேக்கையும் அனுப்பியுள்ளான். ஆகவே இறைவனோடு போரிடாதீர்கள். இறைவனோடு போரிடுவது அறிவீனமாகும். இதற்கு





முன்னர் இறைவன் ஆதமை கலீஃபாவாக ஆக்க விரும்பியபோது மலக்குகள் தடை செய்தார்கள். ஆனால் இறைவன் அவர்களின் கூற்றால் நின்று விட்டானா என்ன? இப்போது இறைவன் இரண்டாவது ஆதாமைப் படைக்கும்போது ‘அரத்து அன் அஸ்தஹ்லிஃப பஹலக்து ஆதம’ எனக் கூறினான். அதாவது நான் கலீபாவை படைக்க நாடினேன். ஆகவே நான் இந்த ஆதமை படைத்தேன். இப்போது சொல்லுங்கள்: இறைவனது விருப்பத்தை உங்களால் தடை செய்ய முடியுமா?

எனவே நீங்கள் யூகங்கள் எனும் வெறும் குப்பைக் கூளங்களை ஏன் வெளிப்படுத்துகிறீர்கள்? உறுதியான வழியை ஏன் மேற்கொள்வதில்லை? நீங்கள் சோதனையில் வீழ்ந்து விடாதீர்கள். இறைவனது நாட்டத்தை தடை செய்யக் கூடியவன் எவனுமில்லை என்பதனை நிச்சயமாக நினைவில் வையுங்கள். இவ்விதமாக சண்டை செய்வது தக்வா என்னும் இறையச்சத்திற்குரிய வழிமுறை அல்ல. ஆயினும் உங்களுக்குச் சந்தேகம் இருக்குமானால் இந்த முறைப்படி நீங்கள் செயல்படலாம்.

அதாவது, எனது கூற்றுப்படி செயல்படக் கூடியவர்களில் ஒரு கூட்டத்தினரை பிளேக்கிலிருந்து இரட்சிப்புப் பெறுவதற்கு நான் இறைவனிடமிருந்து இல்ஹாம் மூலம் நற்செய்தி பெற்று அதனை அச்சிட்டு விநியோகித்திருப்பதைப் போன்று உங்களது சமுதாயத்தினரைப் பற்றிய நலன்கள் உங்களது இதயங்களில் இருக்கிறதென்றால் நீங்களும் உங்களது மதத்தைச் சார்ந்தவர்கள் பிளேக்கிலிருந்து காப்பாற்றப்படுவார்கள் என்று இறைவனிடமிருந்து நற்செய்தியைப் பெறுங்கள். பின்னர் இறைவன் உங்களோடு இருக்கிறான் என்று மக்கள் அறிந்து கொள்ளும் பொருட்டு அந்த நற்செய்தியை என்னைப் போன்று அச்சிட்டுப் பிரசுரங்கள் மூலம் வெளியிடுங்கள்.

மேலும் கிறிஸ்தவர்களுக்கும் இந்த சந்தர்ப்பம் மிகவும் நல்ல ஒருவாய்ப்பை அளிக்கக் கூடியதாயிருக்கின்றது. இரட்சிப்பானது மஸீஹுடன் சம்பந்தப்பட்டதாகும் என்று எப்போதும் அவர்கள் கூறிவருகிறபடியால் இந்த சோதனைக்குரிய நாட்களில் பிளேக்கிலிருந்து கிறிஸ்தவர்களுக்கு இரட்சிப்பு கிடைக்கச் செய்வது அவர்களது கடமையாகும். இந்த எல்லா கூட்டத்தார்களிலிருந்து எவருடைய பிரார்த்தனை அதிகமாக கேட்கப்பட்டதோ அதுவே ஏற்றுக் கொள்ளப்பட்டதாகும். இப்போது பூமியில் வீணாக வாக்குவாதம்

செய்யாமல் பிளேக்கிலிருந்து இரட்சிப்புப் பெறவும் அவர்களின் உண்மை வெளியாகவும் தாங்கள் அதிகமாக அங்கீகரிக்கப்பட்டதை வெளிப்படுத்தவும் இறைவன் அனைவருக்கும் இந்த சந்தர்ப்பத்தை அளித்துள்ளான். குறிப்பாக மர்யமின் குமாரராகிய மஸீஹையே இவ்வுலகிற்கும் மறுமைக்கும் மீட்பாளராக ஏற்று இருக்கும் கிறிஸ்தவ பாதிரிகள், மர்யமின் குமாரர் இவ்வுலகிற்கும் மறுமைக்கும் உரிமையானவர் என்று இதயப் பூர்வமாக நம்புகிறார்களென்றால் இவர்களது பாவத்தின் சுமையை அவர் ஏற்று கொண்டதினால் உண்டான இரட்சிப்பின் முன்மாதிரியை இப்போது கண்டு கொள்வது கிறிஸ்தவர்களின் உரிமையாகும்.

இவ்வாறு இது நம் உயர்வான அரசாங்கத்திற்கும் மிக எளிதாகலாம். அதாவது தத்தமது மதங்களின் உண்மையின் மீது நம்பிக்கையை வைத்து வரும் இந்தியாவில் காணப்படும் பலவிதமான பிரிவினர்களும் அவர்கள் தத்தம் பிரிவினரை விடுவிப்பதற்காகவும் பிளேக்கிலிருந்து இரட்சிப்பு அளிப்பதற்காகவும் ஆங்கிலேய அரசு செய்ய வேண்டிய ஏற்பாடு என்னவெனில், நீங்கள் நம்பிக்கை வைத்துவரும் உங்களுடைய இறைவனிடம் அல்லது இறைவனுக்குப் பதிலாக வேறு எவரையாவது தங்களது தெய்வமாக நம்பி இருப்பவரிடம் துன்பத்திற்குள்ளாயிருப்பவர்களுக்காக பரிந்துரை செய்து அவரிடமிருந்து உறுதியான வாக்குறுதி பெற்று நாம் இந்தப் பிரசுரத்தை வெளியிட்டதைப் போல் நீங்களும் பிரசுரங்களை வெளியிடுங்கள். இவ்வாறு செய்வதில் முற்றிலும் மக்களின் நலன்களும் தம் மதத்தின் உண்மை ஆதாரமும் காணப்படுவதோடு மட்டுமல்லாமல் அரசிற்கும் இது உதவியாக இருக்கும். ஏனெனில் அரசும் தனது குடிமக்கள் பிளேக்கின் அழிவிலிருந்து தப்பித்துக் கொள்ள வேண்டும் என்பதைத் தவிர அது வேறு என்ன விரும்புகிறது? எவ்விதத்திலாவது குடிமக்கள் இந்த அழிவிலிருந்து தப்பித்துக் கொள்ள வேண்டும் என்பதே அதன் விருப்பமாகும். இறுதியாக நினைவில் கொள்ளுங்கள். நாம் இந்த பிரசுரத்தில் இந்தியாவிலும் பஞ்சாபின் பல்வேறு பகுதிகளிலும் பரவியிருக்கும் நமது ஜமாஅத் தடுப்பூசி போட்டுக் கொள்வதை நாம் தடை செய்யவில்லை. எவர்களை பற்றி அரசின் கட்டாயமான கட்டளை காணப்படுமோ அவர்கள் அவசியமாக தடுப்பூசி போட்டுக் கொள்ள வேண்டும். மேலும் அரசின் ஆணைக்கும் கீழ்ப்படிய வேண்டும். மேலும் தங்களின் விருப்பப்படி விடப்பட்டவர்களும் அவர்களுக்குக் கொடுக்கப்பட்ட





இப்போதனையின் மீது முழுமையாக நிலைத்திருக்க முடியாவிடில் அவர்களும் தாம் தடுமாற்றம் அடையாமல் இருப்பதற்காகவும் தமது மோசமான நிலையின் காரணத்தால் இறைவனது வாக்குறுதியைப் பற்றி மக்களை ஏமாற்றாமல் இருப்பதற்காகவும் தடுப்பூசி போடுவதே பொருத்தமானதாகும்.

எத்தகைய போதனையை முழுமையாக பின்பற்றினால் பிளேக்கின் தாக்குதலிலிருந்து நம்மை காப்பாற்ற முடியும் என்ற கேள்விக்கு எமது விடையை சுருக்கமாக கீழே குறிப்பிடுகிறேன்.

## போதனை

மன உறுதியுடன் பைஅத் என்னும் உடன்படிக்கையின்படி முழுமையாகச் செயல்படாமல் வெறும் நாவால் மாத்திரம் பைஅத்தை அங்கீகரிப்பதால் எவ்வித பலனும் உண்டாகப் போவதில்லை என்பதை அறிவீர்களாக. ஆகவே எவர் எனது போதனையின்படி முழுமையாகச் செயல்படுகிறாரோ அவர் இறைவனால் வாக்குறுதியளிக்கப்பட்ட எனது இல்லத்தில் நுழைந்து விடுகிறார். அவரைப் பற்றியே இறைவனது வார்த்தையில் 'இன்னீ உஹாஃபி ழு குல்ல மன்ஃபித்தார்' என்ற வாக்குறுதியை அளித்துள்ளான். அதாவது: உமது வீட்டின் நான்கு சுவர்களுக்குள் இருக்கும் ஒவ்வொருவரையும் நான் காப்பாற்றுவேன். இந்த இடத்தில் மண்ணாலும் கல்லாலும் கட்டப்பட்ட எனது வீட்டில் குடியிருக்கும் மக்கள் மட்டுமே காப்பாற்றப்படுவார்கள் என்று யாரும் நினைக்க வேண்டாம். மேலும் என்னை முழுமையாக பின்பற்றுவதின் மூலம் எனது ஆன்மீக வீட்டில் நுழைபவர்களும் காப்பாற்றப் படுவார்கள்.

பின்பற்றுவதற்கு ஞாபகம் வைக்க வேண்டிய விஷயம் என்னவெனில் வல்லமையுள்ளவனும் தானும் நிலைத்து மற்றவர்களையும் நிலைத்திருக்கச் செய்பவனும் எல்லாவற்றையும் படைத்த இறைவன் ஒருவன் அவர்களுக்கு இருக்கிறான் என்பதனை உறுதியாக நம்ப வேண்டும். அவ்விறைவன் தனது பண்புகளில் ஆதி முதல் எல்லா காலங்களிலும் எவ்வித மாற்றமுமில்லாதவனாய் இருக்கிறான். அவன் யாருடைய மகனுமில்லை. அவனுக்கு எந்த மகனுமில்லை. அவன் துக்கத்தை அனுபவிப்பதிலிருந்தும் சிலுவையில் அறையப்படுவதிலிருந்தும் மரணிப்பதிலிருந்தும் தூய்மையானவனாவான். அவன் எப்படிப்பட்டவனென்றால் அவன்

தூரத்தில் இருந்த போதிலும் மிக அருகிலேயே இருக்கிறான். அவன் அருகில் உள்ளவனாயிருந்தும் தூரத்திலேயே இருக்கிறான். அவன் ஏகனாய் இருந்த போதிலும் அவனது 'தஜல்லிய்யாத்' எனப்படும் தோற்றங்கள் வெவ்வேறானவையாயிருக்கின்றன. மனிதனிடமிருந்து ஒரு புதுவிதமான மாற்றம் வெளியாகும் போது அவனுக்காக அவன் ஒரு புதிய இறைவனாகிவிடுகிறான். மேலும் புதிய தோற்றத்துடன் அவனோடு நடந்து கொள்கிறான். ஒருவன் எந்த அளவில் தன்னிடத்தில் ஒரு மாற்றத்தை மேற்கொள்வானோ அதனை கவனத்திற்கொண்டே இறைவனிடத்திலும் அவன் ஒரு மாற்றத்தைக் காண்கிறான். ஆனால் இறைவனிடத்தில் ஒரு மாற்றம் உண்டாகிவிடுகிறது என்பது இதன் பொருள் அல்ல. ஏனெனில் அவன் ஆதியிலிருந்தே எவ்வித மாற்றமுமில்லாதவனும் முழுமைத் தன்மை கொண்டவனுமாக இருக்கிறான். ஆயினும் மனிதனிடம் மாற்றம் உண்டாகும்போது அந்த மாற்றம் நன்மையின் பக்கம் உருவானால் அப்போது இறைவனும் ஒரு புதிய தோற்றத்துடன் அவனிடம் வெளிப்படுகிறான். மேலும் மனிதன் நன்மையின் பக்கம் முன்னேறும் ஒவ்வொரு நிலையிலும் இறைவனது சக்தி வாய்ந்த 'தஜல்லி' எனப்படும் தோற்றமும் ஒரு மேலான முன்னேற்றத்துடன் வெளிப்படுகிறது.

வழக்கத்திற்கு மாற்றமான மாறுதல் வெளிப்படும் இடத்திலேயே அவன் அந்த வழக்கத்திற்கு மாற்றமான ஆற்றலின் தோற்றத்தைக் காட்டுகிறான். இதுவே அற்புதங்களுக்கும் அடையாளங்களுக்குமுள்ள அடிப்படையாகும். இத்தகைய இறைவனே நமது உடன்படிக்கையில் கூறப்படுகின்ற இறைவனாவான். இந்த இறைவன் மீது நம்பிக்கை கொள்ளுங்கள். நீங்கள் உங்கள் உயிரைவிட உங்கள் உலக சுகபோகங்களை விட மேலும் அதன் எல்லாவித தொடர்புகளையும் விட மிக மேலான இறைவனுக்கே முன்னுரிமை வழங்குங்கள். அவனது வழியில் உண்மையையும், நன்றியுணர்வையும் தைரியத்துடன் செயல் முறையில் காட்டுங்கள். உலகமானது தனது பொருட்களை விட தனது இன பந்தங்களை விட அவனுக்கு முக்கியத்துவம் கொடுப்பதில்லை. ஆனால் நீங்கள் அவனுக்கே முக்கியத்துவம் கொடுங்கள். இவ்வாறு நீங்கள் செய்வீர்களேயானால் வானத்தில் அவனது ஜமாஅத்தில் சேர்த்துக் கொள்ளப்படுவீர்கள். அருட் கொடையின் அடையாளத்தை காண்பிப்பது முற்காலந்தொட்டே இறைவனது வழக்கமாக இருந்து





வருகிறது. ஆயினும் உங்களுக்கும் அவனுக்குமிடையில் எவ்வித இடைவெளியுமில்லாதிருந்தால் மட்டுமே இறைவனின் அவ்வழக்கத்தில் நீங்களும் பங்கு பெற பெறமுடியும். அதனால் உங்களது விருப்பம் அவனது விருப்பமாகவும் உங்களது ஆசை அவனது ஆசையாகவும் இருக்க வேண்டும். எல்லாம் இறைவனது விருப்பப்படியே நடக்கும் பொருட்டு வெற்றியிலும் தோல்வியிலும் ஒவ்வொரு சமயத்திலும் உங்களது தலை இறைவன் முன்னிலையில் பணிந்துகொண்டே இருக்கவேண்டும். நீங்கள் இவ்வாறு நடப்பீர்களேயானால் சில காலமாக தனது முகத்தை மறைத்து வந்த அவ்விறைவன் உங்களிடம் வெளிப்படுவான். இதன்படி செயலாற்றக்கூடியவரும் அவனது திருப்தியை விரும்பக் கூடிய 'கழா-வ-கத்ர்' என்னும் அவனது தீர்ப்பின் மீது கோபம் கொள்ளாதவரும் ஆகிய எவரேனும் உங்களில் இருக்கின்றாரா? எனவே நீங்கள் துன்பங்களை சோதனைகளை காணும் போதெல்லாம் உங்கள் பாதங்களை மேலும் மேலும் முன்னே எடுத்து வையுங்கள். இதுவே உங்களது முன்னேற்றத்திற்குரிய வழியாகும். அவனது தவ்ஹீத் என்னும் ஏக இறைகொள்கையை முழு உலகிலும் பரப்புவதற்கு உங்களது அனைத்து சக்தியைக் கொண்டும் முயலுங்கள். அவனது அடியார்கள் மீது கருணை காட்டுங்கள்.

மேலும் நாவாலோ கைகளாலோ வேறு எவ்வகையாலோ அவர்கள் மீது அநியாயம் செய்யாதீர்கள். அவனது படைப்பினங்களின் நலனுக்காக முயன்று கொண்டே இருங்கள். உங்களின் கீழ் இருக்கக் கூடியவராக இருந்தாலும் அவர் மீது கர்வம் காட்டாதீர்கள். ஒருவர் உங்களை திட்டினாலும் நீங்கள் எவரையும் திட்டாதீர்கள். இறைவனால் ஏற்றுக் கொள்ளப்படும் பொருட்டு நீங்கள் எளிமை, சகிப்புத் தன்மை, நல்லெண்ணம் ஆகியவற்றைக் கைக் கொண்டு படைப்பினங்களுடன் அனுதாபத்துடன் நடந்து கொள்ளுங்கள்.

சகிப்புத்தன்மையை வெளிப்படுத்துபவர்கள் பலர் இருக்கிறார்கள்; ஆனால் அவர்கள் உள்ளத்தால் ஓநாய்களாக இருக்கிறார்கள். புறத்தில் தூய்மையாளராக பலர் காணப்படுகிறார்கள்; ஆயினும் அவர்கள் அகத்தில் பாம்புகளாக இருக்கிறார்கள். ஆகவே நீங்கள் புறத்திலும் அகத்திலும் ஒன்றாகாதவரை இறைவனிடத்தில் ஒருபோதும் ஏற்றுக் கொள்ளப்படமாட்டீர்கள். பெரியோர்களாக இருந்து சிறியவர்கள் மீது கருணை காட்டுங்கள். அவர்களை அற்பமாக

கருதாதீர்கள். நீங்கள் அறிவாளியாக இருந்து அறிவீனர்களுக்கு அறிவுரை கூறுங்கள். தற்பெருமையால் அவர்களை அவமானப்படுத்தாதீர்கள். நீங்கள் செல்வந்தர்களாக இருந்து ஏழை எளியவர்களுக்கு உதவி புரியுங்கள்; தன்னலத்தால் அவர்கள் மீது அகங்காரம் கொள்ளாதீர்கள். நாசத்தை விளைவிக்கக் கூடிய வழிகளைக் கண்டு பயப்படுங்கள். இறைவனுக்கு எப்போதும் அஞ்சிக் கொண்டிருங்கள். நீங்கள் தக்வா எனும் இறையச்சத்தின்படி செயல்படுங்கள். படைப்பினங்களை ஒருபோதும் வணங்காதீர்கள். உங்கள் எஜமானாகிய இறைவன் பக்கமே உங்களை தொடர்பு படுத்திக் கொள்ளுங்கள். உலக இச்சைகளை விட்டு நீங்கள் ஒதுங்கிவிடுங்கள். நீங்கள் அவனுக்காகவே ஆகிவிடுங்கள். மேலும் நீங்கள் அவனுக்காவே உயிர் வாழுங்கள். அவ்விறைவனுக்காகவே எல்லாவிதமான அசுத்தங்களையும் பாவங்களையும் வெறுத்து விடுங்கள். ஏனெனில் அவன் பரிசுத்தமானவனாயிருக்கின்றான். நீங்கள் தக்வா எனும் இறையச்சத்துடன் இரவைக் கழித்ததாக ஒவ்வொரு காலைப்பொழுதும் உங்களுக்காக சாட்சி கூற வேண்டும். மேலும் நீங்கள் பகற் பொழுதையெல்லாம் இறையச்சத்துடன் கழித்ததாக ஒவ்வொரு மாலைப் பொழுதும் உங்களுக்காக சாட்சி கூற வேண்டும்.

உலகத்தின் சாபங்களுக்காக நீங்கள் பயப்படவேண்டாம். ஏனெனில் அவை புகை மண்டலம் மறைவதைப் போல் பார்த்துக் கொண்டிருக்கும்போதே மறைந்து விடும். மேலும் அவை பகலை இரவாக்க முடியாது. இதற்கு மாறாக வானத்திலிருந்து இறங்கக் கூடிய சாபத்திற்கே நீங்கள் அஞ்சிக் கொண்டிருங்கள். ஏனெனில் இந்த சாபம் எவர் மீது விழுமோ அவரை அது இம்மை மறுமை ஆகிய இரு உலகிலும் நாசமாக்கிவிடும்.

நீங்கள் வஞ்சக எண்ணத்துடன் உங்களை காப்பாற்றிக் கொள்ள முடியாது. ஏனெனில் உங்களை படைத்த அந்த இறைவனின் பார்வையோ மனிதனுள் ஊடுருவிச் செல்லக் கூடியதாயிருக்கிறது. ஆகவே இத்தகைய இறைவனை உங்களால் ஏமாற்ற முடியுமா? ஆகவே நீங்கள் நேர்மையாளர்களாகி விடுங்கள். தூயவர்களாகிவிடுங்கள். புனிதமானவர்களாகிவிடுங்கள். உறுதியானவர்களாகி விடுங்கள். உங்களிடையே மிகச் சிறிய அளவில் இருள் காணப்பட்டாலும் அது உங்களின் முழு ஒளியையும் அணைத்து விடும். எந்நிலையிலும் எவ்வகையிலும் உங்களிடம் அகங்காரமோ வெளி வேஷமோ





சுயநலமோ சோம்பலோ காணப்பட்டாலும் நீங்கள் சிறிதும் ஏற்றுக் கொள்ளப்படுவதற்குத் தகுதி அற்றவர்களாகி விடுவீர்கள். நீங்கள் சில விஷயங்களை மட்டும் கடைபிடித்துக் கொண்டு நாம் செய்ய வேண்டியவையெல்லாம் செய்து முடித்து விட்டோம் என நினைத்து நீங்கள் உங்களையே ஏமாற்றிக் கொள்ளாதீர்கள். ஏனெனில் உங்களிடம் முழுமையான ஒரு புரட்சி உண்டாக வேண்டும் என இறைவன் நாடுகிறான். மேலும் அவன் உங்களிடமிருந்து ஒருவித மரணத்தை விரும்புகிறான். அதன் பின் அவன் உங்களை உயிர்ப்பிப்பான். நீங்கள் ஒருவருக்கொருவர் உடனடியாக சமாதானத்தை ஏற்படுத்திக் கொள்ளுங்கள். உங்களது சகோதரர்களின் குற்றங்களை மன்னியுங்கள். தனது சகோதரனுடன் சமாதானத்தை விரும்பாதவன் தீயவனாக இருக்கிறான். அவன் துண்டிக்கப்படுவான். ஏனெனில் அவன் வேற்றுமையை உண்டாக்குகிறான்.

நீங்கள் எல்லாவிதமான மன இச்சைகளை விட்டு விடுங்கள். நீங்கள் ஒருவருக்கொருவர் வெறுப்பை விட்டு விடுங்கள். நீங்கள் உண்மையாளர்களாக இருந்து கொண்டு பொய்யர்களைப்போல் பணிவுடன் நடந்து கொள்ளுங்கள். இதனால் நீங்கள் மன்னிக்கப்படுவீர்கள். மன இச்சை அதிகரித்துக் கொண்டு செல்வதை சற்றும் அனுமதியாதீர்கள்.

ஏனெனில் எந்த வாசல் வழியாக நீங்கள் அழைக்கப்பட்டிருக் கின்றீர்களோ அவ்வாசல் வழியாக மன இச்சை கொண்ட மனிதரால் ஒருபோதும் நுழைய முடியாது. இறைவனின் வாயிலிருந்து வெளிவந்து, நான் விளக்கியிருப்பவையாகிய இந்த விஷயங்களை ஏற்றுக் கொள்ளாதவன் எவ்வளவு பேறிழந்தவனாக இருக்கிறான்! வானத்தில் உங்களோடு இறைவன் திருப்தி அடைய வேண்டுமென்று நீங்கள் விரும்பினால் உங்களில் ஒருவருக்கொருவர் ஒரே வயிற்றிலிருந்து பிறந்த இரு சகோதரர்களைப் போல் ஆகிவிடுங்கள். உங்களிடையே எவன் தனது சகோதரரின் குற்றத்தை அதிகமாக மன்னிப்பாரோ அவரே பெரும் கண்ணியத்திற்குரியவராவார். இதற்கு மாறாக மன்னிக்காமல் பிடிவாதத்தில் ஆழ்ந்திருப்பவன் பாக்கியமிழந்தவனாயிருக்கின்றான். ஆகவே அவனுக்கு என்னோடு எவ்வித தொடர்பும் இல்லை. இறைவன் தூய்மையானவனாகவும் தன்மானம் மிக்கவனுமாய் இருப்பதால் அவனது சாபத்திற்கு அதிகமாக அஞ்சிக் கொண்டிருங்கள்.

தீயவன் இறைவனுடைய நெருக்கத்தைப் பெற முடியாது. ஆணவம் கொண்டவன் நெருக்கத்தைப் பெற முடியாது. அநீதி இழைப்பவன் நெருக்கத்தைப் பெற முடியாது. நம்பிக்கை துரோகி அவனது நெருக்கத்தைப் பெற முடியாது. அவனுடைய பெயருக்கு களங்கம் ஏற்படுத்த முயல்கின்ற விஷயத்தில் தன்மான உணர்வை வெளிப்படுத்தாதவர் அவனது நெருக்கத்தை பெறமுடியாது. நாய்களைப் போன்றும் எறும்புகளைப் போன்றும் கழுகுகளைப் போன்றும் உலகத்தின் மீது விழுகின்றவர்கள் உலக சுகபோகங்களில் மூழ்கியிருப்பவர்கள் அவனது நெருக்கத்தை பெற முடியாது. பரிசுத்தமற்ற ஒவ்வொரு கண்ணும் அவனை விட்டும் விலகியிருக்கிறது. தூய்மையற்ற ஒவ்வொரு இதயமும் அவனை அறிவதில்லை. எவர் அவனுக்காக நெருப்பில் விழுவாரோ அவர் அந்நெருப்பிலிருந்து காப்பாற்றப்படுவார். எவர் அவனுக்காக கண்ணீர் வடிப்பாரோ அவர் பின்னர் மகிழ்ச்சியடைவார். எவர் அவனுக்காக உலகத்தை இழக்கத் துணிவாரோ அவ்வுலகம் அவருக்குக் கிடைக்கும். நீங்கள் உங்கள் உண்மையான உள்ளத்துடனும் முழு நம்பிக்கையுடனும் தீவிரமான முயற்சியுடனும் இறைவனுக்கு நண்பர்களாக ஆகிவிடுங்கள்; அப்போது அவனும் உங்களுடைய நண்பனாக ஆகிவிடுவான். வானத்தில் உங்கள் மீது கருணை உண்டாகும் பொருட்டு நீங்கள் உங்களின் கீழ் இருப்பவர்கள் மீதும் உங்களது மனைவியர் மீதும் உங்களது ஏழை சகோதரர்கள் மீதும் கருணை காட்டுங்கள். உண்மையாக நீங்கள் அவனுக்காகவே ஆகிவிடுங்கள். அப்போது அவனும் உங்களுக்காகவே ஆகிவிடுவான்.

இவ்வுலகமானது ஆயிரக்கணக்கான ஆபத்துக்கள் சோதனைகளால் நிரம்பிய இடமாக இருக்கிறது. அவற்றில் ஒன்று பிளேக் நோயும் ஆகும். ஆகவே இறைவன் இந்த ஆபத்துக்களை உங்களிலிருந்து தூரமாக்கும் பொருட்டு அவனோடு உண்மையான உள்ளத்துடன் உறவு வைக்க முயலுங்கள். வானத்திலிருந்து கட்டளை பிறப்பிக்காதவரை எவ்வித ஆபத்தும் பூமியில் உண்டாவதில்லை. மேலும் வானத்திலிருந்து கருணை இறங்காதவரை எந்த ஒரு அபாயமும் நீங்குவதில்லை. ஆகவே நீங்கள் கிளையை பிடிப்பதற்குப் பதிலாக வேரை பற்றிப் பிடிப்பதே அறிவுடைமையாகும். மருந்தையும் இதர வழி முறைகளையும் பயன்படுத்தவதற்கு நீங்கள் தடை செய்யப்படவில்லை. ஆனால் அவற்றின் மீது முழு நம்பிக்கை





வைப்பது தடை செய்யப்பட்டிருக்கிறது. இறுதியில் இறைவனது நாட்டம் எதுவோ அதுவே நடக்கும். ஆற்றலுடையோருக்கு இறைவன் மீது தவக்குல் (நம்பிக்கை) வைப்பதே எல்லா உயரிய நிலைகளை விடவும் சிறந்த நிலையாகும்.

உங்களுக்குக் கூற வேண்டிய முக்கிய போதனை என்னவெனில், திருக்குர்ஆனை ஒதுக்கப்பட்ட வேதத்தைப் போல் கைவிட்டு விடாதீர்கள் என்பதாகும். ஏனெனில் உங்களின் வாழ்வு அதிலேயே அடங்கியிருக்கிறது. எவர்கள் திருக்குர்ஆனை கண்ணியப்படுத்து வார்களோ அவர்கள் வானத்தில் கண்ணியப்படுத்தப்படுவார்கள். எவர்கள் ஹதீது மற்றும் பிற சொற்களை விட திருக்குர்ஆனுக்கு முக்கியத்துவம் அளிப்பார்களோ அவர்கள் வானத்தில் முக்கியத்துவம் அளிக்கப்படுவார்கள். பூமியில் திருக்குர்ஆனைத் தவிர மனித குலத்திற்கு வேறு எந்த வேத நூலும் இல்லை. ஹஸ்ரத் முஹம்மது முஸ்தஃபா (ஸல்) அவர்களைத் தவிர ஆதமின் சந்ததிகளுக்கு இனி எந்த இறை தூதரும் பரிந்துரைப்பவரும் இல்லை. ஆகவே நீங்கள் இந்த மாபெரும் கம்பீரமான நபியுடன் உண்மையான நேசம் கொள்ள முயலுங்கள். அவருக்குக் கொடுக்கப்படும் மதிப்பை விட மேலான மதிப்பை வேறு எவருக்கும் கொடுக்காதீர்கள். அப்போது தான் நீங்கள் வானத்தில் இரட்சிக்கப்பட்டவர்களாக எழுதப்படுவீர்கள். இரட்சிப்பு என்பது மரணத்திற்குப் பின் வெளியாகக் கூடிய ஒன்றன்று என்பதனை நினைவில் கொள்ளுங்கள். உண்மையான இரட்சிப்பானது தன் ஒளியை இவ்வுலகிலேயே வெளிப்படுத்திக் காட்டி விடுகிறது.

இரட்சிப்பு பெற்றவர் யார்? உண்மையான இறைவன் ஒருவன் இருக்கிறான் என்றும் இறைவனுக்கு அவனது அனைத்து படைப்பினங்களுக்குமிடையில் பரிந்து பேசக் கூடியவர், ஹஸ்ரத் முஹம்மது (ஸல்) அவர்களேயென்றும் வானத்தின் கீழ் அவர்களுக்கு சம நிலையிலுள்ள வேறு எந்த நபியும் இல்லை என்றும் திருக்குர் ஆனுக்கு ஒப்பான வேறு எந்த வேத நூலும் இல்லை என்றும் நம்பிக்கை வைக்கக் கூடியவர்களே இரட்சிப்புப் பெற்றவர்களாவர்.

நபிகள் நாயகம் (ஸல்) அவர்களைத் தவிர வேறு எவரும் என்றென்றும் உயிர் வாழ வேண்டுமென்று அல்லாஹ் நாடவில்லை. ஆனால் இறைவனால் தேர்ந்தெடுக்கப்பட்ட இந்த திரு நபி (ஸல்) அவர்கள் நிரந்தரமாக உயிரோடிருக்கிறார்கள். எனவே அந்த புனித

ஆன்மா கொண்டு வந்த ஷரீஅத் என்னும் இஸ்லாமிய மார்க்க சட்டங்களையும் அவர்களின் ஆன்மீக அருட்கொடைகளையும் இறுதி நாள் வரை நிலைத்திருக்கச் செய்வதன் மூலம் அவர்கள் என்றென்றும் உயிரோடிருக்கக் கூடிய அடித்தளத்தை இறைவன் நிலை நாட்டினான். இறுதியாக அன்னாரின் ஆன்மீக அருட்கொடையை பெற்றதனால் அவர்களது ஆன்மீக ஒளியாக இறைவன் இவ்வாக்களிக்கப்பட்ட மஸீஹை உலகில் அனுப்பியுள்ளான். இஸ்லாம் மார்க்கம் என்னும் கட்டடம் முழுமை அடைவதற்கு இவரது வருகை அவசியமானதாயிருந்தது. ஏனெனில் மூஸா (அலை) அவர்களின் சமுதாயத்தினருக்கு கொடுக்கப்பட்டது போல் முஹம்மது நபி (ஸல்) அவர்களின் சமுதாயத்திற்கும் ஆன்மீக முறையில் ஒரு மஸீஹ் கொடுக்கப்படாதவரை இவ்வுலகம் முடியாமலிருப்பது அவசியமானதாக இருந்தது. இதனையே 'இஹ்தினஸ்ஸிராத்தல் முஸ்தகீம் ஸிராத்தில்லதீன அன்அம்த அலைஹிம்' இறைவா! நீ எங்களுக்கு நேரான வழியைக் காட்டுவாயாக. நீ அருள் புரிந்தவர்களின் வழியைக் காட்டுவாயாக என்ற வசனம் சுட்டிக் காட்டுகிறது. (திருக்குர்ஆன் 1 : 6-7) முற்காலத்து சமுதாயங்கள் இழந்து விட்ட அருட்கொடைகளை மூஸா நபி (அலை) அவர்கள் பெற்றார்கள். மேலும் மூஸா நபி (அலை) அவர்களின் சமுதாயம் இழந்து விட்ட அந்த அருட்கொடைகளை ஹஸ்ரத் முஹம்மது நபி (ஸல்) அவர்கள் பெற்றார்கள். தற்போது முஹம்மது நபி (ஸல்) அவர்களின் சமுதாயமானது மூஸா நபியின் சமுதாயத்தின் பிரதிநிதியாக இருக்கிறது. ஆயினும் முஹம்மதிய சமுதாயமானது மூஸா நபி (அலை) அவர்களின் சமுதாயத்தை விட ஆயிரம் மடங்கு சிறப்புள்ளதாகும். மூஸா நபியின் சமுதாயத்தில் தோன்றிய இப்னு மர்யத்தை விட அவருக்கு ஒப்பானவராக முஹம்மதிய சமுதாயத்தில் தோன்றிய இப்னு மர்யம் மிக உயர்ந்தவராவார்.

காலத்தைப் பொருத்தவரை மூஸா நபி அவர்களுக்குப் பின் பதினான்காவது நூற்றாண்டில் மஸீஹ் இப்னு மர்யம் தோன்றியதைப் போல் முஹம்மது (ஸல்) அவர்களுக்குப் பின் பதினான்காவது நூற்றாண்டில் வாக்களிக்கப்பட்ட மஸீஹ் தோன்றியுள்ளார்.*

** மூஸாவின் காலத்திலிருந்து பதினான்காவது நூற்றாண்டின் ஆரம்பத்தில் ஈசா தோன்றியதாக யூதர்கள் தங்களது வரலாற்றின் வாயிலாக ஏகமனதாக நம்புகிறார்கள். 'யூதர்களின் சரித்திரம்' காண்க*

*- நூலாசிரியர்*





மேலும் மர்யமின் குமாரர் மஸீஹ் தோன்றிய போது யூதர்களின் நிலை இருந்ததைப் போன்றே முஸ்லிம்களின் நிலை இருக்கும்போது வாக்களிக்கப்பட்ட மஸீஹ் தோன்றியுள்ளார். நானே அந்த மஸீஹ்! இறைவன், தான் நாடுவதை செய்கின்றான். அவனோடு சண்டையிடுபவன் அறிவீனனாவான். மேலும் எவர் இறைவனுக்கு எதிராக, அப்படியல்ல; இப்படி நடந்திருக்க வேண்டும் என ஆட்சேபனை செய்கின்றாரோ அவர் அறிவீனனாவான். அவ்விறைவன் என்னை பத்தாயிரத்திற்கும் அதிகமான ஒளிமயமான அடையாளங்களுடன் அனுப்பியுள்ளான். அவற்றில் பிளேக் நோயும் ஓர் அடையாளமாகும்.

ஆகவே எவர் என்னிடம் உண்மையான முறையில் பைஅத் என்னும் உடன்படிக்கை செய்து உண்மையான உள்ளத்துடன் என்னைப் பின்பற்றி எனக்கு கீழ்ப்படிவதில் தன்னை அர்ப்பணித்ததன் மூலம் தனது எல்லா நாட்டங்களையும் விட்டு விடுகிறாரோ அவருக் காகவே எனது ஆன்மா இந்த ஆபத்தான நாட்களில் பரிந்துரை செய்யும்.

ஆகவே எனது ஜமாஅத்தை சார்ந்தவர்களாகத் தங்களைக் கருதிக் கொள்ளும் மக்களே!

நீங்கள் உண்மையிலேயே இறையச்சத்தின் வழிகளில் காலெடுத்து வைக்கும் போதுதான் வானத்தில் எனது ஜமாஅத்தை சேர்ந்தவர்களாக கருதப்படுவீர்கள். ஆகவே நீங்கள் உங்களது ஐந்து நேரத்தொழுகைகளை இறைவனைப் பார்ப்பது போல் பயபக்தியுடன் தொழுது வாருங்கள். மேலும் உங்கள் நோன்புகளை இறைவனுக்காக முழு மனதுடன் நிறைவேற்றுங்கள். ஸக்காத்துக் கொடுக்க தகுதியுள்ள ஒவ்வொருவரும் ஸக்காத்து செலுத்துங்கள். எவர் மீது ஹஜ் கடமையாக்கப்பட்டிருக்கின்றதோ அவருக்கு எவ்வித தடையும் இல்லையென்றால் ஹஜ் செய்யவேண்டும். நன்மைகளை அழகுபடுத்தி நிறைவேற்றுங்கள். தீமைகளை வெறுத்து விட்டுவிடுங்கள். தக்வா என்னும் இறையச்சம் இல்லாத எந்தச் செயலும் இறைவனை அடைய முடியாது என்பதை நிச்சயமாக நினைவில் வையுங்கள். ஒவ்வொரு நன்மையின் ஆணிவேரும் தக்வா என்னும் இறையச்சமேயாகும். ஆகவே எச்செயலில் இந்த வேர் வீணாவதில்லையோ அச்செயல் நிச்சயம் வீண் போவதில்லை.

சென்ற கால நம்பிக்கையாளர்களுக்கு சோதனைகள் ஏற்பட்டது போல் நீங்களும் பலவகையான துக்கம் துயரங்களால் சோதிக்கப்படு

வதும் அவசியமானதாகும். ஆகவே நீங்கள் தடுமாற்றமடையாதிருக்க எச்சரிக்கையாக இருங்கள். வானத்துடன் உங்களுக்கு உறுதியான தொடர்பு இருக்குமானால், பூமி உங்களுக்கு எவ்வித தீங்கும் விளைவிக்க முடியாது. எப்போதாயினும் உங்களுக்கு ஏதேனும் நஷ்டம் உண்டாகுமெனில் அது உங்களது கையால் உண்டான நஷ்டமே அல்லாமல் உங்கள் பகைவர்களின் கைகளால் உண்டானது அல்ல. இப்பூமியில் உங்களது கௌரவம் அனைத்தையும் இழக்க நேரிட்டாலும் இறைவன் உங்களுக்கு என்றென்றும் மறைந்து போகாத கௌரவத்தையும் மதிப்பையும் நிச்சயமாக வானத்தில் அளிப்பான். ஆகவே நீங்கள் அவனை ஒருபோதும் விட்டு விடாதீர்கள். உங்களுக்கு துக்கம் கொடுப்பதும் உங்களது அநேக நாட்டங்களிலிருந்து நீங்கள் இழப்பிற்குரியோராக ஆக்கப்படுவதும் அவசியமானதாகவே இருக்கிறது. ஆகவே நீங்கள் இவற்றைக் கண்டு மனம் கலங்க வேண்டாம். ஏனெனில் நீங்கள் அவனது பாதையில் உறுதியாக நிலைத்து நிற்கின்றீர்களா? இல்லையா? என்பதனை இறைவன் சோதிக்கின்றான். வானத்தில் மலக்குகளும் உங்களை புகழ வேண்டுமென்று நீங்கள் விரும்பினால் கொடுமைக்கு ஆளாகும்போது மகிழ்ச்சி அடையுங்கள். நீங்கள் பழித்துரைக்கப்படுவதைக் கேட்டு இறைவனுக்கு நன்றி செலுத்துங்கள். தோல்வியைக் கண்டு இறைவனோடுள்ள தொடர்பை முறித்து விடாதீர்கள். நீங்கள் இறைவனின் இறுதி ஜமாஅத்தாக இருக்கிறீர்கள். எனவே தன் முழுமைத்தன்மையில் உச்ச எல்லையை அடைந்த நற்பணிகளைச் செய்து காட்டுங்கள். உங்களில் சோம்பலுடையவராய் காணப்படும் ஒவ்வொருவரும் ஓர் அசுத்தமான பொருளைப் போல் ஜமாஅத்திலிருந்து புறந்தள்ளப்படுவார். மேலும் அவர் ஏக்கத்துடன் மரணிப்பார். அவரால் இறைவனுக்கு எவ்வித தீங்கும் விளைவிக்கக் முடியாது.

கவனியுங்கள்! உங்களுடைய இறைவன் உண்மையிலேயே இருக்கிறான் என்பதை நான் மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறேன். அனைவரும் அவனது படைப்புகளாயிருப்பினும் எவர் இறைவனை தேர்ந்தெடுக்கின்றாரோ அவரையே இறைவனும் தேர்ந்தெடுத்துக் கொள்கின்றான். எவர் அவனிடம் செல்வாரோ அவனும் அவரிடம் வந்து விடுகிறான். எவர் அவனை கண்ணியப்படுத்துகின்றாரோ அவனும் அவரை கண்ணியப்படுத்துகிறான்.





ஆகவே நீங்கள் உங்கள் உள்ளங்களை நேராக்கி நாவுகளையும் கண்களையும் காதுகளையும் தூய்மைப்படுத்தி அவன் பக்கம் வந்து விடுங்கள். அப்போது அவன் உங்களை ஏற்றுக் கொள்வான். நம்பிக்கையைப் பொருத்தவரை இறைவன் உங்களிடம் விரும்புவதெல்லாம் இறைவன் ஒருவனே என்றும் ஹஸ்ரத் முஹம்மது முஸ்தஃபா (ஸல்) அவர்கள் அவனது திருத்தூதர் என்றும், அவர்கள் 'காத்தமுல் அன்பியா' வாகவும் எல்லா நபிமார்களையும் விட மிகவும் மேலானவராகவும் இருக்கிறார்கள் என்று நம்புவதும் ஆகும்.

மேலும் எவர் மீது முஹம்மதியத்தின் பிரதிபலிப்பு எனும் போர்வை அணிவிக்கப்பட்டிருக்கின்றதோ அவரைத் தவிர வேறு எந்த நபியுமில்லை. ஏனெனில் ஊழியன் ஒருவன் தன் எஜமானரிலிருந்து வேறு பட்டவன் அல்லன். மரக்கிளையானது தனது வேரிலிருந்து வேறுபட்டது அல்ல. எனவே எவர் முழுமையாகத் தன் எஜமானரிடத்தில் தன்னையே அர்ப்பணித்துக் கொண்டு அதன் மூலம் இறைவனிடமிருந்து நபிப் பட்டத்தை பெறுகின்றாரோ அவர் 'கத்முன் நுபுவ்வத்திற்கு' ஒருபோதும் பாதிப்பை ஏற்படுத்தக் கூடியவர் அல்லர். இது எவ்வாறு என்றால் நீங்கள் உங்களது உருவத்தை நிலைக் கண்ணாடியில் பார்ப்பது போலாகும். அதில் தெரியும் உருவத்தால் நீங்கள் இருவேறு பட்டவர்களாக ஆக முடியாது. வெளிப்படையில் நீங்கள் இருவராகத் தென்பட்டாலும் நீங்கள் ஒருவரே. இது அசலுக்கும் நிழலுக்கும் இடைப்பட்ட வேறுபாடு மட்டுமேயாகும்.

ஆகவே வாக்களிக்கப்பட்ட மஸீஹிலும் இவ்வாறே இறைவன் விரும்பினான். வாக்களிக்கப்பட்ட மஸீஹ் எனது கல்லறையில் (கபரில்) அடக்கம் செய்யப்படுவார் என்று ஹஸ்ரத் ரஸூல் (ஸல்) அவர்கள் கூறியதன் இரகசியம் இதுவேயாகும். அதாவது, அது நானாகவே இருக்கிறேன். மேலும் இதில் இரு உருவ வேறுபாடுகள் உண்டாவதில்லை.

ஈசப்னு மர்யம் (மர்யமின் மகனாகிய ஈசா) மரணமடைந்து விட்டார் என்பதையும் அவரது கல்லறை காஷ்மீர் ஸ்ரீநகர் கான்யார் வீதியில் இருப்பதையும் உறுதியுடன் அறிந்து கொள்ளுங்கள்* இறைவன் தனது புனித வேதத்தில் அவர் மரணித்துப் போனதாக

**** கிறிஸ்தவ ஆராய்ச்சியாளர்கள் இதே கருத்தையே வெளிப்படுத்தி யுள்ளார்கள். சூப்பர் நேச்சரல் ரெலிஜன் பக்கம் 522. விளக்கத்திற்கு நமது நூலான 'துஹ்பா கோல்டவிய்யா' பக்கம் 139 பார்க்கவும் – நூலாசிரியர்***

அறிவித்துள்ளான். இந்த ஆயத்துக்கு வேறு பொருள் இருக்குமானால் ஈசப்னு மர்யமின் மரணத்தைப் பற்றிய செய்தி திருக்குர்ஆனில் வேறு எங்குள்ளது? நமது எதிரிகள் கருதுவதைபோல் மரணத்தைப் பற்றி வந்துள்ள வசனங்களுக்கு வேறு பொருள் இருக்குமானால் அவர் ஏதாவது ஒரு நேரத்தில் மரணமடைவார் என்றும் கூட குர்ஆன் அவரது மரணத்தைப் பற்றி எங்கும் கூறவில்லை என்றாகிவிடும். நமது நபி (ஸல்) அவர்களுடைய மரணத்தைப் பற்றித் தெரிவித்த இறைவன் ஈசாவின் மரணத்தைப் பற்றி முழுக் குர்ஆனிலும் கூறாததன் இரகசியமென்ன?

'ஃபலம்மா தவஃப்பைத்தனீ குன்த அன்தர் ரக்கீப அலைஹிம்' *(திருக்குர்ஆன் 5:118)* * என்னும் இந்த வசனத்தில் ஈசாவின் மரணத்தைப் பற்றி செய்தி காணப்படுகிறது என்று நீங்கள் கூறுவீர்களென்றால், கிறிஸ்தவர்கள் வழி கெட்டுப் போகும் முன்பே அவர் இறந்து போனார் என்பதை இந்த வசனம் தெளிவாக நிரூபிக்கிறது. 'ஃபலம்மா தவஃப்பைத் தனீ' என்ற இந்த வசனத்திற்கு ஈசா (அலை) பூத உடலுடன் வானத்திற்கு உயர்த்தப்பட்டார் என்ற பொருள் இருக்குமானால் இவர் உயிருடன் இருக்கிறார் என்ற எண்ணம் இலட்சக்கணக்கானவர்களை நாசமாக்கி இருக்கையில் இறைவன் அப்படிப்பட்டவரின் மரணத்தைப் பற்றி முழுக் குர்ஆனிலும் ஏன் எங்குமே குறிப்பிடவில்லை? இது எவ்வாறென்றால் மக்கள் இணைவைப்பவர்களாகவும் மார்க்கப்பற்று அற்றவர்களாகவும் ஆகுவதற்காகவே அவரை இறைவன் என்றென்றும் உயிருடன் இருக்க அனுமதித்திருக்கிறான் என்றும், இது மக்களது தவறு இல்லை; மாறாக, மக்களை வழி கெடுக்கும் பொருட்டு இவற்றையெல்லாம் இறைவனே

**ஹஸ்ரத் ஈசா (அலை) மீண்டும் உலகிற்கு வரமாட்டார் என்று இந்த வசனத்திலிருந்து தெரிய வருகிறது. ஏனெனில் அவர் மீண்டும் உலகிற்கு வருபவராக இருந்தால் கிறித்தவர்கள் வழிகெட்டுப் போன விஷயத்தைப் பற்றி நான் ஒன்றும் அறியேன் என்ற ஹஸ்ரத் ஈசா (அலை) அவர்களின் பதில் பொய்யாகிவிடுகிறது. மீண்டும் இந்த உலகிற்கு வந்து நாற்பது ஆண்டுகள் இருந்த ஒருவர் தன்னை தெய்வமாக நம்பி வந்த கோடிக்கணக்கான கிறிஸ்தவர்களை பார்த்தவர் சிலுவையை உடைத்து அனைத்து கிறிஸ்தவர்களையும் முஸ்லிம்களாக மாற்றியவர் கிறிஸ்தவர்கள் வழி கெட்டுப் போன விஷயத்தைப் பற்றி நான் ஒன்றும் அறியேன் என்று இறுதி நாளில் இறைவன் முன்னிலையில் எவ்வாறு சாக்குக் கூறமுடியும்?*





செய்திருக்கிறான் என்றும் ஆகிவிடும். மஸீஹின் மரணம் இன்றி சிலுவைக் கொள்கைக்கு மரணம் வரமுடியாது என்பதனை நீங்கள் நன்றாக நினைவில் வையுங்கள். திருக்குர்ஆனின் போதனைக்கு மாறாக அவரை உயிருள்ளவராக நம்புவதால் என்ன பயன்? ஆகவே இந்த மார்க்கம் உயிர் பெறும் பொருட்டு அவரை மரணிக்கச் செய்யுங்கள். இறைவன் தனது திருவசனங்களால் மஸீஹ் உடைய மரணத்தைப் பற்றி வெளிப்படுத்தியுள்ளான். மேலும் ரஸூலுல்லாஹ் (ஸல்) அவர்கள் மிஃராஜ் இரவில் அவரை மரணித்தவர்களுடன் பார்த்திருக்கிறார்கள். நீங்கள் இப்போதும் ஒப்புக் கொள்ளவில்லை யென்றால் இது எப்படிப்பட்ட ஈமான் (நம்பிக்கை) ஆக இருக்கிறது? இறைவனின் சொல்லை விட மனிதர்களின் அறிவிப்புகளுக்கு முக்கியத்துவம் அளிக்கின்றீர்களா? இது என்ன மார்க்கம்?*

நமது ரஸூல் (ஸல்) அவர்கள் மரணித்த ஆன்மாக்களில் ஈசாவையும் நான் பார்த்திருக்கிறேன் என்று சாட்சியம் கூறியது மட்டுமல்லாது இதற்கு முன் எவரும் உயிருடன் இருந்ததில்லை என்பதையும் தம்முடைய மரணத்தைக் கொண்டு வெளிப்படுத்தி விட்டார்கள். எனவே, நமது எதிரிகள் திருக்குர்ஆனை கைவிடுவதை போன்று சுன்னத்தையும் விட்டு விடுகிறார்கள். ஏனெனில் மரணம் அடைவது நமது திரு நபியின் சுன்னத் ஆகும். ஆனால் ஈசா (அலை) உயிருடன் இருக்கையில் நமது நபி (ஸல்) மரணம் அடைவது அவர்களுக்கு இழுக்காகும். ஆகவே நீங்கள் ஈசாவின் மரணத்தை

** சிலுவை சம்பவத்திற்குப் பின்னர் மஸீஹும் அவரது தாயாரும் காஷ்மீர் பக்கம் சென்று விட்டதாக திருக்குர்ஆனின் ஒரு வசனத்தில் வெளிப்படையாகக் கூறப்பட்டிருக்கிறது. அதாவது "வ ஆவை னாஹுமா இலா ரப்வத்தின் ஸாதி கராரிவ் வமயின்". அதாவது :- நாம் ஈசாவுக்கும் அவரது தாயாருக்கும் நீர் ஊற்றுகள் நிரம்பிய ஒரு குன்றின் மீது தங்குவதற்கு ஒரு இடத்தை அளித்துள்ளோம். அது தங்குவதற்கேற்ற வசதியான ஒரு இடமாகும். (திருக்குர்ஆன் 23:51) இதில் இறைவன் காஷ்மீரின் சித்திரத்தை வரைந்துள்ளான் மேலும் "ஆவா" என்னும் சொல் அரபு அகராதியில் ஏதாவது ஆபத்து துன்பத்திலிருந்து அடைக்கலம் கொடுத்தல் என்பதற்காக வருகிறது. சிலுவை சம்பவத்திற்கு முன் அடைக்கலம் கொடுக்க வேண்டிய காலகட்டம் எதுவும் ஈசாவுக்கும் அவரது தாயாருக்கும் வரவில்லை. ஆகவே இறைவன் ஈசாவையும் அவரது தாயாரையும் சிலுவை சம்பவத்திற்குப் பின்னர் இந்த குன்றின் மீது அனுப்பி வைத்தான் என்பது தெளிவாகிறது - நூலாசிரியர்*

ஒப்புக்கொள்ளாதவரை நீங்கள் சுன்னத்தை கடைப்பிடிப்பவர்களும் அல்லர். குர்ஆனை கடைப்பிடிப்பவர்களும் அல்லர். மேலும் நான் ஹஸ்ரத் ஈசா (அலை) அவர்களது மகத்துவத்தை நிராகரிப்பவன் அல்லன். முஹம்மதின் சமுதாயத்தில் தோன்றிய மஸீஹ் மூஸாவின் சமுதாயத்தில் தோன்றிய மஸீஹைவிட மேன்மையானவர் என்று இறைவன் எனக்கு கூறிய போதிலும் நான் அவருக்கு மிகவும் கண்ணியம் அளிக்கிறேன். ஏனெனில் மஸீஹ் இப்னு மர்யம் இஸ்ரவேலரின் சமுதாயத்திற்கு 'காத்தமுல் குலஃபா' வாக இருந்தது போல் நான் ஆன்மீகமான முறையில் இஸ்லாத்தில் காத்தமுல் குலஃபாவாக இருக்கிறேன். மேலும் மூஸா உடைய சமுதாயத்தில் இப்னு மர்யம் வாக்களிக்கப்பட்ட மஸீஹாக இருந்ததைப் போல் நான் முஹம்மதிய்ய சமுதாயத்தில் வாக்களிக்கப்பட்ட மஸீஹாக இருக்கிறேன். அவருடைய பெயரைக் கொண்டிருக்கும் நான் அவரை பெரிதும் கண்ணியப்படுத்துகிறேன். நான் மஸீஹ் இப்னு மர்யமுக்கு மதிப்பு அளிப்பதில்லை என்று என்னை குறை கூறுகிறவர் குழப்பத்தை உருவாக்கக் கூடியவரும் இட்டுக்கட்டி பேசக் கூடியவருமாவார். மஸீஹ் என்ன? நான் அவரது நான்கு சகோதரர்களையும் கௌரவிக்கிறேன்.*

இந்த ஐந்து மக்களும் ஒரே தாயின் குமாரர்களாவர். இவர்களை மாத்திரமல்லாமல் நான் ஹஸ்ரத் மஸீஹ் உடைய உண்மையான இரு சகோதரிகளையும் பரிசுத்தமானவர்களாக நம்புகிறேன். ஏனெனில் இப்பெரியோர்கள் அனைவரும் புனித மர்யமின் வயிற்றிலிருந்து வந்தவர்களாவர். மர்யமுடைய சிறப்புத் தன்மையென்னவெனில் அவர்கள் ஒரு குறிப்பிட்ட காலம் வரை தன்னை திருமணத்திலிருந்து தடுத்துக் கொண்டார்கள். பிறகு அவர்கள் கர்ப்பமுற்றிருந்த காரணத்தால் அவர்களின் சமுதாயத்தைச் சேர்ந்த பெரியோர்கள் மிகவும் வற்புறுத்தியதன் விளைவாக திருமணம் செய்து கொண்டார்கள்.

** இயேசு மஸீஹுக்கு நான்கு சகோதரர்களும் இரு சகோதரிகளும் இருந்தனர். இவர்கள் அனைவரும் இயேசு உடைய உண்மையான சகோதரர்கள் சகோதரிகளாவர். அதாவது இவர்கள் அனைவரும் யூசுஃப் மர்யமுடைய சந்ததிகளாவர். நான்கு சகோதரர்களின் பெயர்களாவன (1)யூதா (2)எஃகூப் (3)ஷம்வூன் (4)யோஸிஸ். இரு சகோதரிகளின் பெயர்களாவன. (1)ஆஸ்யா (2)லீத்யா. நூல்: அபாஸ்டாலிக் ரிகார்ட்ஸ் எழுத்தாளர் பாதிரிஜான் அமிலன் காயல்ஸ் இலண்டன் பதிப்பு 1886ம் ஆண்டு பக்கம் 159, 166 காண்க - நூலாசிரியர்*





தவ்ராத்தின் போதனைக்கு மாறாக கர்ப்பமுற்றிருக்கையில் திருமணம் செய்ததேன்? கன்னியாக இருப்பேன் என்ற உடன்படிக்கை ஏன் அநீதியாக முறிக்கப்பட்டது? பலதார மணத்திற்கு அடித்தளம் அமைத்ததேன்? அதாவது தச்சன் யூசுஃபுக்கு முதல் மனைவி இருக்கையில் அவரை மணம் செய்ய மர்யம் ஒப்புக் கொண்டதேன்? என்றெல்லாம் மக்கள் ஆட்சேபணை செய்தாலும் இவை அனைத்தும் அவர்களுக்கு நிர்ப்பந்தத்தின் காரணத்தால் உண்டானவை என்றே நான் கூறுவேன். இந்நிலையில் (மர்யமாகிய) அவர் அனுதாபத்திற்குரியவரே அல்லாமல் ஆட்சேபணைக்குரியவர் அல்லர்.

இந்த எல்லா விஷயங்களுக்குப் பின் மீண்டும் நான் தெரிவித்துக் கொள்வது என்னவெனில், நாம் வெளிப்படையாக பைஅத் என்னும் உடன்படிக்கை செய்து விட்டோம் என்று நீங்கள் நினைக்காதீர்கள். வெறும் வெளிப்படையான செயல், பொருள் அற்றதாகும். இறைவன் உங்களது உள்ளங்களையே பார்க்கிறான். அதன்படியே உங்களோடு அவன் நடந்து கொள்வான்.

பாருங்கள். நான் இதனைக் கூறிவிட்டு தப்லீக் எனப்படும் பிரச்சாரத்தின் கடமைகளிலிருந்து சற்று ஓய்வு பெறுகிறேன். அதாவது, பாவம் ஒரு விஷமாகும். அதனை நீங்கள் அருந்தாதீர்கள். இறைவனுக்கு கீழ்ப்படியாமை ஒரு தீய மரணமாகும். இதிலிருந்து நீங்கள் தப்பித்துக் கொள்ளுங்கள். உங்களுக்கு சக்தி கிடைப்பதற்காக இறைவனிடம் பிரார்த்தனை செய்து வாருங்கள். எவர் துஆச் செய்யும் சமயத்தில் இறைவன் வாக்குறுதியின் மூலம் முன்பே விதிவிலக் காக்கப்பட்டதைத் தவிர ஒவ்வொரு விஷயத்திற்கும் இறைவன் சக்தியுள்ளவன் என அவனை நம்ப மாட்டாரோ அவர் என் ஜமாஅத்தைச் சேர்ந்தவர் அல்லர். எவர் பொய்யையும் ஏமாற்றுவதையும் விட்டு விடவில்லையோ அவர் எனது ஜமாஅத்தைச் சேர்ந்தவர் அல்லர். எவர் மறுமையின் பக்கம் சிறிதும் கவனம் செலுத்தாமல் உலகப் பேராசையில் மூழ்கி இருப்பாரோ அவர் என் ஜமாஅத்தைச் சேர்ந்தவராகமாட்டார். எவர் உண்மையாக உலகத்தைவிட மார்க்கத்திற்கு முக்கியத்துவம் அளிக்க மாட்டாரோ அவர் என் ஜமாஅத்தை சார்ந்தவராகமாட்டார். எவர் முழுமையாக ஒவ்வொரு தீமையையும் தீய செயலையும் அதாவது மது அருந்ததுதல், சூதாட்டம், தீயபார்வை, நம்பிக்கை துரோகம், லஞ்சம் வாங்குதல் முதலிய கூடாத செயல்களிலிருந்து விலகி இறைவனிடம்

பாவமன்னிப்பு கோரமாட்டாரோ அவர் என் ஜமாஅத்தைச் சேர்ந்தவர் அல்லர். எவர் ஐந்து நேரத் தொழுகைகளையும் கடைப்பிடிக்க மாட்டாரோ அவர் எனது ஜமாஅத்தைச் சேர்ந்தவர் அல்லர்.

எவர் பிரார்த்தனையில் தொடர்ந்து ஈடுபடாமலும், பணிவுடன் இறைவனை நினைவு கூராமலும் இருக்கின்றாரோ அவர் எனது ஜமாஅத்தைச் சேர்ந்தவர் அல்லர். எவர் தன் மீது தீய தாக்கத்தை ஏற்படுத்துகின்ற கெட்ட நண்பர்களோடுள்ள தொடர்பை விட்டொழிக்கக் மாட்டாரோ அவர் என் ஜமாஅத்தைச் சேர்ந்தவர் அல்ல. எவர் தனது பெற்றோருக்கு மதிப்பு அளிக்காமலும் திருக்குர்ஆனின் போதனைக்கு மாற்றமில்லாத அவர்களது நல்ல விஷயங்களை ஒப்புக் கொள்ளாமலும் அவர்களுக்கு சேவை செய்வதில் கவனமில்லாமலும் இருக்கின்றாரோ அவர் என் ஜமாஅத்தைச் சேர்ந்தவர் அல்லர். எவர் தனது மனைவியோடும் அவரின் உறவினர்களோடும் மென்மையுடனும் அனுதாபத்துடனும் நடந்து கொள்ள மாட்டாரோ அவர் என் ஜமாஅத்தைச் சேர்ந்தவர் அல்லர். எவர் தனது அண்டை வீட்டுக்காரர்களுக்குச் சிறு சிறு நன்மைகளையும் புரிவதில்லையோ அவர் எனது ஜமாஅத்தைச் சேர்ந்தவர் அல்லர். எவர் தனக்கு தீங்கு விளைவித்தவரின் குற்றத்தை மன்னிக்காமல் அவர் மீது பகைமை பாராட்டுவாரோ அவர் என் ஜமாஅத்தைச் சேர்ந்தவரல்லர். தன் மனைவியை வஞ்சிக்கின்ற கணவனும், தன் கணவனை வஞ்சிக்கின்ற மனைவியும் என் ஜமாஅத்தைச் சேர்ந்தவர்கள் அல்லர். எவர் என்னிடம் பைஅத் என்னும் உடன்படிக்கையின் போது செய்த வாக்குறுதிகளை ஏதாவதொரு வகையில் மீறுவாரோ அவர் என் ஜமாஅத்தைச் சேர்ந்தவர் அல்லர். எவர் என்னை உண்மையாக வாக்களிக்கப்பட்ட மஸீஹாவும், மஹ்தியாகவும் நம்பவில்லையோ அவர் எனது ஜமாஅத்தைச் சேர்ந்தவரல்லர். எவர் அனைத்து நற்காரியங்களிலும் என்னைப் பின்பற்ற தயாராக இல்லையோ அவர் என் ஜமாஅத்தைச் சேர்ந்தவர் அல்லர். எவர் பகைவர்களின் கூட்டத்தில் போய் இருந்து கொண்டு அவர்களது கூற்றுகளுக்கு ஆமாம் போடுவாரோ அவரும் என் ஜமாஅத்தைச் சேர்ந்தவராக மாட்டார். விபசாரம் புரியும் ஒவ்வொருவரும், கெட்ட நடத்தை உள்ளவரும், மது அருந்துகிறவரும், கொலையாளியும், திருடரும், சூதாட்டக்காரரும், நம்பிக்கை துரோகியும், லஞ்சம் வாங்குகிறவரும், அக்கிரமாக்காரரும், அநியாயக்காரரும், புறம்





பேசுகின்றவரும், பொய்யரும், ஏமாற்றுக்காரரும், இவர்களோடு கூட்டுச் சேர்ந்தவரும், தனது சகோதர சகோதரிகள் மீது பொய்க் குற்றம் சுமத்தக் கூடியவரும், தனது தீய செயல்களிலிருந்து பாவமன்னிப்பு கோராதவரும், கெட்டக் கூட்டங்களில் கலந்து கொள்வதைத் தவிர்த்துக் கொள்ளாதவரும் ஆகிய இத்தகையவர்கள் அனைவரும் எனது ஜமாஅத்தைச் சேர்ந்தவர்களாகக் கருதத்தக்கவர்கள் அல்லர்.

இவை அனைத்தும் கொடிய விஷமாகும். இவைகளை உண்ட பின் அவற்றிலிருந்து எவ்விதத்திலும் நீங்கள் தப்பிப் பிழைக்க மாட்டீர்கள். இருளும் ஒளியும் ஒரே இடத்தில் ஒன்று சேரக் கூடியவை அல்ல. இறைவனோடு தொடர்புள்ள தூய்மையான இதயம் உள்ளவர்களுக்கு கிடைக்கும் தெய்வீக அருட்கொடைகளை, இறைவனோடு நல்ல தொடர்பு இல்லாத தீய குணத்தைக் கொண்டவர்கள் ஒருபோதும் பெற முடியாது. தங்களது உள்ளங்களை சுத்தம் செய்வோரும் தங்களது உள்ளங்களை ஒவ்வொரு அசுத்தத்திலிருந்தும் தூய்மைப்படுத்துவோரும் தன் இறைவனுடன் நன்றி உணர்வோடு இருப்பதாக உறுதி மொழி கூறுபவரும் எத்தகைய பெரும் பாக்கியசாலிகளாயிருக்கிறார்கள்! ஏனெனில் அவர்கள் ஒருபோதும் வீணாக்கப்படமாட்டார்கள். இறைவன் அவர்களை இழிவு படுத்துவான் என்பது ஒருபோதும் நடக்காத காரியமாகும். ஏனெனில் அவர்கள் இறைவனுக்காகவே ஆகிவிட்டவர்களாவர். இறைவனும் அவர்களுக்காகவே ஆகிவிட்டான். அவர்கள் ஒவ்வொரு ஆபத்தான சமயத்திலும் காப்பாற்றப்படுவார்கள். ஆகவே அவர்களை எதிர்க்கும் பகைவன் அறிவீனனாவான். ஏனெனில் அவர்கள் இறைவனது மடியில் அமர்ந்துள்ளனர். மேலும் இறைவன் அவர்களுக்கு துணைபுரிந்தும் வருகிறான். இறைவன் மீது நம்பிக்கை கொண்டவர் யார்? இத்தகையவர்களே அவன் மீது நம்பிக்கை கொண்டவர்களாவர். இவ்வாறே ஒரு பெரிய பாவியைப் பற்றியும் வஞ்சகனைப் பற்றியும் துஷ்டனைப் பற்றியும் கவலை கொள்பவனும் அறிவீனனேயாவான். ஏனெனில் இதனால் அவனே அழிந்து விடுவான்.

இறைவன் வானங்களையும் பூமியையும் உண்டு பண்ணிய காலத்திலிருந்து அவன் தன் நல்லடியார்களை அழித்து நாசப்படுத்தி இருக்கிறானா என்ன? இல்லை. மாறாக, அவன் பெரும் மகத்தான பணிகளை தனது அடியார்களின் பொருட்டாக செய்து வந்திருக்கிறான். அவ்விறைவன் இப்போதும் அவ்வாறே செய்து வருகிறான்.

அவ்விறைவன் மிகவும் நன்றியுடையவனாவான். நன்றியுடையவர்களுக்காக அவனது அற்புதமான செயல்கள் வெளியாகின்றன. அவர்களை விழுங்கி விட உலகம் விரும்புகிறது. அவர்களைக் கண்டு ஒவ்வொரு பகையாளியும் தன் பல்லைக் கடிக்கிறான். ஆனால் அவர்களின் தோழனாகிய அவ்விறைவனோ அவர்களின் ஒவ்வொரு அழிவினின்றும் காப்பாற்றுகிறான்.

மேலும் ஒவ்வொரு களத்திலும் அவர்களுக்கு வெற்றியை அளிக்கிறான். இத்தகைய இறைவனோடுள்ள உறவை விடாதவர் எத்தகைய நற்பேறு பெற்றவராவார்! நாம் அவன் மீது நம்பிக்கை கொண்டோம். நாம் அவனை அறிந்து கொண்டோம். என் மீது வெளிப்பாடு இறக்கியவனே முழு உலகிற்கும் இறைவனாவான். அவன் எனக்காக உறுதியான அடையாளங்களை வெளிப்படுத்திக் காட்டினான். அவன் என்னை இக்காலத்திற்காக வாக்களிக்கப்பட்ட மஸீஹாக அனுப்பியுள்ளான். அவனைத் தவிர வானங்களிலும் பூமியிலும் வேறு இறைவன் இல்லை. எவர் அவன் மீது நம்பிக்கை கொள்ள மாட்டாரோ அவர் பாக்கியம் கெட்டவரும் அவமானத்திற் குரியவருமாவார்.

நாம் சூரியனை போன்று, நமது இறைவனின் ஒளிமிக்க வஹியைப் பெற்றோம். அவனே முழு உலகிற்கும் இறைவன் என்றும் அவனைத் தவிர வேறு யாருமில்லை என்றும் நன்கு அறிந்து கொண்டோம். நாம் அடைந்த இறைவன் எத்தகைய வல்லமையுடையவனும், தான் நிலைத்திருப்பது மட்டுமின்றி மற்ற அனைத்தையும் நிலைத்திருக்கச் செய்யக் கூடியவனுமாய் இருக்கிறான்! நாம் கண்ட இறைவன் வலுவான ஆற்றல்களை உடையவனாவான். அவன் முன் எந்த விஷயமும் ஆக முடியாததன்று. என்றாலும் அவன் தன் வேதத்திற்கும் வார்த்தைப்பாட்டிற்கும் மாறாக எதுவும் செய்வதில்லை. இதுவே உண்மையாகும்.

நீங்கள் துஆ செய்யும் போது தங்களது எண்ணங்களைக் கொண்டே ஓர் இயற்கை சட்டத்தை உருவாக்கிக் கொண்ட அந்த அறிவீனர்களான இயற்கைவாதிகளைப் போல் செய்யாதீர்கள். அவர்களால் உருவாக்கப்பட்ட அவ்வியற்கை சட்டங்கள் மீது இறைவனது வேதத்தின் முத்திரை பதிக்கப்படவில்லை. ஏனெனில் அவை மறுக்கப்பட்டவையாக இருக்கின்றன. அவர்களது பிரார்த்தனைகள் ஒருபோதும் அங்கீகரிக்கப்படமாட்டாது. அவர்களோ





பார்வை இழந்த குருடர்களாகவும் உயிரில்லாத பிணங்களாகவும் இருக்கின்றனர். இறைவன் முன்பு தங்களால் வகுக்கப்பட்ட சட்ட திட்டங்களை சமர்ப்பிக்கின்றார்கள். அவனது எல்லையற்ற சக்திகளுக்கு ஒரு வரம்பை நிர்ணயிப்பதோடு அவனைப் பலவீனமுள்ளவனாகவும் கருதுகிறார்கள். ஆகவே அவர்களது நிலைமைக்கேற்பவே அவர்களோடு நடந்து கொள்ளப்படும்.

ஆனாலும் நீர் துஆவென்னும் பிரார்த்தனைக்காக நிற்கும் போது உமது இறைவன் எல்லாவற்றின் மீதும் வல்லமையுடையவன் என்பதனை உறுதியாக நம்ப வேண்டியது உமது கடமையாகும். அப்போதுதான் உமது பிரார்த்தனை அங்கீகரிக்கப்படும். மேலும் நாம் கண்ட இறைவனது வல்லமைகளான அற்புதங்களை நீரும் காண்பீர். இவை அனைத்தும் நமது கண்களால் கண்ட சாட்சிகளே தவிர வெறும் கட்டுக்கதையோ கற்பனையோ அல்ல. இறைவன் ஒவ்வொன்றின் மீதும் சக்தியுள்ளவன் என்று கருதாதவரின் பிரார்த்தனை எவ்வாறு அங்கீகரிக்கப்படும்? மேலும் பிரார்த்தனை அங்கீகரிக்கப்படுவது இயற்கை சட்டத்திற்கு மாறானது என்று தவறாக நம்பும் மனிதனுக்கு, பிரச்சனைக்குரிய இக்கட்டான சமயங்களில் பிரார்த்தனை செய்ய எவ்வாறு தூண்டுதல் உண்டாகும்?

நற்பேறு பெற்றவரே! நீர் அவர்களைப் போல் ஆகி விட வேண்டாம். உமது இறைவன் அளவற்ற நட்சத்திரங்களை தூண்களின்றித் தொங்க விட்டிருக்கிறான். அவன் வானங்களையும் பூமியையும் ஒன்றுமில்லாததிலிருந்து படைத்திருக்கிறான். இவ்வாறிருக்க அவன் உமது பணியை செய்ய சக்தி அற்றவனாயிருக் கிறான் என்று நீர் அவனைப் பற்றி தவறான எண்ணம் கொள்கின்றீரா?* உமது தவறான எண்ணமே உம்மை இறைவனது உதவி கிடைக்காமல் செய்துவிடும்.

** இறைவன் எக்காரியத்தையும் செய்ய முடியாதவன் அல்லன். அவன் அளவற்ற கருணையுடன் நல்லவர்களுடன் நண்பர்களைப் போல் நடந்து கொள்கிறான் என்று இறைவனது வேதம் துஆவைப் பற்றி இந்த சட்டத்தை நன்கு விவரித்திருக்கிறது. அதாவது, சில சமயம் அவன் தனது விருப்பத்தையும் ஒதுக்கித் தள்ளிவிட்டு உமது துஆவைக் கேட்கிறான். இறைவன் கூறுவதாவது: "உத்வூனீ அஸ்தஜிப் லக்கும் (40 : 61) மேலும் சில சமயம் தனது விருப்பத்தையும் ஏற்கச் செய்ய விரும்புகிறான். எவ்வாறெனில் "வலனபுலு வன்னக்கும் பிஷைய்யின்ம் மினல் கவ்பி*

நமது இறைவனிடத்தில் அளவற்ற அற்புதங்களெல்லாம் காணப்படுகின்றன. ஆனால் உண்மையான மனத்துடனும், நம்பிக்கையோடும் அவனுக்காக ஆகி விட்டவர்களே அவற்றைக் காண்கின்றார்கள். அவனது வல்லமைகள் மீது திட நம்பிக்கை கொள்ளாதவர்களுக்கும், அவனுக்கு உண்மையானவனாகவும், நம்பிக்கையாளனாகவும் ஆகாத மற்றவர்களுக்கும் அந்த அற்புதங்களை அவன் வெளிப்படுத்திக் காட்டுவதில்லை. எல்லாவற்றின் மீதும் வல்மையுள்ள இறைவன் ஒருவன் தமக்கு இருக்கிறான் என்பதனை இதுவரை அறியாதவர் எத்தகைய துர்பாக்கியவாராயிருக்கிறார்! நமது சுவர்க்கம் நமது இறைவனேயாவான். நமது மேலான இன்பங்கள் அனைத்தும் நமது இறைவனிடத்தே இருக்கின்றன. ஏனெனில் நாம் அவனை நன்கு கண்டிருக்கின்றோம். அழகனைத்தும் அவனிடத்திலே அமைந்துள்ளன. ஆகவே இச்செல்வத்தை நாம் உயிரை தியாகம் செய்து பெற நேரிட்டாலும் கண்டிப்பாகப் பெறுவதற்குத் தகுதியுள்ளதாயிருக்கிறது. மேலும் நாம் நம்மை முற்றாய் அர்ப்பணித்தால்தான் பெறமுடியும் என்றால், இவ்விலையுயர்ந்த மாணிக்கம் அவ்வாறு வாங்கத் தகுதியுள்ளதாக இருக்கிறது.

இழப்பிற்குரியோரே! உங்களுக்கு வளம் தரக்கூடிய இந்த ஊற்றின் பக்கம் விரைந்து வாருங்கள். இது உயிரோட்டமுள்ள ஒரு நீர் ஊற்றாகும். இது உங்களை காப்பாற்றும். நான் என்ன செய்வேன்! இந்த நற்செய்தியை உங்கள் இதயங்களில் நான் எவ்வாறு பதிய வைப்பேன். உங்களின் இறைவன் ஒருவன் இருக்கிறான் என்பதனை மக்களெல்லாரும் கேட்கும் பொருட்டு நான் எந்த முரசைக் கொட்டி கடை வீதிகளில் அறிவிப்பு செய்வேன்? மக்கள் செவிகளெல்லாம் கேட்பதற்கான சிகிச்சையை நான் எம்மருந்தைக் கொண்டு செய்வேன்?

நீங்கள் இறைவனுக்காக ஆகிவிட்டால் அவன் உங்களுடையவனாய் ஆகிவிடுவான் என்பதனை நிச்சயமாக அறிந்து

*வல்ஜூயி" (2:156) இவ்வாறு செய்யக் காரணம் சில சமயம் மனிதன் நம்பிக்கையிலும் இறைஞானங்களிலும் முன்னேறிடச் செய்வதற்காக அவனது துஆவின் படி அவனோடு இறைவன் நடந்து கொள்கிறான். சில சமயம் தனது விருப்பப்படி அவன் தன்விருபத்திற்குரிய சன்மானத்தை வழங்கிடவும் மனிதனது பதவியை உயர்த்திடவும் அவனை நேசிப்பதின் மூலம் நேர்வழியில் அவனை முன்னேறிடச் செய்யும் பொருட்டு இறைவன் அவ்வாறு நடந்து கொள்கிறான் - நூலாசிரியர்*





கொள்ளுங்கள். நீங்கள் உறங்கிக் கொண்டிருக்கையில் இறைவன் உங்களுக்காக விழித்துக் கொண்டிருப்பான். நீங்கள் உங்களது பகைவர்களை குறித்து கவனமின்றி இருக்கும்போது அவன் அவர்களை கண்காணித்து வருவான். மேலும் உங்களுக்கு விரோதமான அவர்களது சதித் திட்டங்களெல்லாம் முறியடிப்பான். உங்கள் இறைவன் எத்தகைய வல்லமைமிக்கவன் என்பதை நீங்கள் இதுவரை அறிந்ததில்லை. நீங்கள் இதனை அறிந்திருந்தால், இவ்வுலகிற்காக பெரும் கவலை கொள்ளக் கூடிய நிலை ஒரு நாளும் உங்களுக்கு வராது. தன்னிடம் ஒரு செல்வக் குவியலைக் கொண்டுள்ள ஒருவன் அதிலிருந்து ஒரு பைசாவை இழந்து விட்டால் அதற்காக அவன் கண்ணீர் வடிப்பானா? கூச்சல் போடுவானா? அல்லது தன்னை மாய்த்துக் கொள்வானா? இவ்வாறிருக்க இறைவன் உங்களது ஒவ்வொரு தேவையின் போதும் உங்களுக்கு எப்போதும் வழங்கக் கூடிய கருவூலமாக இருக்கிறான் என்பதனை நீங்கள் அறிந்திருந்தால் நீங்கள் உலகிற்காக தம்மை இழந்த நிலையில் மயங்கி இருப்பானேன்?

இறைவன் கிடைப்பதற்கரிய பெரும் கருவூலமாக இருக்கின்றான். நீங்கள் ஒவ்வோர் அடி எடுத்து வைக்கும் போதும் அவன் உங்களுக்கு உதவி புரிகின்றவனாயிருக்கின்றான். எனவே அத்தகைய இறைவனுக்கு மதிப்பளியுங்கள். அவனில்லாமல் நீங்கள் ஒரு பொருட்டல்ல. உங்களது வழிவகைகளும் திட்டங்களும் ஒன்றுமற்றவையாகும்.

நீங்கள் உலகப் பொருள்கள் மீது முற்றிலும் சார்ந்திருக்கின்ற பிற சமுதாயத்தினரை ஒருபோதும் பின்பற்றாதீர்கள். பாம்பானது மண்ணைத் தின்பது போல் அவர்கள் உலகின் அற்பப் பொருள்களையே தின்றுள்ளனர். கழுகுகளும் நாய்களும் பிணங்களைத் தின்பதுபோல் அவர்களும் உலக இச்சை என்னும் பிணங்களையே கவ்வி பிடித்துள்ளனர். அவர்கள் இறைவனை விட்டும் வெகுதூரம் சென்று விட்டனர். அவர்கள் மனிதர்களைத் தெய்வமாக மதித்து வணங்கினர். பன்றியைத் தின்றனர்; மதுவைத் தண்ணீரைப் போல் அருந்தினர். அவர்கள் அளவுக்கு மீறி உலகப் பொருள்கள் மீது விழுந்ததாலும் இறைவனிடமிருந்து உதவி தேடாததாலும் மரணித்து போயினர். ஒரு புறாவானது தனது கூட்டிலிருந்து பறந்து செல்வதைப் போல் அவர்களிடமிருந்து ஆன்மீக ஆவி பரந்துபோய் விட்டது. அவர்களை

உலக இச்சை என்னும் தொழுநோய் பீடித்திருக்கின்ற காரணத்தால் அவர்களின் அகத்தின் எல்லா ஆன்மீக உறுப்புகளையும்அது அரித்து விட்டது. ஆகவே நீங்கள் இத்தகைய தொழுநோய்க்கு பெரிதும் அஞ்சுங்கள். எனினும் நியாயமான அளவில் ஒரு வரம்பிற்குள் நின்று கொண்டு உலகப் பொருள்களினால் பலன் அடைவதிலிருந்து உங்களை நான் தடை செய்யவில்லை. ஆனால் பிற சமுதாயங்களைப் போல் வெறும் உலகப் பொருள்களுக்கு அடிமையாவதையும் அப்பொருள்களையெல்லாம் தந்து உதவக்கூடிய அவ்விறைவனை மறப்பதையுமே நான் தடை செய்கிறேன். உங்களுக்குக் கண்கள் இருக்குமானால் எங்கும் இறைவனே நின்று விளங்குகின்றான் என்பதனையும் மற்றவையெல்லாம் பொருள் அற்றவை என்பதனையும் நீங்கள் கண்டு கொள்வீர்கள். அவனது ஆணை இன்றி உங்களது கைகளை நீட்டவோ மடக்கவோ உங்களால் ஒருபோதும் முடியாது. உயிர் அற்ற ஒருவன் அவனைக் கண்டு நகைப்பான். ஆனாலும் அந்தோ பரிதாபமே! அவன் மரணித்து ஒழிந்திருந்தால் இந்த நகைப்பை விட அவனுக்கு பெரும் நன்மையாக இருந்திருக்குமே!

எச்சரிக்கையாயிருங்கள்! உலக விஷயங்களில் மிக முன்னேற்றம் அடைந்த பிற சமுதாயங்களைக் கண்டு நாமும் அவர்களைப் பின்பற்றலாம் (என) நினைக்காதீர்கள். கேளுங்கள்! அறிந்துக் கொள்ளுங்கள்! அவர்கள் உங்களைத் தன் பக்கம் அழைக்கின்ற அவ்விறைவனை முற்றிலும் அறியாதவர்களாகவும் அவனைப் பற்றிய சிறிதும் கவனம் இல்லாதவர்களாகவும் இருக்கின்றார்கள். அவர்களின் இறைவன் யார்? ஒரு பலவீனமான மனிதனே அவர்களின் இறைவனாவான். இதன் காரணத்தால் அவர்கள் அலட்சியமாக விடப்பட்டிருக்கின்றார்கள். நான் உங்களை உலகச் சம்பாதியத்திலிருந்தோ அல்லது உலகில் தொழில் வியாபாரம் செய்வதிலிருந்தோ தடை செய்யவில்லை. ஆனால் எல்லாம் இவ்வுலகமே என நம்பியிருப்பவர்களைப் பின்பற்ற வேண்டாம் என்றே நான் கூறுகிறேன். உங்களின் ஒவ்வொரு செயல்களிலும் அவை உலக விஷயங்களாகவோ மார்க்க விஷயங்களாகவோ இருந்தாலும் அவற்றிற்காக இறைவனிடம் சக்தியும் உதவியும் தேடக் கூடிய பழக்கம் உங்களில் எப்போதும் இருந்து வரவேண்டியது அவசியமாகும். ஆனால் இவ்விதம் உதவி தேடுவது வரண்டு போன உங்கள் உதடுகளைக் கொண்டதாய் மட்டுமில்லாமல் ஒவ்வொரு அருட்கொடையும்





வானத்திலிருந்தே இறங்குகின்றது என்ற உண்மையான நம்பிக்கை கொண்டதாக இருக்க வேண்டும்.

உங்களின் ஒவ்வொரு காரியத்திலும் ஒவ்வொரு கஷ்ட நஷ்டங்களிலும் வேறு வழி முறைகளை நீங்கள் கடைப்பிடிப்பதற்கு முன் உங்கள் (அறைக்) கதவை அடைத்து விட்டு, இறைவா! எங்களுக்கு வந்திருக்கும் இக்கஷ்டங்களை நீ உனது கருணையால் நீக்கியருள்வாயாக என்று இறைவன் முன்பு சிரம்பணிய வேண்டும். இந்நிலை உங்களிடையே உருவானால் மட்டுமே நீங்கள் உண்மையானவர்களாக ஆக முடியும். அப்போது பரிசுத்த ஆவியானது உங்களுக்கு உதவி புரியும். மேலும் மறைமுகமாக ஏதேனும் வழியும் உங்களுக்காக திறக்கப்படும்.

நீங்கள் உங்களது ஆன்மாவின் மீது கருணை காட்டுங்கள். எவர்கள் இறைவனோடுள்ள தொடர்பை முற்றிலும் துண்டித்து விட்டு முழுமையாக இவ்வுலகப் பொருட்கள் மீதே சரிந்து விட்டார்களோ, இறைவனிடமிருந்து சக்தியை பெறுவதற்காக வேண்டி 'இன்ஷா அல்லாஹ்' (இறைவன் நாடினால்) என்று தங்களது வாயால் கூடச் சொல்லாத அவர்களை நீங்கள் ஒரு போதும் பின்பற்றாதீர்கள்.

உங்களது இறைவன் உங்களின் எல்லாத் திட்டங்களுக்கும் உத்திரமாக இருக்கிறான் என்பதனை நீங்கள் அறிந்து கொள்வதற்காக இறைவன் உங்களது கண்களைத் திறப்பானாக. உத்திரம் விழுந்து விட்டால் கம்புகளும் சட்டங்களும் கூரையில் நிலைத்திருக்க முடியுமா? ஒருபோதும் நிலைத்திருக்க முடியாது. உடனே அவை மொத்தமாக விழுந்து விடும். இதனால் பலர் மரணிக்கலாம். இவ்வாறே உங்களது திட்டங்களும் இறைவனது துணை இல்லாமல் ஒருபோதும் நிலைத்திருக்க முடியாது. ஆகவே நீங்கள் அவனிடம் உதவி தேடாவிடில் அவனது ஆற்றலின் துணையை வேண்டக் கூடிய பழக்கம் உங்களில் காணப்படாவிடில் நீங்கள் எவ்வித வெற்றியும் பெற மாட்டீர்கள். இறுதியில் நீங்கள் பரிதாபகரமாய் மரணமடைவீர்கள். முழுமையானவனும் சக்தியுள்ளவனுமான உங்களது இறைவனை அறியாத பிற சமுதாயத்தினர் எவ்வாறு வெற்றி பெறுகிறார்கள் என்பதைப் பற்றி நீங்கள் கவலைப்பட வேண்டாம். இதன் பதிலாவது, அவர்கள் இறைவனைக் கைவிட்ட காரணத்தால் உலகின் சோதனையில் விடப்பட்டிருக்கிறார்கள். இறைவனது சோதனை சில சமயம் இவ்வாறும் உண்டாவதுண்டு. எவர் இறைவனை விட்டு

விடுகின்றாரோ, இவ்வுலக இச்சைகளிலும் இன்பங்களிலும் விருப்பம் காட்டுகின்றாரோ, உலகச் செல்வங்கள் மீது மோகங் கொள்கிறாரோ அவருக்காக உலகத்தின் வாசல்கள் திறக்கப்படுகின்றன. ஆனால் அவர் ஆன்மீக ரீதியில் வறுமையுடையவரும், ஒன்றுமற்றவருமாவார். இறுதியில் உலக எண்ணங்களிலேயே மரணித்து, அவர் நிரந்தர நரகப் படுகுழியில் தள்ளப்படுகிறார். சில சமயம் இவ்வாறான சோதனையும் உண்டாகிறது. அதாவது, உலக காரியங்களிலும் தோல்வியை சந்திக்கின்றார். ஆனால் முதல் சோதனையைப் போல் இச்சோதனை அவ்வளவு அபாயமானதல்ல. ஏனெனில் முதல் சோதனையில் போடப்படக் கூடியவர் மிகவும் அகங்காரம் கொண்டவராவார். இருந்த போதிலும் இந்த இரு பிரிவினரும் 'மஃலூபி அலைஹிம்' என்னும் இறைவனது கோபத்திற்குரியவர்களாவர். உண்மையான மகிழ்ச்சியின் உறைவிடம் இறைவனேயாவான். எனவே உயிருள்ளவனும், தான் நிலைத்து மற்றவர்களையும் நிலைத்திருக்கச் செய்யக் கூடியவனுமான இறைவனை அறியாதவர்களாகவும், அவனிடம் அலட்சியப் போக்குள்ளவர்களாகவும், அவனை விட்டும் முகம் திரும்பக் கூடியவர்களாகவும் இருக்கும் இந்த மக்கள் உண்மையான மகிழ்ச்சியை எவ்வாறு பெற முடியும்? இந்த இரகசியத்தை புரிந்து கொள்ளக் கூடியவரே பெரும் பாக்கியமானவராய் இருக்கின்றார். இதனை புரியாதவர் அழிகின்றார்.

இவ்விதமே உலக தத்துவ வாதிகளையும் நீங்கள் பின்பற்றாதீர்கள். அவர்களை மதிப்புக்குரியவர்களென நீங்கள் ஒருபோதும் கருதி விட வேண்டாம். அவை அனைத்தும் அறிவீனங்களாகும். உண்மையான தத்துவ ஞானம் என்பது இறைவன் தனது வசனத்தில் கற்றுக் கொடுத்திருப்பதேயாகும். இவ்வுலக தத்துவ வாதத்தின் மீது பற்று வைத்தவர்கள் அழிந்து போயினர். எவர்கள் உண்மையான அறிவையும் தத்துவ ஞானத்தையும் திருக்குர்ஆனில் தேடினார்களோ அவர்களே வெற்றி பெற்றவர்களாவர். நீங்கள் அறிவீனமான வழிகளை ஏன் மேற்கொள்கிறீர்கள்? இறைவன் அறியாத விஷயங்களை நீங்கள் அவனுக்கு கற்றுக் கொடுக்கப் போகிறீர்களா? குருடர்கள் வழி காண்பிப்பார்கள் என்ற எண்ணத்திலா அவர்களைப் பின்பற்றி ஓடுகிறீர்கள்?

அறிவற்றவர்களே! எவர் குருடராய் இருக்கின்றாரோ அவர் எவ்வாறு உங்களுக்கு வழி காட்டுவார்? உண்மையான தத்துவஞானம்





பரிசுத்த ஆன்மாவின் மூலமே கிடைக்கின்றது. இதற்கான வாக்குறுதி உங்களுக்கு அளிக்கப்பட்டிருக்கின்றது. பிறர் அடையாத அந்த பரிசுத்த ஞானங்கள் வரை, அத்தூய்மையான ஆன்மா மூலமாக நீங்கள் கொண்டு செல்லப்படுவீர்கள். அதனை நீங்கள் உண்மையாகவே வேண்டினால் இறுதியில் நீங்கள் அதனைப் பெற்றுக் கொள்வீர்கள். அப்போது இந்த ஞானம்தான் உங்கள் மனத்திற்கு புத்துணர்வையும், வாழ்வையும் அளிக்கக் கூடியது என்றும் திட நம்பிக்கையின் உச்சநிலை வரை உங்களை எடுத்துச் செல்லக் கூடியது என்றும் நீங்கள் நிச்சயமாக அறிந்து கொள்வீர்கள். தாமே பிணத்தை தின்பவர் உங்களுக்கு எங்கிருந்து தூய்மையான உணவை கொண்டு வருவார்? தாமே குருடராய் இருக்கின்றவர் உங்களுக்கு எவ்வாறு வழிகாட்டுவார்? ஒவ்வொரு பரிசுத்தமான ஞானமும் வானத்திலிருந்தே வருகிறது. ஆகவே நீங்கள் இவ்வுலகப் பற்றுள்ளவர்களிடம் எதனை எதிர்ப்பார்க்கிறீர்கள்? எவர்களின் ஆன்மாக்கள் வானத்தை நோக்கிப் போகின்றனவோ அவர்களே அந்த ஞானங்களுக்கு உரியவர்களாவர். தம்மில் மன அமைதி அடையாதவர்கள், உங்களுக்கு எவ்வாறு மன அமைதியையும் நிம்மதியையும் அளிக்க முடியும்? ஆனால் முதலில் உங்களது உள்ளம் பரிசுத்தமடைவது அவசியமாகும். அத்துடன் உண்மையிலும் தூய்மையிலும் நீங்கள் நிலை கொள்வதும் முக்கியமானதாகும். இதன் பிறகே இவையெல்லாம் உங்களுக்கு கிடைக்கும்.

இறைவனுடைய வஹி (வெளிப்பாடு) இனிவராது என்றும் அது நின்று விட்டதென்றும்* மேலும் பரிசுத்த ஆன்மா என்னும் 'ரூஹுல் குத்ஸ்' கடந்த காலங்களில் தான் இறங்கியது; அது இப்போது இறங்கமுடியாது என்றும் நினைக்காதீர்கள். எந்த ஒரு வாசல் அடைக்கப்பட்டாலும் 'ரூஹுல் குத்ஸ்' என்னும் பரிசுத்த ஆன்மா இறங்கக் கூடிய வாசல் ஒருபோதும் அடைக்கப்படமாட்டாது என்பதை நான் உங்களுக்கு உண்மையாகவே கூறுகிறேன். அது உங்கள் உள்ளங்களின் வாயில்களில் நுழைவதற்காக நீங்கள் அதனை

** குர்ஆனுடன் ஷரீஅத் முடிந்து விட்டது. ஆனால் வஹீ (இறைவெளிப்பாடு) முடியவில்லை. ஏனெனில் உண்மை மார்க்கத்தின் உயிராகும். எந்த மார்க்கத்தோடு வஹியின் தொடர் இருக்க மாட்டாதோ அம்மார்க்கம் உயிர் அற்ற பிணத்தைப் போன்றதாகும். அதனோடு இறைவனுக்கு எவ்வித தொடர்பும் இருக்காது - நூலாசிரியர்*

திறந்துவிடுங்கள். பரிசுத்த ஆன்மா தடையின்றிப் நுழையக் கூடிய ஜன்னல்களை நீங்கள் அடைத்து விடுவதன் மூலம் அப்பிரகாசத்திலிருந்து நீங்கள் உங்களையே விலக்கிக் கொள்கிறீர்கள்!

அறிவீனரே! எழும்! அந்த ஜன்னல் கதவை திறந்து வையும். அப்போதுதான் சூரிய ஒளியானது தானாகவே உமது உள்ளத்தில் நுழையும். இறைவன் இவ்வுலக அருட்கொடைகளின் வழிகளையெல்லாம் இக்காலத்தில் உங்களுக்காக அடைக்கவில்லை. மாறாக, தாராளமாக்கியுள்ளான். இவ்வாறிருக்க இப்போது உங்களுக்கு மிக அவசியமாகத் தேவைப்படும் ஆன்மீக அருட்கொடைகளின் வழிகளையெல்லாம் அவன் அடைத்து விட்டான் என்று நினைக்கின்றீர்களா? ஒருபோதுமில்லை. மாறாக அந்த வாசல் மிகத் தாராளமாகத் திறந்து வைக்கப்பட்டிருக்கின்றது. இறைவன் திருக்குர்ஆனில் ‘ஃபாத்திஹா’ அதிகாரத்தில் கற்றுக் கொடுத்திருக்கும் போதனையின்படி முற்காலங்களில் அவனால் அருளப்பட்ட எல்லாவிதமான ஆன்மீக அருட்கொடைகளின் வாசல்களையும் உங்களுக்காக திறந்து வைத்திருக்கும்போது நீங்கள் ஏன் அவற்றை மறுக்கின்றீர்கள்?

நீங்கள் அந்த நீரூற்றிக்குத் தாகம் கொண்டவர்களாக ஆகிவிடுங்கள். அப்போது தண்ணீரும் தானாக உங்களிடம் வந்து சேரும். அந்தப் பாலுக்காக நீங்கள் குழந்தையைப் போல் அழுங்கள். அப்போது தாயின் மார்பிலிருந்து பாலானது தானாகவே சுரக்கும். இறைவன் உங்கள் மீது கருணை செய்யும் பொருட்டு நீங்கள் அக்கருணைக்குரியவர்களாக ஆகிவிடுங்கள். நீங்கள் மன அமைதி அடையும் பொருட்டு துடிதுடிப்புடன் செயல்படுங்கள். ஒரு கரம் வந்து உங்களை ஏற்றுத் தழுவிக் கொள்ளும் பொருட்டு தொடர்ந்து கதறிக் கொண்டே இருங்கள்.

இறைவனை அடையும் பாதை எவ்வளவு கடினமானதாக இருக்கிறது! ஆனால் மரணத்தை ஏற்கத் துணியும் எண்ணத்துடன் அப்பாதாளத்தில் விழக்கூடியவர்களுக்கு அது எளியதாக்கப்படுகிறது. நமக்கு நெருப்பானாலும் சம்மதமே; நமது நேசனாகிய இறைவனுக்காக எரிந்து விடலாம் என்று உள்ளத்தில் முடிவு செய்து கொண்டு அந்நெருப்பில் விழுகின்றனர். இறுதியில் எதனைக் காண்கிறார்கள்? அதுவே சொர்க்கமாக இருக்கிறது. இதைப் பற்றி இறைவன் தனது திருமறையில் இவ்வாறு கூறுகிறான்:





“வஇம்மின்கும் இல்லா வாரிதுஹா கான அலா ரப்பிக்க ஹத்மன் மக்லிய்யா.” (திருக்குர்ஆன் 19:72) அதாவது,

தீயவர்களே! நல்லவர்களே! உங்களில் நரக நெருப்பை கடக்காதவர் எவருமில்லை. ஆனால் எவர்கள் இறைவனுக்காக அந்த நெருப்பில் விழுகின்றார்களோ அவர்கள் நிச்சயமாக இரட்சிக்கப்படுவார்கள். இதற்கு மாறாக எவர் நஃப்ஸே அம்மாரா எனும் தீயவற்றை தூண்டக் கூடிய உள்ளத்திற்காக அந்த நெருப்பில் நடக்க முற்படுவாரோ அவரை அந்நெருப்பே தின்று விடும். ஆகவே எவர்கள் இறைவனுக்காகத் தங்களது மனயிச்சைகளோடு போர் புரிவார்களோ அவர்கள் அருளுக்குரியவர்கள். இதற்கு மாறாக எவர்கள் தங்களது மனயிச்சைகளுக்காக இறைவனோடு போர் புரிவார்களோ, அவனோடு இணங்கி செயல்பட மாட்டார்களோ அவர்கள் பாக்கியம் கெட்டவர்களாவர். எவர் தனது இச்சைக்காக இறைவனது கட்டளையை மீறுவாரோ அவர் ஒருபோதும் வானத்தில் நுழைய மாட்டார். ஆகவே திருக்குர்ஆனின் ஒரு புள்ளியோ, எழுத்தோ உங்களுக்கு விரோதமாய் சாட்சியம் கூறாமலும் அதன் காரணமாக நீங்கள் பிடிபடாமலிருக்க முயலுங்கள். ஏனெனில் சிறு கெடுதியும் கூட தண்டனைக் குரியதாகும். வாழ்நாட்கள் மிகக் குறைவானவையாய் இருக்கின்றன. ஆனால் கடமைகளோ மிக அதிகமாயிருக்கின்றன. மாலைப்பொழுது நெருங்கிக் கொண்டிருப்பதை முன்வைத்து கடமைகளை நிறைவேற்றுவதில் விரைவுடன் செயல்படுங்கள். இறைவன் முன்பு எவைகளையெல்லாம் சமர்ப்பிக்க வேண்டியதிருக்கின்றதோ அவற்றில் எவையேனும் விடுபட்டு நஷ்டம் உண்டாவதற்குக் காரணமாகாமலிருக்க அவற்றைத் திரும்பத் திரும்ப கவனித்து வாருங்கள். அரசவையில் சமர்ப்பிப்பதற்கு தகுதியற்ற குறைகள் நிரம்பிய போலிப் பொருட்களை நீங்கள் எடுத்துச் செல்லக் கூடியவர்களாக ஆகிவிடக் கூடாது.

உங்களிடையே சிலர் ஹதீஸை முற்றிலும் ஒப்புக் கொள்வதில்லை என்று நான் கேள்வியுற்றேன். அவர்கள் அவ்வாறு செய்கிறார்கள் என்றால் அது பெரும் தவறாகும். இவ்வாறு செய்யுமாறு நான் அவர்களுக்கு ஒருபோதும் போதிக்கவில்லை. மேலும் எனது நம்பிக்கை என்னவெனில் உங்களுக்கு நேர்வழி காட்டுவதற்காக இறைவன் மிக முக்கியமான மூன்றை உங்களுக்காக வழங்கியுள்ளான்.

அவற்றில் முதன்மையானது திருக்குர்ஆனேயாகும்.* இதில் இறைவனின் ஏகத்துவத்தைப் பற்றியும் அவனது கம்பீரம் மகத்துவத்தைப் பற்றியும் கூறப்பட்டுள்ளன. மேலும் இதில் யூத கிறிஸ்தவர்களுக்கிடையில் காணப்பட்ட வேற்றுமைகளுக்கும் தீர்ப்பு வழங்கப்பட்டுள்ளது. எவ்வாறெனில் ஈசப்னு மர்யம் சிலுவையில் கொல்லப்பட்டார். மேலும் அவர் சாபத்திற்கு ஆளானார். ஏனைய நபிமார்களைப் போல் அவருக்கு ஆன்மீக உயர்வு (ரஃபஅ) ஏற்படவில்லை என்ற மாறுபாடானதும் தவறானதுமான கருத்துகளுக்கு நல்ல தீர்ப்பு வழங்கப்பட்டுள்ளது. மேலும் ஏக இறைவனைத் தவிர நீங்கள் எப்பொருளையும் அதாவது - மனிதன், மிருகம், சூரியன், சந்திரன், நட்சத்திரங்கள் உலகபொருட்கள் உங்களது மன இச்சைகள் ஆகியவற்றை வணங்குவதை குர்ஆனில் தடை செய்யப்பட்டிருக்கின்றது. ஆதலால் மிகக் கவனமாய் இருங்கள். இறைவனது போதனைக்கும் குர்ஆனின் நேர்வழிக்கும் மாறாக ஒரு அடிகூட எடுத்து வைக்க முற்படாதீர்கள்.

எவர் திருக்குர்ஆனின் எழுநூறு கட்டளைகளில் ஒரு சிறிய கட்டளையையாவது மீறுவாரோ அவர் தனது இரட்சிப்பின் வாசலைத் தனது கரங்களால் தானே அடைத்துக் கொள்கிறார் என்பதனை நான் உங்களுக்கு உண்மையாவே கூறுகிறேன். உண்மையானதும் முழுமையானதுமான இரட்சிபுக்குரிய வழிகளை திருக்குர்ஆனே நமக்குத் திறந்து தந்திருக்கிறது. எஞ்சியிருப்பவை அனைத்தும் அதன் நிழல்களாகும். ஆகவே நீங்கள் திருக்குர்ஆனை மிகவும் கருத்தூன்றிப்

* *நேர்வழிக்கான இரண்டாவது, சுன்னத் ஆகும். திரு நபி (ஸல்) அவர்கள் நடந்து காட்டிய தூய்மையான முன் மாதிரிகளாகும். உதாரணமாக, எம் பெருமானார் (ஸல்) அவர்கள் தொழுகையை இவ்வாறு தொழ வேண்டும் என்பதனை செய்து காட்டினார்கள். நோன்பு நோற்றுக்காட்டி தந்தார்கள். இதுவே சுன்னத் ஆகும். இறைவனது சொல்லை செயல் மூலம் வெளிப்படுத்தினார்கள். இதன் பெயரே சுன்னத். நேர்வழி கிடைக்க மூன்றாவது மார்க்கம் ஹதீதாகும். இவை எம் பெருமானாருக்குப் பின் அவர்களின் கூற்றுக்கள் ஒன்று சேர்க்கப்பட்டவையாகும். ஹதீதுகள், குர்ஆன் சுன்னத்துக்குப் பின் மூன்றாவது இடத்தைப் பெறுகிறது. ஏனெனில் பல ஹதீதுகள் யூகத்தினாலானவையாயிருக்கின்றன. இருப்பினும் அதோடு சுன்னத்தும் சேர்ந்து விட்டால் அது அந்த ஹதீதை உறுதி செய்யும்.*





படியுங்கள். அதனை மிகவும் மேலாக நேசியுங்கள். வேறெதனோடும் வைக்காத பற்றை அதனோடு வையுங்கள். ஏனெனில் இறைவன் என்னை நோக்கி 'அல்கைரு குல்லுஹூ ஃபில் குர்ஆன்' என்று கூறியுள்ளான் அதாவது எல்லாவிதமான நலன்களும் குர்ஆனில் உள்ளன.

உண்மையும் இதுவேயாகும். திருக்குர்ஆனைக் காட்டிலும் மற்றவற்றிற்கு முக்கியத்துவம் அளிக்கும் மக்களைக் குறித்து நான் பரிதாபம் கொள்கிறேன். உங்களின் எல்லாவிதமான வெற்றிகளுக்கும் இரட்சிப்பிற்கும் ஊற்றின் உறைவிடம் குர்ஆனில் உள்ளது. திருக்குர்ஆனில் காணப்படாத உங்களது எந்தமார்க்கத் தேவையுமில்லை! இறுதி நாளில் உங்களது நம்பிக்கை பொய்யானதா, உண்மையானதா எனப் பிரித்து காட்டக் கூடிய நூல் குர்ஆனேயாகும். குர்ஆன் மூலமாக அல்லாமல் உங்களுக்கு நேர்வழி காட்டக் கூடிய நூல் வானத்தின் கீழ் வேறொன்றும் இல்லை. திருக்குர்ஆனை உங்களுக்கு அருளியிருப்பதன் மூலம் மாபெரும் அருட்கொடையை இறைவன் உங்களுக்காக அளித்திருக்கின்றான். உங்களுக்காக அருளப்பட்டிருக் கின்ற இவ்வேதம் கிறிஸ்தவர்களுக்கு வழங்கப்பட்டிருந்தால் நிச்சயமாக அவர்கள் வழிதவறியிருக்க மாட்டார்கள். உங்களுக்கு அருளப்பட்ட இந்த அருட்கொடையும், நேர்வழியும் தவ்ராத்திற்கு பதிலாக யூதர்களுக்கு வழங்கப்பட்டிருந்தால் அவர்களில் சில பிரிவினர் இறுதி நாளை மறுத்திருக்கவே மாட்டார்கள் என்று நான் உண்மையாக கூறுகிறேன். எனவே உங்களுக்கு அருளப்பட்ட இந்த அருட் கொடைக்கு மதிப்பளியுங்கள். இது மிகவும் அன்பார்ந்த அருட்கொடையும் கிடைப்பதற்கரிய செல்வமும் ஆகும். திருக்குர்ஆன் அருளப்படாதிருந்தால் முழு உலகமும் அசுத்தமான இழிந்த பொருளாக ஆகியிருக்கும். குர்ஆன் எவ்வாறான சிறந்த நூல் என்றால் அதன் முன் ஏனைய எல்லா வழிகாட்டல்களும் பொருளற்றவையாகும்.

பைபிளின் புதிய ஏற்பாட்டை புறாவின் உருவத்தில் வெளியான பரிசுத்த ஆவியே கொண்டு வந்தது. புறா ஒரு பலவீனமான பறவையாகும். அதை ஒரு பூனையும் பிடித்து விடமுடியும். இதன் காரணமாக கிறிஸ்தவர்கள் நாளுக்கு நாள் பலவீனம் என்னும் படுகுழியில் விழுந்து கொண்டே போகின்றனர். மேலும் அவர்களிடம் ஆன்மீகம் எஞ்சியிருக்கவில்லை. ஏனெனில் அவர்களின் எல்லா விசுவாசங்களின் அடிப்படையும் புறாவின் மீதே இருந்தது. இதற்கு

மாறாக குர்ஆனின் பரிசுத்த ஆவியானது மகத்துவமான உருவில் வெளியானது. அது தன்னைக் கொண்டு பூமியிலிருந்து வானங்கள் வரை முழு பூமியையும் வானங்களையும் நிரப்பி விட்டது. ஆகவே அப்புறாவின் நிலை எங்கே? திருக்குர்ஆனில் கூறப்பட்டிருக்கும் மகத்துவமான அந்தப் தோற்றம் எங்கே? ஒரு மனிதன் திருக்குர்ஆனின் வெளிப்படையான சொற்களையும் அவற்றின் பொருள்களையும் விட்டுவிடாமல், மறுக்காமல் அவற்றிற்கேற்ப செயல்பட்டு வந்தால் அவனை அந்த திருக்குர்ஆன் ஒரே வாரத்தில் தூய்மையான வனாக்கிவிடும். நீங்கள் திருக்குர்ஆனை விட்டும் விலகி ஓடாமலிருந்தால் அது உங்களை இறைத் தூதர்களைப் போன்று ஆக்க முடியும். திருக்குர்ஆனைத் தவிர வேறு எந்த நூலாவது அதனைப் படிப்பவர்களுக்கு ஆரம்பத்திலேயே இவ்வாறான துஆவை கற்றுக் கொடுத்திருக்கின்றதா? மேலும் இந்த நம்பிக்கையை வேறெந்த வேதமாவது உங்களுக்கு அளித்துள்ளதா?

'இஹ்தினஸ்ஸிராத்தல் முஸ்தக்கீம் ஸிராத்தல்ல தீன அன்அம்த அலைஹிம்'

அதாவது: இறைவா! நீ எங்களுக்கு முன்னுள்ள நபி, ரசூல் ஸித்தீக், ஷஹீது, ஸாலிஹ் என்பவர்களுக்கு காண்பித்துக் கொடுத்த உனது அருட்கொடையின் வழிகளை எங்களுக்கும் காண்பித்தும் கொடுத்தருள்வாயாக. (1:6-9)

ஆகவே நீங்கள் உங்களின் தைரியத்தையும் உறுதியையும் கைவிட்டு விடாமல் முன்னேறுங்கள். திருக்குர்ஆனின் அழைப்பை நீங்கள் ஒருபோதும் ஏற்க மறுக்காதீர்கள். அது உங்களின் முன்னோர்களுக்கு அருளப்பட்ட அருட்கொடையை உங்களுக்கு அளிக்க விரும்புகின்றது. இஸ்ரவேலரின் நாட்டையும் அதன் புனித நகரமாகிய பைத்துல் முகத்தஸையும் அவன் (இறைவன்) உங்களுக்கு அளிக்கவில்லையா? இன்றுவரை உங்களின் பிடியிலேயே இருந்து வருகின்றனவே?

நம்பிக்கையில் உறுதி இழந்தவர்களே! கோழைகளே! உங்களுடைய இறைவன் இஸ்ரவேலருக்குரிய பௌதீக சம்பந்தமான சொத்துக்கள் முழுமைக்கும் உங்களைப் பிரதிநிதியாக ஆக்கியிருக்கின்றான். ஆயினும் அவனால் ஆன்மீக ரீதியில் அவர்களுக்கு உங்களைப் பிரதிநிதியாக ஆக்க முடியவில்லை என்பது





உங்களது எண்ணமா? மாறாக இறைவன் உங்களுக்கு அவர்களை விட அதிகமான அருட்கொடைகளை அளிக்க நாடுகிறான். இறைவன் அவர்களது ஆன்மீக பௌதீக சம்பந்தமான இருவகைச் செல்வங்களுக்கும் வாரிசாக உங்களை ஆக்கி இருக்கிறான். ஆனால் இறுதி நாள் வரை உங்களுக்கு வாரிசாக வேறு எவராலும் வர இயலாது.

இறைவனது வஹி, இல்ஹாம் (வெளிப்பாடு) இறைவனோடு உரையாடுதல் போன்ற அருட்கொடைகளிலிருந்தும் இறைவன் உங்களை ஒருபோதும் விலக்கி வைக்க மாட்டான். மாறாக உங்கள் முன்னோர்களுக்கு அருளப்பட்ட எல்லா அருட்கொடைகளையும் உங்களுக்கு அவன் முழுமைப்படுத்துவான்.

ஆனால் எவர் இறைவனது வெளிப்பாடு தன் மீது இறங்காதிருக்கையில் அவ்வாறு இறங்கியதாக அவ்விறைவன் மீது அவமரியாதையாக பொய் பேசுவானோ அல்லது தான் இறைவனோடு உரையாடாமலிருக்கையில் அவனோடு உரையாடக் கூடிய பாக்கியம் தனக்குக் கிடைத்தாக இட்டுக் கட்டிக் கூறுவாரோ அவர் நிச்சயமாக அழித்தொழிக்கப்படுவார் என்பதை அவ்விறைவனையும் அவனது மலக்குகளாகிய வானவர்களையும் சாட்சியாக வைத்துக் கூறுகிறேன். ஏனெனில் அவன் தன்னைப் படைத்த இறைவன் மீது பொய்யாக இட்டுக்கட்டி கூறியுள்ளான். அவனை வஞ்சித்துள்ளான். மேலும் கொடிய எல்லை மீறலையும் இறுமாப்பையும் மேற்கொண்டுள்ளான். ஆகவே! இந்த நிலைக்கு நீங்கள் அஞ்சுங்கள். பொய்யான வெற்றுக் கனவுகளை உண்டுபண்ணக் கூடியவர்கள் மீதும் இறைவனோடு உரையாடுவதாகப் பொய்யான வாதம் செய்பவர்கள் மீதும் இறைவனது சாபம் உண்டாகும். இது எவ்வாறென்றால் இறைவனே இல்லை என்று அவர்கள் தங்களது உள்ளத்தில் நினைப்பது போன்றதாகும். ஆனால் அவர்கள் இறைவனது கடும் தண்டனைக்கு ஆளாவார்கள். மேலும் அவர்களது தீய நாட்கள் அவர்களை விட்டும் அகன்று போகாது. ஆகவே நீங்கள் உண்மையிலும் நேர்மையிலும் தக்வா என்னும் இறையச்சத்திலும் நிலை நின்று இறைவனை நேசிப்பதில் முன்னேறுங்கள். உங்களது உயிர் இருக்கும்வரை இதனையே உங்களது பணியாக கருதுங்கள். இதன்பின் உங்களில் யாரை இறைவன் விரும்புவானோ அவரை தன் உரையாடலின் அருளுக்கும் ஆளாக்குவான். இதன் மீது உங்களுக்கு எவ்வித விரும்பமும் இருக்கக் கூடாது. ஏனெனில் மன இச்சையின் காரணத்தால் ஷெய்த்தானின்

தொடர்பானது உங்களுக்கு வரத் தொடங்கி விடக் கூடும். இதனால் பலர் நாசம் அடைந்து விடுகிறார்கள். ஆகவே நீங்கள் இறை தொண்டு செய்வதிலும் இறைவனை வணங்குவதிலும் மிக்க ஈடுபாடு கொண்டிருங்கள். நீங்கள் இறைவனது எல்லாக் கட்டளைகளுக்கும் கட்டுப்பட்டு நடக்க வேண்டும் என்பதிலும், உறுதி நம்பிக்கையில் முன்னேற்றத்தை விரும்ப வேண்டும் என்பதிலும் உங்களின் முழு முயற்சியும் இருக்க வேண்டும். இரட்சிப்பிற்காகவோ இறைவெளிப்பாட்டைக் காட்டுவதற்காகவோ முயற்சி மேற்கொள்ளக் கூடாது.

திருக்குர்ஆன் உங்களுக்காக ஏராளமான புனிதக் கட்டளைகளை வகுத்துள்ளது. அவற்றுள் ஒன்று, இணைவைப்பதிலிருந்தும் நீங்கள் உங்களை முற்றிலும் விலக்கிக் கொள்ள வேண்டும் என்பதாகும். ஏனெனில் இணை வைப்பவன் இரட்சிப்பின் ஊற்றினை அடையும் நற்பேற்றினை இழந்தவனாக இருக்கிறான். நீங்கள் பொய் பேசாதீர்கள். ஏனெனில் பொய்யும் இணை வைப்பதின் ஒரு பகுதியாகும்.

திருக்குர்ஆன் உங்களுக்கு பைபிளின் புதிய ஏற்பாட்டைப் போல் அந்நிய பெண்களை நீங்கள் தீய பார்வையுடனோ காம இச்சையுடனோ பார்க்க வேண்டாம்; இது அல்லாமல் அவர்களை பார்ப்பது கூடுமானது என்று மட்டும் கூறவில்லை. மாறாக தீய பார்வையுடனோ நல்ல பார்வையுடனோ நீங்கள் அவர்களை அறவே பார்க்கக் கூடாதென்றே அது கூறுகிறது. காரணம் இவையெல்லாம் உங்களுக்குத் தடுமாற்றத்தை ஏற்படுத்தக் கூடிய இடங்களாகும். மேலும் அந்நிய பெண்களுக்கு எதிரில் நீர் இருக்கும் போது உமது கண்கள் உறங்குவது போன்ற நிலையில் இருப்பது அவசியமாகும். அவளது உருவத்தைப் பற்றிய எவ்வித அறிவும் உமக்கு இருத்தலாகாது. கண் நோயின் ஆரம்பத்தில் கண்ணீர் வடியும் போது மங்கலான பார்வையின் நிலையைப் போல் இருக்க வேண்டும்.

திருக்குர்ஆன் உங்களுக்கு புதிய ஏற்பாட்டைப் போல் போதை உண்டாகும் வரை மது அருந்த வேண்டாம் என்று கூறவில்லை. மாறாக நீ மதுவை அருந்தவே வேண்டாம். இல்லாவிடின் உங்களுக்கு இறைவனை அடையும் வழி கிடைக்காது. மேலும் இறைவன் உங்களோடு உரையாடமாட்டான். மேலும் அசுத்தங்களிலிருந்தும் அவன் உங்களை தூய்மைப்படுத்த மாட்டான் என்றே திருக்குர்ஆன் கூறுகிறது. மேலும் இது ஷெய்த்தானால் உண்டாக்கப்பட்ட





தொன்றாகும். ஆகவே இதிலிருந்து தப்பித்துக் கொள்ள வேண்டும் என்று அது கூறுகிறது.

திருக்குர்ஆன் உங்களுக்கு புதிய ஏற்பாட்டைப் போல் உனது சகோதரர் மீது நீர் காரணமில்லாமல் கோபம் கொள்ள வேண்டாம் என்று மட்டும் கூறவில்லை. மாறாக உங்கள் கோபத்தை மட்டும் அடக்கினால் போதாது. அத்துடன் ‘தவாஸவ் பில் மர் ஹமா’ (ஒருவருக்கொருவர் கருணை புரியுமாறு அறிவுரை கூறவேண்டும் - திருக்குர்ஆன் 90:18) என்பதன் படியும் செயல்படுங்கள் எனவும் இதனைக் கடைபிடித்தொழுகுமாறு மற்றவர்களுக்கும் நீங்கள் கூறிக் கொண்டே இருங்கள் எனவும் மேலும் நீங்கள் மட்டும் கருணை காட்டினால் போதாது; உங்களது எல்லா சகோதரர்களுக்கும் கருணை காட்டுமாறு போதனை செய்து கொண்டிருங்கள் எனவும் அது கூறுகிறது.

திருக்குர்ஆன் உங்களுக்கு புதிய ஏற்பாட்டைப் போல் விபசாரத்தைத் தவிர உனது மனைவியின் பரிசுத்த மற்ற ஒவ்வொரு செயல் மீதும் நீங்கள் பொறுமையைக் கடை பிடியுங்கள் நீங்கள் அவளை விவாகரத்து செய்ய வேண்டாம் என்று கூறவில்லை. மாறாக ‘அத்தைய்யிபாத்து லித்தைய்யிபீன்’ என்று கூறுகிறது. (அதாவது, நல்ல பெண்கள் நல்ல ஆண்களுக்குத் தகுந்தவர்கள் ஆவர் - திருக்குர்ஆன் 24:27) தூய்மை இல்லாதது தூய்மையுடன் சேர்ந்து இணைந்திருக்க முடியாது என்பது குர்ஆனின் கருத்தாகும். எனவே உங்களது மனைவி விபசாரம் செய்யாவிட்டாலும் அவள் காம இச்சையுடன் மற்றவர்களை பார்க்கிறாள்; அவர்களை கட்டியணைக்கிறாள். விபசாரத்திற்குரிய முன்னோடியான செயல்கள் அவளிடமிருந்து வெளிப்படுகின்றன. அவை முழுமையை அடையவில்லையென்றாலும் அவள் தனது நிர்வாணத்தை மற்றவர்களுக்குக் காட்டுகிறாள். அவள் இணைவைப்பவளாகவும் குழப்பம் விளைவிப்பவளாகவும் இருக்கிறாள். நீங்கள் எந்தப் பரிசுத்த இறைவன் மீது நம்பிக்கை கொண்டிருக்கிறீர்களோ அவனோடு அவள் வெறுப்புணர்ச்சி கொண்டவளாகவும் இருக்கிறாள். அவள் இத்தீய செயல்களை விட்டும் மனந் திரும்பாவிடில் நீங்கள் அவளை விவாகரத்து செய்துவிடலாம். ஏனெனில் அவள் தனது செயல்களால் உங்களை விட்டும் பிரிந்து போய்விட்டாள். இப்போது அவள் உமது உடம்பின் ஒரு பகுதியாக இல்லை. ஆகவே வெட்கம் கெட்ட நிலையில் இப்போது நீங்கள் அவளுடன் வாழ்க்கை நடத்துவது ஆகுமானதன்று. ஏனெனில் இப்போது அவள் உமது உடலின் பகுதியாக இல்லை. அவள் அசுத்தம்

நிரம்பிய, அழுகிய நாற்றமெடுக்கும் ஓர் உறுப்பாக இருக்கிறாள். ஆதலின் இவ்வுறுப்பானது துண்டித்து ஒதுக்கப்படவேண்டிய ஒன்றாகும். இல்லையெனில் இது மற்ற உறுப்புகளையும் அசுத்தமாக்கிவிடும். இதனால் நீங்கள் மரணித்து விடலாம்.

திருக்குர்ஆன் உங்களை புதிய ஏற்பாட்டைப்போல் ஒருபோதும் சத்தியம் செய்ய வேண்டாம் என்று கூறவில்லை. மாறாக முட்டாள்தனமான சத்தியம் செய்வதிலிருந்து அது உங்களை தடை செய்கிறது. ஏனெனில் சில சந்தர்ப்பங்களில் சத்தியம் செய்வது நல்ல தீர்ப்பு உண்டாவதற்கான ஒரு வழி முறையாயிருக்கிறது. மேலும் இறைவன் உண்மை நிரூபணமாவதற்குரிய எந்த வழியையும் வீணாக்க விரும்புவதில்லை. இதனால் அவனுடைய குறிக்கோள் மறுக்கப்பட்டு விடுகிறது. சர்ச்சைக்குரிய விஷயத்தில் எந்த மனிதனும் சாட்சியமளிக்காவிட்டால் அப்போது தீர்ப்புக்காக இறைவனது சாட்சியம் அவசியமாகத் தேவைப்படுவது இயற்கையான ஒன்றாகும். எனவே சத்தியம் செய்வது இறைவனை சாட்சியாளனாக ஆக்குவதற்காக ஆகும்.

மேலும் திருக்குர்ஆன் உங்களுக்கு பைபிளின் புதிய ஏற்பாட்டைப்போல் எந்த ஓரிடத்திலும் அக்கிரமக்காரர்களை எதிர்க்க வேண்டாம் என்று கூறவில்லை. மாறாக ‘ஜஸாவு ஸய்யிஅத்தின் ஸய்யிஅத்தும் மிஸ்லுஹா. ஃபமன் அஃபா வ அஸ்லஹ ஃபஅஜ்ருஹூ அலல்லாஹ்’ (திருக்குர்ஆன் 42:41) என்று கூறுகிறது. அதாவது, தீங்குக்குரிய கூலி அதே அளவில்லான தீங்கேயாகும்; ஆயினும் எவர் கண்டும் காணாதிருந்து பாவத்தை மன்னித்து விடுகிறாரோ - மேலும் அந்த மன்னிப்பினால் எந்தவொரு தீமையும் ஏற்படாமல் ஏதாவதொரு சீர்திருத்தம் ஏற்படுமோ இறைவன் அவர் மீது மகிழ்ச்சி அடைவான். மேலும் அவருக்கு இதன் பிரதி பலனையும் அளிப்பான். ஆகவே திருக்குர்ஆனின் அடிப்படையில் எல்லா இடங்களிலும் பழிக்குப் பழிவாங்குவது புகழத்தக்கதன்று. அல்லது எல்லா சந்தர்ப்பங்களிலும் மன்னிப்பு அளிப்பதும் போற்றதக்கதன்று. மாறாக சூழ்நிலைக்கேற்பச் செயல்படவேண்டும். எனவே பழிவாங்குவதும் மன்னிப்பு அளிப்பதும் சந்தர்ப்பத்திற்கேற்றவாறும் அதனால் விளையும் நன்மையைப் பொருத்தும் இருக்கவேண்டுமேயன்றி தனது போக்கில் கட்டுப்பாடின்றி செயல்படக் கூடாது என்பது திருக்குர்ஆனின் கருத்தாகும்.





திருக்குர்ஆன், புதிய ஏற்பாட்டைப் போல் உங்களது பகைவர்களை நேசியுங்கள் என்று மட்டும் கூறவில்லை. மாறாக எவரும் உங்களுக்கு பகைவனாக தனிப்பட்ட நிலையில் இருக்கலாகாது. உங்கள் அனுதாபம் ஒவ்வொருவர் மீதும் பொதுவானதாக இருக்க வேண்டும். ஆனால் எவர் உமது இறைவனுக்கும் திருத்தூதருக்கும், இறைவனது வேதத்திற்கும் பகைவராக காணப்படுவாரோ அவரே உமக்கும் பகைவராக இருக்கிறார். ஆகவே நீங்கள் அப்படிப்பட்டவர்களுக்காக அறிவுரை செய்வதிலிருந்தும் துஆச் செய்வதிலிருந்தும் அவர்களை வெறுத்தொதுக்கிவிட வேண்டாம். நீங்கள் அவர்களின் செயல்கள் மீதே பகைமை பாராட்ட வேண்டுமேயன்றி அவர்கள் மீது அல்ல. மேலும் அவர்கள் சீர்திருத்தம் அடைவதற்காக முயற்சி செய்ய வேண்டும். இதைப் பற்றி இறைவன் கூறுவதாவது,

“இன்னல்லாஹ யஃமுருகும்பில் அத்லி வல் இஹ்ஸானி வஈதாயிதில் குர்பா.” (திருக்குர்ஆன் 16:91)

இறைவன் உங்களிடம் என்ன நாடுகிறான்? நீங்கள் எல்லா மனிதர்களுடனும் நீதியுடன் நடந்து கொள்ள வேண்டும் என்பதேயாகும். மேலும் இதை விட மேலாக, எவர்கள் உங்களுக்கு நன்மை செய்யவில்லையோ அவர்களுக்கும் நீங்கள் நன்மை செய்ய வேண்டும். எவ்வாறு தாய்மார்கள் தங்களின் குழந்தைகளுடன் நடந்து கொள்கிறார்களோ அவ்வாறு, நீங்கள் இறைவனுடைய படைப்பினங்களோடு அவர்களின் உண்மையான உறவினர்களைப்போல் அனுதாபத்துடன் நடந்து கொள்ளுங்கள்.

ஏனெனில், உதவி செய்வதில் தன்னை வெளிப்படுத்திக் காட்ட வேண்டும் என்ற உணர்ச்சியும் அந்தரங்கமாக உள்ளது. மேலும் உதவி புரிபவர் தான் புரியும் உதவியைச் சில சமயம் வெளிப்படுத்தியும் விடுகிறார். ஆனால் எவர் தாயைப்போல் இயல்பான உணர்ச்சியுடன் நன்மை புரிவாரோ அவன் ஒருபோதும் தன்னை வெளிப்படுத்திக் கொள்ள மாட்டார். ஆகவே தாயைப் போலுள்ள இயல்பான உணர்ச்சியே நன்மைகளின் மிகவும் மேலான நிலையாகும்.

இந்த வசனம் படைப்பினங்களுடன் மட்டும் சம்பந்தப்பட்டதன்று. மாறாக இறைவனோடும் சம்பந்தப்பட்டதாகும். இறைவனுடன் நீதியுடன் நடந்து கொள்ளுதல் என்றால் அவனது நன்கொடைகளை நினைவு கூர்ந்து அவனுக்குக் கீழ்ப்படிதலாகும்.

இறைவனோடு ‘இஹ்ஸான்’ (நன்மை) செய்தல் என்றால் அவனைப் பார்த்துக் கொண்டிருப்பதைப் போல் அவனது உள்ளமையில் நிச்சய உறுதி கொள்ள வேண்டும் என்பதாகும். இறைவனோடு ‘ஈத்தாயிதல் குர்பா’வின் சம்பந்தம் என்னவென்றால் அவனை வணங்குவது சுவர்க்கத்தின் மீதுள்ள ஆசையாலோ நரகத்தின் மீதுள்ள அச்சத்தினாலோ இருக்கக்கூடாது. சுவர்க்கமும் நரகமும் இல்லை என வைத்துக் கொண்டாலும் அப்போதும் அவன் மீது கொண்டுள்ள நேச உணர்ச்சியிலும் அவனுக்குக் கீழ்ப்படிவதிலும் எவ்வித வேறுபாடும் காணப்படக் கூடாது என்பதாகும்.

மேலும் எவர்கள் உங்கள் மீது சாபமிடுவார்களோ அவர்களுக்காக அருளை நாடுங்கள் என்று புதிய ஏற்பாட்டில் எழுதப்பட்டிருக்கின்றது. ஆனால் திருக்குர்ஆன் நீங்கள் சுயமாக எதையும் செய்யாதீர்கள். இறைவனுடைய தோற்றங்களுக்கெல்லாம் இருப்பிடமாகிய உங்களுடைய இருதயத்திடம் இத்தகைய மனிதனோடு எவ்வாறு நடந்து கொள்ள வேண்டும் என தீர்ப்பு கேளுங்கள் என்று அது கூறுகிறது. ஆகவே சாபமிடுபவன் கருணை காட்டுவதற்கு தகுதியுள்ளவன் என்றும் வானத்தில் அவன் மீது எவ்வித சாபமும் இல்லை என்றும் இறைவன் உங்களது இருதயத்தில் போட்டால் நீங்கள் இறைவனுக்கு எதிரானவர்களாய் ஆகாமலிருக்க அவன் மீது நீங்களும் சாபம் இடாதீர்கள். இதற்கு மாறாக உங்களது மன சாட்சியானது அவனை ஒரு நிரபராதியாக ஏற்றுக் கொள்ளாவிடிலோ மேலும் வானத்தில் அம்மனிதன் மீது சாபம் உண்டு என உங்கள் இருதயத்தில் போடப்பட்டாலோ நீங்கள் அம்மனிதனுக்காக அருளை நாடாதீர்கள். ஏனெனில், ஷெய்த்தானுக்காக எந்த நபியும் அருளை நாடவில்லை. மேலும் எந்த நபியும் சாபம் இடுவதிலிருந்தும் ஷெய்த்தானை விட்டு வைக்கவில்லை. ஆயினும் எவர் மீதும் நீங்கள் சாபமிட அவசரப்படாதீர்கள். ஏனெனில், பெரும்பாலான தீய யூகங்கள் பொய்யானவையாகும். பெரும்பாலான சாபங்கள் தங்கள் மீதே விழுகின்றன. ஆகவே மிக கவனமாக செயல்படுங்கள். எவ்வேலையாயினும் நன்றாக ஆராய்ந்தபின் செய்யத் துணியுங்கள். அத்துடன் இறைவனது உதவியையும் தேடி கொண்டிருங்கள். ஏனெனில் நீங்கள் குருடர்களாயிருப்பதால் நீதிமான்களை அநீதிக்காரர்களாகவும் உண்மையானவர்களை பொய்யர்களாகவும் எண்ணி விடலாகாது. இதனால் நீங்கள் உங்கள் இறைவனை





வெறுப்படையச் செய்வீர்கள். மேலும் உங்களது நல்ல காரியங்கள் செயல்கள் வீணாகிப் போய் விடலாம்.

இவ்வாறே புதிய ஏற்பாட்டில் நீங்கள் உங்களது நற்செயல்களை மக்களுக்கு முன் காட்டுவதற்காக செய்யாதீர்கள் என்று கூறப்பட்டிருக்கிறது. இதற்கு மாறாக திருக்குர்ஆன் கூறுகிறது: நீங்கள் எவ்வேலைகளைச் செய்தாலும் அவற்றை எல்லாம் மக்கள் முன் மறைக்க வேண்டாம். மாறாக, நீங்கள் உங்களது சில நற்செயல்களை மறைப்பதால் உங்களுக்கும் ஆன்மாவுக்கும் நன்மையுண்டாகும் என்று நினைத்தால் அந்த நன்மையைக் கருத்திற் கொண்டு அவற்றை மறைவாகவே செய்யுங்கள். சில செயல்களை வெளிப்படுத்திக் காட்டுவதால் பொது மக்களுக்கு மிக்க நன்மை விளையும் என்று அறிந்தால் அவற்றை மற்றவர்கள் அறியும்படியாகவே செய்யுங்கள். ஏனென்றால் இதனால் உங்களுக்கு இரு பிரதிபலன்கள் கிடைக்கும். மேலும் நல்ல காரியம் செய்வதற்குத் துணிவு இல்லாத பலவீனர்கள் உங்களை பின்பற்றுவதன் மூலம் அவர்களும் அந்த நல்ல காரியத்தைச் செய்யத் துணிவர் என்றும் திருக்குர்ஆன் கூறுகிறது. சுருங்கச் சொல்லின் இறைவன் தனது வசனத்தில் ‘சிர்ரன் வ அலானியத்தன்’ என்று கூறியுள்ளான். ***(திருக்குர்ஆன் 13:23)***

அதாவது, தான தருமங்களை இரகசியமாகவும் வெளிப்படையாகவும் கொடுங்கள் என்று கூறியுள்ளான். இக்கட்டளைகளின் நோக்கத்தையும் அவனே வெளிப்படுத்தி யுமுள்ளான். அதாவது சொல்லைக் கொண்டு மாத்திரம் மக்களை விளங்க வைக்காமல் செயலைக் கொண்டும் மக்களைத் தூண்டுங்கள் என்பதாகும். ஏனெனில் ஒவ்வொரு இடத்திலும் சொல் விளைவை உண்டு பண்ணுவதில்லை. பெரும்பாலான இடங்களில் முன் மாதிரியான செயல்களே பெரும் விளைவுகளை உண்டாக்குகின்றன.

இவ்விதமே நீங்கள் பிரார்த்தனை செய்ய வேண்டுமென்றால் உங்களது அறைக்குள் செல்லுங்கள் என்று புதிய ஏற்பாட்டில் எழுதப்பட்டிருக்கிறது. இதற்கு மாறாக திருக்குர்ஆன் நீங்கள் உங்களது பிரார்த்தனையை எல்லா சந்தர்ப்பங்களிலும் இரகசியமாக செய்ய வேண்டாம் என்றும், மக்கள் முன்னிலையில் உங்கள் சகோதரர்களோடு ஒன்று சேர்ந்தும் வெளிப்படையாக செய்ய வலியுறுத்துகிறது. ஏனெனில் ஏதாவது பிரார்த்தனை அங்கீகரிக்கப்பட்டால் அவர்களின் நம்பிக்கை வளர்ச்சி பெறவும்

அத்துடன் மற்றவர்களுக்கும் பிரார்த்தனை மீது விருப்பம் ஏற்படவும் காரணமாயிருக்கிறது என்று அது கற்றுத் தருகிறது.

இவ்வாறே புதிய ஏற்பாட்டில் நீங்கள் பிரார்த்தனை செய்யும்போது வானத்திலிருக்கும் எங்கள் பிதாவே! உனது நாமம் துதிக்கப்படுவதாக! உனது ஆட்சி உதயமாவதாக! உனது விருப்பம் வானத்திலிருப்பதுபோல் பூமியிலும் உண்டாவதாக. எங்களது ஒவ்வொருநாள் அப்பத்தையும் இன்று எங்களுக்குத் தந்தருள்வாயாக! மேலும் எவ்வாறு நாங்கள் எங்களது கடன்காரர்களை மன்னிக்கின்றோமோ அவ்வாறே நீ எங்கள் கடனை எங்களுக்காக மன்னித்தருள்வாயாக! நீ எங்களை சோதனையில் போடாமல் இருப்பாயாக. ஏனெனில் ஆட்சியும் வல்லமையும் மகத்துவமும் எப்பொழுதும் உன்னுடையதாகவே இருக்கின்றன என்று பிரார்த்தனை செய்ய வேண்டும் என வந்திருக்கிறது. ஆனால் திருக்குர்ஆனோ பூமி இறைவனைத் துதிப்பதை விட்டும் விலகி இருக்கவில்லை யென்றும் வானத்தில் மட்டுமல்லாமல் பூமியிலும் இறைவனைத் துதித்தல் நடந்து கொண்டே இருக்கிறதென்றும் கூறுகிறது.

இறைவன் கூறுகின்றான்:

‘வஇம்மின் ஷைய்யின் இல்லா யுஸப்பிஹு பிஹம்திஹ்’ (திருக்குர்ஆன் 17:45) பொருள்: வானங்களிலும் பூமியிலும் காணப்படும் ஒவ்வோர் அணுவும் அவனைப் புகழ்ந்து கொண்டும் அவனது தூய்மையை எடுத்துரைத்துக் கொண்டும் இருக்கிறது. மேலும் ‘யுஸப்பிஹுலில்லாஹி மா பிஸ்ஸமாவாத்தி வமா ஃபில்அர்ழ்’ (திருக்குர்ஆன் 62:2) பொருள்: வானங்களிலுள்ளவையும் பூமியிலுமுள்ளவையும் இறைவனை புகழ்வதிலும் அவனது தூய்மையை எடுத்துரைப்பதிலும் ஈடுபட்டிருக்கின்றன.

மலைகளும் ஆறுகளும் மரம் செடி கொடிகளும் இறைவனை நினைவு கூறுவதில் ஈடுபட்டிருக்கின்றன. உண்மையாளர்கள் பலரும் அவனை நினைவு கூறுவதில் ஈடுபட்டிருக்கின்றனர். எவர் தனது இதயத்தைக் கொண்டும் நாவைக் கொண்டும் அவனை நினைவு கூறுவதில் ஈடுபடவில்லையோ, இறைவன் முன்பு பணிவை கடைபிடிக்கவில்லையோ அவரை இறைநியதி பல்வேறு வகையான துன்பங்களாலும் தண்டனைகளாலும் பணிய வைக்கிறது. இறைவனின் திருமறையில் மலக்குகளாகிய வானவர்களைக் குறித்து





அவர்கள் இறைவனுக்கு மிகவும் தாழ்மையாக கீழ்ப்படிகிறார்கள் என்று எழுதப்பட்டிருக்கின்றது. இவ்விதமே பூமியில் காணப்படும் ஒவ்வொரு இலையை பற்றியும் ஒவ்வொரு அணுவைப்பற்றியும் அவை அவனுக்கு கீழ்ப்படிகின்றன என்று திருக்குர்ஆனில் விவரிக்கப்பட்டிருக்கின்றது. அவனது கட்டளை இல்லாமல் ஓர் இலை கூட கீழே விழுவதில்லை. அவனது கட்டளை இன்றி எந்த மருந்தும் சுகம் அளிக்கவும் முடியாது. மேலும் எந்த உணவும் பொருத்தமாகவும் முடியாது. ஒவ்வொரு பொருளும் முழுக்க முழுக்க பணிவுடனும் வணக்கத்துடனும் இறைவன் முன்னிலையில் வீழ்ந்துள்ளன. மேலும் அவை அவனுக்கு கீழ்ப்படிதலில் முழு மூச்சுடன் ஈடுபட்டுள்ளன. மலைகள், பூமி இவற்றின் ஒவ்வோர் அணுவும், ஆறுகள், சமுத்திரங்கள் ஆகியவற்றின் ஒவ்வொரு துளியும், மரங்கள் புற்பூண்டுகள் இவற்றின் இலைகள் அவற்றின் ஒவ்வொரு பகுதியும், மனிதர்கள், விலங்குகள் ஆகியவற்றின் எல்லா அணுக்களும் இறைவனைக் கண்டறிந்து கொள்கின்றன. மேலும் அவை அவனை பணிவதிலும் அவனைப் புகழ்வதிலும் துதிப்பதிலும் முனைப்புடன் ஈடுபட்டிருகின்றன. இதன் காரணத்தினாலேயே இறைவன் கூறி இருக்கின்றான்.

‘யுஸப்பிஹு லில்லாஹி மாஃபிஸ்ஸமாவாத்தி வமா ஃபில்அர்ழ்’

*(திருக்குர்ஆன் 62:2)*

பொருள்: வானத்திலுள்ள ஒவ்வொரு பொருளும் இறைவனது தூய்மையை எடுத்துக் கூறிக் கொண்டும் வாழ்த்திக் கொண்டுமிருப்பது போல் பூமியிலுள்ள ஒவ்வொரு பொருளும் அவனது தூய்மையை எடுத்துரைத்துக் கொண்டும் வாழ்த்திக் கொண்டுமிருக்கிறது.

ஆகவே பூமியின் மீது இறைவனைப் புகழ்வதும் வாழ்த்துவதும் நடைபெறுவதில்லையா? இதுபோன்ற கூற்று ஒரு முழுமையான இறைஞானியின் வாயிலிருந்து வரமுடியாது. மாறாக பூமியிலுள்ள பொருட்களில் சில பொருட்கள் ஷரீஅத் என்னும் நெறிமுறை சட்டங்களின் கட்டளைக்கு கீழ்ப்படிந்து கொண்டிருக்கின்றன. சில பொருட்கள் ‘கழா வ கத்ர்’ என்னும் இறைவன் வகுத்த விதிகளின் கட்டளைகளுக்கு அடிபணிந்து கொண்டிருக்கின்றன.

மேலும் சில, இவை இரண்டிற்கும் கீழ்ப்படிய ஆயத்தமான நிலையில் இருக்கின்றன. மேகம், காற்று, நெருப்பு, பூமி இவை அனைத்தும் இறைவனுக்குக் கீழ்ப்படிவதிலும் அவனைத்

துதிப்பதிலும் தம்மைத்தாமே அர்ப்பணித்துக் கொள்கின்றன. ஒரு மனிதன் இறைவனுடைய ஷரீஅத்தின் கட்டளைக்குக் கீழ்ப்படியாவிடின் அவன் 'கழா வகத்ர்' என்னும் இறைவன் வகுத்த விதிகளின் கட்டளைக்கு கட்டுப்படுகிறான். இந்த இரு சட்டங்களுக்கும் வெளியே யாருமில்லை. வானுலக ஆட்சியின் ஏதாவதொரு நுகத்தடி ஒவ்வொருவரின் பிடரியின் மீதும் இருந்தே வருகிறது. எனினும் மனிதர்களின் உள்ளங்களில் காணப்படும் நன்மை தீமை ஆகியவற்றை அனுசரித்து கவனமின்மையும் இறைவனை நினைவு கூர்தலும் ஆகிய இரண்டும் பூமியில் தத்தமது வெற்றியை மாறி மாறி நிலைநாட்டி வருகின்றன. ஆனால் இறைவனது நுட்பமான அறிவும், நல்ல நோக்கமும் இல்லாமல் இந்த ஏற்றத்தாழ்வுகள் தாமாகவே உண்டாவதில்லை.

பூமியில் இவ்வாறு ஆக வேண்டுமென்று இறைவன் நாடியதாலேயே அவ்வாறு ஆகி இருக்கிறது. பகலும் இரவும் மாறி மாறி வருவது போல் நேர்வழியும் வழிகேடும் இறைவனது சட்டங்களுக்கும் அவனது கட்டளைகளுக்கும் ஏற்றவாறு நடந்து கொண்டிருக்கின்றன. இவை தாமாக நடைபெறுவதில்லை. ஒவ்வொரு பொருளும் அவனது குரலைக் கேட்டுக் கொண்டும் அவனது தூய்மையை நினைவு கூர்ந்துகொண்டும் இருக்கின்றது. பைபிளின் புதிய ஏற்பாடு பூமி இறைவனைத் துதிப்பதில்லை எனக் கூறுகிறது. இதற்குக் காரணம் புதிய ஏற்பாட்டில் இடம் பெற்றிருக்கும் இந்த துஆவின் அடுத்த வசனத்தில் இது வரை பூமியில் இறைவனது ஆட்சி வரவில்லை என்று சூசகமாக கூறப்பட்டுள்ளதேயாகும். எனவே ஆட்சி இல்லாத காரணத்தாலோ வேறு ஏதாவது காரணத்தாலோ இறைவனது விருப்பம் வானத்தில் உண்டானது போல் பூமியின் மீது உண்டாக முடியவில்லையாம். ஆனால் குர்ஆனின் போதனை இதற்கு முற்றிலும் மாறானதாகும். எந்த ஒரு திருடன், கொலையாளி, விபசாரம் செய்வோன், நிராகரிப்பவன், கெட்டவன், கிளர்ச்சி செய்பவன், குற்றம் புரியக் கூடியவன் ஆகியோர் எவரும் வானத்திலிருந்து அதிகாரம் கொடுக்கப்படாதவரை எவ்வித தீமையும் பூமியில் செய்யமுடியாது என்று தெளிவாகக் கூறுகிறது. ஆகவே வானத்தின் ஆட்சி பூமியில் இல்லை என்று எவ்வாறு கூற முடியும்? இறைவனின் சட்டங்கள் பூமியில் செயல்படுவதற்கு ஏதாவது எதிர் ஆதிக்கம் தடையாக இருக்கின்றதா ? (அல்லாஹ் தூய்மையானவன்). அவ்வாறு ஒருபோதும்





இல்லை. மாறாக இறைவன், வானத்தில் மலக்குகளுக்காகத் தனிச் சட்டதையும் பூமியில், மனிதர்களுக்காகத் தனிச் சட்டத்தையும் உண்டாக்கி இருக்கிறான். மேலும் இறைவன் தனது வானத்தின் ஆட்சியில் மலக்குகளுக்கு எவ்வித அதிகாரத்தையும் அளிக்கவில்லை. மாறாக அவர்களது இயல்பிலேயே கீழ்ப்படியக் கூடிய பண்பை இறைவன் அமைத்திருக்கிறான். ஆகவே அவர்கள் மாற்றமாக செயல்படவே முடியாது. அவர்களுக்கு மறதியோ தவறுகளோ ஏற்பட முடியாது. ஆனால் மனித இயல்புக்கு ஒன்றை ஏற்றுக் கொள்வதற்கும், ஏற்றுக் கொள்ளாமலிருப்பதற்கும் அதிகாரம் வழங்கப்பட்டிருக்கின்றது. இந்த அதிகாரம் மேலிருந்து கொடுக்கப்பட்டதாகும். எனவே கெட்ட மனிதர்கள் இருப்பதனால் இறைவனது ஆட்சி பூமியிலிருந்து மறைந்து விட்டது என்று கூறமுடியாது. மாறாக, எல்லா வகையிலும் இறைவனது ஆட்சியே உள்ளது.

ஆயினும் சட்டங்கள் இருவகைப்படும். ஒன்று, வானத்தின் மலக்குகளுக்காக 'கழா வகத்ர்' என்னும் (இறைவன் வகுத்த விதியின்) சட்டமாகும். இதன்படி அவர்கள் தீமைகள் செய்யவே முடியாது. இன்னொன்று பூமியில் மனிதனோடு சம்பந்தப்பட்ட "கழா வகத்ர்' என்னும் (இறைவனால் நிர்ணயிக்கப்பட்ட) விதியாகும். இதன்படி அவர்களுக்கு தீமைகள் செய்ய வானத்திலிருந்து அதிகாரம் வழங்கப்பட்டிருக்கிறது. ஆயினும், இறைவனிடம் அவர்கள் அவனது ஆற்றலை வேண்டும் போது அதாவது 'இஸ்திஃஃபார்' என்னும் பாவமன்னிப்பு கோரும்போது இறைவனது பரிசுத்த ஆவியின் உதவியால் அவர்களது பலவீனங்கள் அகன்று விட முடியும். மேலும் இறைவனது ரஸூல், நபிமார்கள் ஆகியோர் தப்பித்துக் கொள்வதுபோல் இவர்களும் பாவம் செய்வதிலிருந்து தப்பித்துக் கொள்ள முடியும். மேலும் எவர்கள் பாவம் செய்தவர்களாக இருக்கிறார்களோ அவர்கள் 'இஸ்திஃஃபார்' (என்னும் பாவமன்னிப்புக்) கோருவதால் அவர்களுக்கு உண்டாகும் பலன் என்னவெனில் பாவத்தின் விளைவுகளிலிருந்தும் அதாவது தண்டனைகளிலிருந்தும் காப்பாற்றப்படுகிறார்கள். ஏனெனில் ஒளி தோன்றும்போது இருள் எஞ்சியிருக்க முடியாது. பாவமன்னிப்பு கோராத பாவிகள் அதாவது இறைவனிடம் ஆற்றலை வேண்டாதவர்கள் தாம் செய்த பாவத்திற்கேற்ற தண்டனையைப் பெற்றுக் கொண்டே இருக்கிறார்கள்.

பாருங்கள்! இப்போது பிளேக் வியாதியும் ஒரு தண்டனையாகவே பூமியில் இறங்கி இருக்கின்றது. இறைவனுக்குக் கீழ்ப்படியாதவர்கள்

இதனால் அழிந்து கொண்டிருக்கின்றனர். இவ்வாறிருக்க இறைவனது ஆட்சி பூமியில் இல்லை என்று எவ்வாறு கூற முடியும்? பூமியில் இறைவனது ஆட்சி இருக்கிறதென்றால் மக்களால் குற்றங்கள் ஏன் விளைகின்றன? என நினைக்க வேண்டாம். ஏனெனில் குற்றங்களும் 'கழா வகத்ர்' என்னும் (இறைவன் வகுத்த விதியின்) சட்டங்களுக்குட்பட்டவையாகும். ஆகவே அவர்கள் ஷரீஅத் என்னும் மார்க்கச் சட்டங்களுக்கு வெளியே சென்றுவிட்டாலும் இயற்கை சட்டமான அதாவது 'கழா வகத்ர்' என்னும் இறைவன் வகுத்த விதிகளிலிருந்தும் அவர்கள் வெளியே செல்ல முடியாது. ஆகவே பாவிகள் இறைவனது ஆட்சியின் நுகத்தடியைத் தமது பிடரியின் மீது ஏந்துவதில்லை என்று எவ்வாறு கூறமுடியும்?

பாருங்கள். இந்த ஆங்கிலேய ஆட்சியில், இந்தியாவில் களவுகளும் கொலைகளும் நடைபெற்று வருகின்றன. மேலும் விபசாரம் செய்வோர், வஞ்சகர், லஞ்சம் வாங்குபவர் முதலிய எல்லாவிதமான குற்றம் செய்யக் கூடியவர்களும் காணப்படுகிறார்கள். ஆயினும் இந்நாட்டில் ஆங்கில அரசின் ஆட்சியே இல்லை எனக் கூற முடியாது. ஆட்சி இருந்தே வருகிறது. ஆனால் மக்கள் வாழ்க்கை நடத்துவது கடினமாகிவிடும் என்ற அச்சத்தால் அரசானது வேண்டுமென்றே கடுமையான சட்டங்களை இயற்றுவதை சரியென நினைக்கவில்லை. இல்லாவிடின் அரசு எல்லாக் குற்றவாளிகளையும் கஷ்டம் விளைவிக்கக்கூடிய ஒரு கைதிக் கூண்டில் அடைப்பதன் மூலம் அவர்களைக் குற்றங்கள் செய்வதிலிருந்து தடை செய்ய விரும்பினால் அக்குற்றங்கள் மிக எளிதாக தடைபட்டு விடும் அல்லது சட்டங்களில் கடினமான தண்டனைகளை இடம் பெறச் செய்தால் அக்குற்றங்களை தடுத்து நிறுத்த முடியும்.

ஆகவே இந்நாட்டில் எந்த அளவில் மதுபானம் அருந்தப்படுகிறதோ, தீய நடத்தையுடைய பெண்கள் அதிகரிக்கின்றார்களோ கொலைகள் நடைபெறுகின்றனவோ இவை அனைத்தும் ஆங்கில அரசின் ஆட்சி இங்கு இல்லை என்ற காரணத்தால் விளைந்தவை அல்ல. மாறாக அரசின் மிருதுவான சட்டங்கள்தான் குற்றங்களை பெருகச் செய்துள்ளதேயல்லாமல் ஆங்கில அரசே இந்த நாட்டிலிருந்து மறைந்து விட்டதென்பதால் அல்ல என்பதை நீங்கள் புரிந்து கொள்ள முடியும். அது மட்டுமல்ல கடினமாக சட்டங்களை இயற்றி கொடுமையான தண்டனைகளை விதிப்பதன்





மூலம் மக்களைக் குற்றங்கள் செய்வதிலிருந்து தடை செய்ய அரசிற்கு அதிகாரம் உண்டு. இறைவனது அரசாட்சிக்கு எதிரில் ஒன்றுமே இல்லாத மனித ஆட்சிக்கு இந்நிலை என்றால் இறைவனது ஆட்சி எவ்வளவு பெரும் சக்தியும் அதிகாரமும் கொண்டதாக இருக்கிறது! இறைவனது சட்டங்கள் மேலும் கடினமாக்கப்பட்டு விபசாரத்தில் ஈடுபடும் ஒவ்வொருவரையும் மின்னல் தாக்கினால், ஒவ்வொரு திருடனுக்கும் அவனது கைகள் அழுகி கீழே விழக்கூடிய நோய் உண்டானால் இறைவனுக்குக் கீழ்ப்படியாத ஒவ்வொரு பகைவரும் அவனது மார்க்க பகைவனாகிய ஒவ்வொருவரும் பிளேக்கினால் மரணமடைந்தால் ஒருவாரம் கழிவதற்கு முன்பாகவே உலகம் அனைத்தும் உண்மையாளர்களாகவும் நல்லடியார்களாகவும் மாறமுடியும். ஆகவே இறைவனது ஆட்சியானது பூமியில் இருந்தே வருகிறது. ஆயினும் குற்றவாளிகள் விரைவில் பிடிபடாத அளவுக்கு இறை சட்டத்தின் மென்மை சுதந்திரம் கொடுத்துள்ளது. எனவே குற்றவாளிகள் விரைவில் பிடிபடுவதில்லை.

ஆயினும் தண்டனைகளும் கிடைத்துக் கொண்டே இருக்கின்றன. பூகம்பம் உண்டாகின்றன. மின்னல்கள் தாக்குகின்றன. எரிமலையானது வானவெடியைப் போல் குமுறிக் கொண்டு தனது அக்கினி குழம்பை கக்குவதன் மூலம் ஆயிரக்கணக்கான உயிர்களுக்கு நஷ்டங்களை விளைவித்துக் கொண்டிருக்கின்றன. கப்பல்கள் மூழ்கின்றன. புகைவண்டிகளின் விபத்துகளினால் ஆயிரக்கணக்கான உயிர்கள் மடிகின்றன. வெள்ளப்பெருக்கு, புயல் உண்டாவதால் வீடு வாசல்கள் அழிந்து நாசம் அடைகின்றன. பாம்புகள் தீண்டுகின்றன. வன விலங்குகள் நஷ்டம் விளைவிக்கின்றன.

கொடிய நோய்கள் எங்கும் பரவுகின்றன. மக்கள் அழிவதற்கு ஒரு வாசல் அல்ல; ஆயிரக்கணக்கான வாசல்கள் திறந்திருக்கின்றன. இவை அனைத்தும் குற்றவாளிகளின் தண்டனைக்காக இறைவனது இயற்கை சட்டங்களால் நிர்ணயிக்கப்பட்டவையாகும். இவ்வாறிருக்க இறைவனது ஆட்சி பூமியில் இல்லை என்று எவ்வாறு கூறமுடியும்? உண்மை என்னவென்றால், இறைவனது ஆட்சி பூமியெங்கும் நடைபெற்றே வருகிறது. ஒவ்வொரு பாவியின் கரங்களிலும் கைவிலங்குகள் மாட்டப்பட்டிருக்கின்றன. கால்களில் சங்கிலிகள் பிணைக்கப்பட்டிருக்கின்றன. ஆயினும் இறைவனது நாட்டமானது தனது சட்டங்களை மிக அதிகமாக மிருதுவாக்கியிருப்பதால்

அவ்விலங்குகளும் சங்கிலிகளும் உடனுக்குடன் விளைவை உண்டாக்குவதில்லை. இறுதியில் மனிதன் தன்னைத் திருத்திக் கொள்ளாவிட்டால் அவனை நிரந்தரமான நரகத்திற்கு இழுத்துச் சென்று அவனை பிழைத்திருக்கவும் மரணிக்கவும் முடியாத தண்டனைக்கு ஆளாக்கி விடுகிறது.

சுருங்கச் சொல்லின் சட்டங்கள் இருவகைப்படும். அவற்றில் ஒன்று, மலக்குகளாகிய வானவர்களோடு சம்பந்தப்பட்டதாகும். அதாவது, அவர்கள் கீழ்ப்படிவதற்காக மட்டுமே படைக்கப்பட்டவர்களாவர். மேலும் அவர்களின் கீழ்ப்படிதல் அவர்களின் படைப்பிலேயே அமைந்த ஒளிமயமான சிறப்புத் தன்மையாகும். அவர்களால் பாவம் செய்ய முடியாது. மேலும் அவர்களால் நன்மையில் முன்னேறவும் முடியாது. இரண்டாவது சட்டம் மனிதனோடு சம்பந்தப்பட்டதாகும். அதாவது மனிதர்களின் இயல்பில் பாவம் செய்யக் கூடிய பண்பு அமைக்கப்பட்டுள்ளது. ஆனால் அவர்கள் நன்மையில் முன்னேறவும் முடியும். இந்த இரு இயற்கை சட்டங்களும் ஒருபோதும் மாறக் கூடியதன்று. எவ்வாறு மலக்குகள் மனிதனாக முடியாதோ அவ்வாறே மனிதனும் மலக்காக முடியாது. இந்த இரு சட்டங்களும் மாற்றம் அடையாமல் ஆரம்பத்திலிருந்தே இருந்து வரக் கூடியதும் நிலை கொண்டதுமாகும். எனவே வானத்தின் சட்டங்கள் பூமியில் வரமுடியாது. மேலும் பூமிக்காக உள்ள சட்டங்கள் மலக்குகளுக்குச் பொருந்தவும் முடியாது. மனிதனால் செய்யப்படும் பாவங்கள் 'தவ்பா' என்னும் பாவமன்னிப்பு தேடுதலோடு முடிவு அடையும்போது அது மனிதனை மலக்குகளை விட மிக நல்லவனாக ஆக்க முடியும். ஏனெனில் மலக்குகளுக்கு முன்னேறக் கூடிய தன்மை இல்லை. மனிதன் செய்யும் பாவங்கள் 'தவ்பா' என்னும் பாவமன்னிப்பு கோருவதால் மன்னிக்கப்படுகின்றன. இறை தத்துவமானது சில மனிதர்களிடம் தீய செயல்களை நீடிக்கச் செய்துள்ளது. இதன் நோக்கம் அவர்கள் தங்களது பலவீனங்களை அறிந்து இறைவனிடம் மன்னிப்பு கோருவதன் மூலம் அவர்கள் மன்னிக்கப்படு வதற்காகவேயாகும்.

இச்சட்டங்களே மனிதர்களுக்காக ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன. மனித இயல்பும் இதனையே நாடுகிறது. கவனமின்மையும் தவறு விளைவித்தலும் மனித இயல்பிலேயே இருந்து வரக் கூடிய தனித்தன்மையாகும். இது மலக்குகளது தனித்தன்மையன்று.





இவ்வாறிருக்க மலக்குகள் சம்பந்தப்பட்ட சட்டங்கள் மனிதர்களுக்காக எவ்வாறு இயங்க முடியும்? இறைவன் மீது பலவீனங்களை சுமத்துவதென்பது மிகவும் தவறான விஷயமாகும். சட்டங்களின் விளைவுகள் மட்டுமே பூமியில் இயங்கிக் கொண்டிருக்கின்றன. இறைவனுடைய ஆட்சியும் சக்தியும் மகத்துவமும் வானத்தின் எல்லைக்குள் மட்டுமே இருந்து வருமளவிற்கு அவன் பலவீனமானவனா? நவூது பில்லாஹ் (நாங்கள் அல்லாஹ்விடம் பாதுகாப்பு தேடுகிறோம்) அல்லது பூமியை மாறுபட்ட தன் ஆட்சிக்குட்படுத்தியிருக்கும் வேறோர் இறைவன் எவனேனும் பூமியில் உண்டா? வானத்தில் மட்டும் இறைவனது ஆட்சி இருந்து வருவதாகவும் அது பூமியின் மீது இதுவரை வரவில்லை என்றும் கிறித்தவர்கள் வலியுறுத்துவது சரியன்று. ஏனெனில் வானம் ஒரு பொருட்டுமில்லை என்று அவர்கள் நம்புகிறார்கள். இதன்படி வானத்தில் இறைவனது ஆட்சி உண்டாவதற்கு வானம் என்று ஒன்றுமே இல்லை என்றால் பூமியின் மீது இதுவரை இறைவனது ஆட்சியும் வரவே இல்லை என்றால் இதிலிருந்து இறைவனது ஆட்சி எங்குமே இல்லை என்பது தெளிவாகிறது. இதற்கு மாறாக நாம் பூமியில் இறைவனது ஆட்சி இருந்து வருவதை நமது கண்களால் பார்த்து வருகிறோம். மேலும் அவனது சட்டங்களின்படி நமது ஆயுட்காலமானது முடிந்து விடுகின்றன. நமது நிலைகள் மாறிக் கொண்டே இருக்கின்றன. நூற்றுக்கணக்காக விதங்களில் சுகபோகங்களையும் துக்கங்களையும் நாம் பார்த்து வருகின்றோம். இறைவனது கட்டளையால் ஆயிரக்கணக்கான மக்கள் மரணித்துக் கொண்டும் பிறந்து கொண்டும் இருக்கிறார்கள். துஆக்கள் அங்கீகரிக்கப்படுகின்றன. அடையாளங்கள் வெளியாகிக் கொண்டிருக்கின்றன. பூமியானது ஆயிரக்கணக்கான வகைகளில் மரம் செடி கொடிகள் பூக்கள் ஆகியவற்றை அவனது கட்டளையால் உற்பத்தி செய்து வருகிறது. இவை அனைத்தும் அவனது ஆட்சி இன்றி நடைபெறுகின்றனவா?

இதுவேயன்றி வானத்தில் செயல்பட்டுக் கொண்டிருப்பவைகளும் (அதாவது, சூரியன் சந்திரன், நட்சத்திரங்கள் முதலியவை) முறைப்படி எவ்விதமாறுதலுமின்றி ஒரேவிதமாக இயங்கிக் கொண்டிருக்கின்றன. இவற்றில் மாறுதலும் வேறுபாடும் ஏற்படுத்தக் கூடிய எந்த மாற்றம் செய்பவரையும் காண முடியவில்லை.

இதற்கு மாறாக பூமி ஆயிரக்கணக்கான மாற்றங்களுக்கும் புரட்சிகளுக்கும் வேறுபாடுகளுக்கும் இலக்காக்கிக் கொண்டு வருகிறது. ஒவ்வொரு நாளும் கோடிக்கணக்கான மக்கள் மரணித்துக் கொண்டும் பிறந்து கொண்டும் இருக்கிறார்கள். ஒவ்வொரு வகையிலும் ஒவ்வொரு விதத்திலும் ஒரு அபார சக்தியுள்ள படைப்பாளனின் ஆதிக்கத்தையே இதனால் உணர முடிகிறது. இவ்வாறிருக்க இதுவரை பூமியில் இறைவனது ஆட்சி உண்டாகவில்லையா? பைபிளின் புதிய ஏற்பாட்டில் இதுவரை பூமியின் மீது இறைவனது ஆட்சி ஏன் உண்டாகவில்லை என்பதற்கான எவ்வித ஆதாரமும் அளிக்கப்படவில்லை. ஆயினும் மஸீஹ் தாம் தப்பித்துக் கொள்வதற்காக வேண்டி தோட்டத்தில் இரவு முழுவதும் பிரார்த்தனை செய்வதும் எபிரேயர் 5 : 7-ல் குறிப்பிட்டிருப்பது போல் அப்பிரார்த்தனையானது ஏற்றுக் கொள்ளப்பட்டிருந்தும் இறைவன் அவரை விடுவிப்பதில் சக்தி அற்றவனாய் போனதும் ஆகிய இவையெல்லாம் கிறித்தவர்களின் கட்டளைப்படி, அக்காலத்தில் இறை ஆட்சி பூமியில் உண்டாகவில்லை என்பதற்கு ஓர் ஆதாரமாக இருக்கலாம். ஆனால் நாம் இதையும் விட அதிகமாக சோதனைகளை கண்டு இருக்கின்றோம். அவற்றிலிருந்து மீட்பும் அடைந்திருக்கின்றோம். இவ்வாறிருக்க நாம் இறைவனது ஆட்சியை எவ்வாறு மறுக்க முடியும்?

யூதர்களின் சார்பாக நீதிபதி பிலாத்துக்கு முன் தாக்கல் செய்யப்பட்ட வழக்கானது மார்க்க சம்பந்தமான காரணங்களினால் மாத்திரம் தாக்கல் செய்யப்பட்டதே தவிர ஏதும் கொலை குற்றத்திற்காகத் தாக்கல் செய்யப்பட்டதல்ல.

இவ்வழக்கைவிட நான் கொலை செய்யப்படவேண்டும் என்ற உத்தேசத்துடன் என் மீது மார்டின் கிளார்க் சார்பாக நீதிபதி டக்லஸுக்கு முன் தொடரப்பட்ட கொலை வழக்கு குறைந்த நிலையிலுள்ளதா? ஆனால் இறைவன் வானத்திற்கு அரசனாய் இருப்பதுபோல் பூமிக்கும் அரசனாய் இருப்பதால் இவ்வழக்கை என் மீது தொடரப்படுவதற்கு முன்பாகவே இதுபோன்ற ஒரு சோதனை எனக்கு வரப் போவதாகவும் பின்னர் இந்த சோதனையிலிருந்து நான் விடுவிக்கப்படுவேன் என்றும் இறைவன் எனக்கு அறிவித்திருந்தான். இச்சம்பவம் நடைபெறுவதற்கு முன்பே நூற்றுக்கணக்கான மக்களுக்கு அறிவிக்கப்பட்டுள்ளது. இறுதியில் நான் நிரபராதியான நிலையில் விடுவிக்கப்பட்டேன்.





ஆகவே முஸ்லிம்கள் ஹிந்துக்கள். கிறிஸ்தவர்கள் ஆகியவர்கள் ஒன்றிணைந்து என் மீது தொடரப்பட்ட இவ்வழக்கிலிருந்து என்னை காப்பாற்றியது இந்த இறைவனின் ஆட்சியேயாகும். இவ்வாறு ஒருமுறை அல்ல, பலமுறை பூமியில் இறைவனது ஆட்சியை நான் பார்த்திருக்கிறேன். எனவே

“லஹூ முல் குஸ்ஸமாவாத்தி வர் அர்ழ்.” (திருக்குர்ஆன் 57:3)

பொருள் :- பூமியிலும் வானங்களிலும் இறைவனின் ஆட்சி இருந்து வருகிறது என்ற இந்த வசனத்தின் மீது நான் நம்பிக்கை கொள்ள நேர்ந்தது.

மேலும் “இன்னமா அம்ருஹூ இஸா அராத ஷைஅன் அய்ய கூலலஹூ குன்ஃப யகூன்.” (திருக்குர்ஆன் 36:83)

அதாவது:- பூமி வானம் ஆகிய அனைத்தும் அவனுக்குக் கீழ்ப்படிகிறது. ஏதாவதொரு பணியை அவன் விரும்பினால் அதனை ஆகிவிடு என்று கூறியதுமே அப்பணி உடன் ஆகிவிடுகிறது என்ற வசனத்தின் மீதும் எனக்கு நம்பிக்கை கொள்ள நேர்ந்தது. மேலும் இறைவன் கூறுவதாவது:

“வல்லாஹு காலிபுன் அலா அம்ரிஹீ வலாகின்ன அக்ஸரன்னாஸி லா எஃலமூன்.” (திருக்குர்ஆன் 12:22)

பொருள்: இறைவன் தனது நாட்டத்தில் வெற்றி பெறக் கூடியவனாயிருக்கிறான். ஆனால் பெரும்பாலானவர்கள் அவனது பேராண்மையைப் பற்றி அறியாதவர்களாகவே இருக்கிறார்கள்.

சுருங்கச் சொல்லின், பைபிளின் புதிய ஏற்பாட்டின் பிரார்த்தனை இறைவனின் அருட்கொடைகளின் மீது மக்களை நம்பிக்கை இழக்கச் செய்கிறது. மேலும் அவனது பண்புகளாகிய பரிபாலித்தல், அருட்கொடையை அளித்தல், நன்மை தீமைகளுக்கு பிரதிபலன் அளித்தல் ஆகியவைகளிலிருந்தும் கிறிஸ்தவர்களை அலட்சியப் போக்குள்ளவர்களாக ஆக்கிவிடுகிறது. மேலும் இறைவனது ஆட்சி பூமியில் உண்டாகாதவரை அவனைப் பூமியில் உதவி புரியத் தகுதியுள்ளவனாகவும் அவர்கள் கருதுவதில்லை. இதற்கு மாறாக இறைவன் திருக்குர்ஆனில் முஸ்லிம்களுக்குக் கற்றுக் கொடுத்திருக்கும் துஆவானது ஆட்சி பறிக்கப்பட்டவர்களைப் போல் இறைவன் பூமியின் மீது செயல்அற்றுப் போனவன் அல்லன் என்றும்,

மாறாக அவனது பண்புகளான ருபூபிய்யத், ரஹ்மானிய்யத், ரஹீமிய்யத் மேலும் அவனது அதிகாரங்கள் அனைத்தும் பூமியில் நடந்து வருகிறதென்றும் தன்னை வழிபடுகிறவர்களுக்கு அவன் உதவிபுரிய வல்லமையுடையவன் என்றும் தீயவர்களைத் தனது தண்டனையால் அழிக்கக் கூடியவன் என்றும் எடுத்துரைக்கிறது. அந்த துஆ இதுவாகும்:

"அல்ஹம்துலில்லாஹி ரப்பில் ஆலமீன். அர்ரஹ்மானிர் ரஹீம் மாலிகி யவ்மித்தீன். இய்யாக நஃபுது வஇய்யாக்க நஸ்தயீன் இஹ்தினஸ்ஸிராத்தல் முஸ்தக்கீம். ஸிராத்தல்லதீன அன்அம்த அலைஹிம் கய்ரில் மஃழூபி அலைஹிம் வலல்லால்லீன் (ஆமீன்)

*(திருக்குர்ஆன் 1:2-7)*

பொருள்: எல்லா புகழுக்கும் உரிமையானவன் இறைவனேயாவான். அவனது ஆட்சியில் எந்தக் குறைபாடும் இல்லை. மேலும் அவனது சிறப்புகளிலிருந்து ஏதாவது கிடைப்பதற்கு இன்று இல்லை. நாளைதான் கிடைக்கும் என எதிர்பார்க்கும் நிலை இல்லை. அவனது ஆட்சிக்குத் தேவைப்படும் பொருள்களில் எதுவும் செயல்பட முடியாமலில்லை. அனைத்து உலகங்களையும் பாரிபாலித்து வருகிறான். அவன் எவ்வித முயற்சியுமின்றி அருட் கொடையை வழங்குகின்றான். மேலும் முயற்சியின் பிரதிபலனாகவும் அருட்கொடையை வழங்குகின்றான். நன்மை தீமைகளின் பிரதிபலனையும் தக்க சமயத்தில் வழங்குகிறான். நாம் அவனையே வணங்குகிறோம். அவனிடமே உதவி தேடுகிறோம். மேலும் எல்லா அருட்கொடைகளின் பாதைகளையும் நீ எங்களுக்குக் காட்டித் தருவாயாக. கோபம், வழிகேடு இவற்றின் பாதைகளிலிருந்து நீ எங்களைத் தூரமாக்குவாயாக என்று துஆ செய்கிறோம்.

திருக்குர்ஆனில் முதல் அத்தியாயமாக விளங்கும் சூரா ஃபாத்திஹாவில் இடம் பெற்றிருக்கும் இந்த துஆவானது பைபிளின் புதிய ஏற்பாட்டில் வந்திருக்கும் துஆவிலிருந்து முற்றிலும் மாறுபட்டதாகும். ஏனெனில் இறைவனது ஆட்சி பூமியில் தற்போது இருக்கிறது என்பது புதிய ஏற்பாட்டில் மறுக்கப்பட்டுள்ளது. ஆகவே புதிய ஏற்பாட்டின் அடிப்படையில் பூமியில் இன்னும் இறைவனது ஆட்சி வராததால் அவனது பண்புகளாகிய ருபூபிய்யத், ரஹ்மானிய்யத், ரஹீமிய்யத், நன்மை, தீமைகளுக்கு பிரதிபலன் அளிக்கும் வல்லமை ஆகியவை பூமியில் செயல்படவில்லை. ஆனால் பூமியில் இறைவனது ஆட்சி இருந்து வருவதாக சூரா ஃபாத்திஹா மூலம்





தெரியவருகிறது. இதன் காரணத்தாலேயே ஆட்சிக்கு வேண்டிய எல்லாத் தேவைகளும் சூரா ஃபாத்திஹாவில் விளக்கப்பட்டுள்ளது.

ஒரு அரசனிடத்தில் இந்தப் பண்புகள் காணப்படவேண்டும் என்பது வெளிப்படையான ஒரு விஷயமாகும். அதாவது, அவன் மக்களைப் பரிபாலிப்பதில் வல்லமையுடையவனாய் இருக்க வேண்டும். ஆகவே சூரா ஃபாத்திஹாவில் 'ரப்புல் ஆலமீன்' என்னும் சொல்லைக் கொண்டு இந்த பண்பு நிரூபிக்கப்பட்டிருக்கிறது.

இதன்பின் அவ்வரசனுக்குத் தேவையான இரண்டாவது பண்பு என்னவெனில் அவன் தனது குடிமக்களின் வாழ்வுக்காக என்னென்ன அவசியப் பொருட்கள் தேவைப்படுகின்றனவோ அவற்றைக் குடிமக்களின் எவ்வித முயற்சியுமின்றியே தனது கருணையுடன் ஆட்சி பீடத்திலிருந்து பூர்த்தி செய்தலாகும். ஆகவே 'அர்ரஹ்மான்' என்னும் சொல்லைக் கொண்டு இந்த பண்பு நிரூபிக்கப்பட்டிருக்கிறது.

அரசனிடத்தில் இருக்க வேண்டிய மூன்றாவது பண்பு என்னவெனில் குடிமக்கள் தங்களது வேலைகளைத் தங்களது முயற்சியால் பூர்த்தி செய்ய முடியாவிடின் அவை பூர்த்தி அடையும் பொருட்டுத் தகுந்த உதவிகளை அளித்தலாகும். ஆகவே 'ரஹீம்' என்னும் சொல்லைக் கொண்டு இந்த பண்பு நிரூபிக்கப்பட்டிருக்கிறது.

அரசனுக்கு வேண்டிய நான்காவது பண்பு என்னவெனில், அரசு நிர்வாகத்தில் எவ்வித இடையூறும் உண்டாகாமலிருக்க நன்மை தீமைகளுக்குரிய பிரதிபலன் அளிக்க வல்லமையுள்ளவனாய் இருத்தலாகும். ஆகவே 'மாலிக்கியவ் மித்தீன்' என்னும் சொல்லைக் கொண்டு இந்த பண்பு நிரூபிக்கப்பட்டிருக்கிறது.

சுருங்கச் சொல்லின், மேலே குறிப்பிடப்பட்ட அதிகாரமானது, ஆட்சிக்கு வேண்டிய எல்லாத் தேவைகளையும் வெளிப்படுத்தி யிருக்கிறது. இவைகளிலிருந்து பூமியில் இறைவனது ஆட்சியும் அவ்வாட்சிக்குரிய அதிகாரங்களும் இருந்து வருவதாக நிரூபண மாகிறது. ஆகவே அவனது பண்புகளாகிய ருபூபிய்யத், ரஹ்மானிய்யத், ரஹீமிய்யத், உதவி அளித்தல், தண்டனை அளித்தல் ஆகிய அனைத்தும் இருந்து வருகின்றன. சுருங்கச் சொல்லின் ஆட்சிக்குத் தேவைப்படுபவை எல்லாம் பூமியில் இறைவனுக்கு இருந்தே வருகிறது. ஒவ்வோர் அணுவும் அவனது கட்டளைக்கு அப்பாற்பட்டதன்று. ஒவ்வொன்றின் பிரதிபலனும் அருட்கொடையும்

அவன் கையிலேயே இருந்து வருகிறது.

இதற்கு மாறாக பைபிளின் புதிய ஏற்பாடானது இறைவனது ஆட்சி இன்னும் உங்களிடையே வரவில்லை என்றும் அது வருவதற்கு இறைவனிடம் பிரார்த்தனை செய்யுமாறும் போதிக்கிறது. அதாவது, அவர்கள் இறைவன் இதுவரை பூமிக்கு உரிமையாளனாகவும் இல்லை; அரசனாகவும் இல்லை. ஆகவே இப்படிப்பட்ட இறைவனிடமிருந்து என்னநம்பிக்கை வைக்க முடியும்?

கேளுங்கள்! புரிந்து கொள்ளுங்கள்! மிகப்பெரும் இறைஞானம் என்னவென்றால், வானத்தின் ஒவ்வோர் அணுவும் இறைவனது ஆளுமையில் இருந்து வருவதைப்போல் பூமியிலுள்ள ஒவ்வோர் அணுவும் அவ்விறைவனது ஆட்சியின் பிடியிலேயே இருந்து வருகிறது. மேலும் வானத்தில் மகத்துவமான ஒரு தோற்றம் இருப்பதுபோல் பூமியிலும் மகத்துவமான ஒரு தோற்றம் இருக்கவே செய்கிறது. வானத்திலுள்ள தோற்றம் என்பது ஈமான் (எனும் இறை நம்பிக்கை) உடன் சம்பந்தப்பட்ட ஒன்றாகும். சாதாரண மனிதன் எவனும் வானத்திற்குச் செல்லவுமில்லை; அதை கண்டதுமில்லை. ஆனால் பூமியில் நடந்து வரும் இறைவனது ஆட்சியின் தோற்றத்தை வெளிப்படையாக ஒவ்வொரு மனிதனும் தன் கண்களால் பார்க்க முடிகிறது.*

ஒரு மனிதன் எவ்வளவு பெரும் செல்வம் படைத்தவனாய் இருந்தபோதிலும் தனது விருப்பத்திற்கு மாறாக மரணம் எனும் குவளையை அருந்துகிறான். இறைவனின் கட்டளை வந்ததும் எவராலும் தனது மரணத்தை ஒரு வினாடிக்காவது தடை செய்ய முடிவதில்லை. ஆகவே இவ்வுண்மையான அரசனின் கட்டளையின் மூலம் அவனது பெரும் தோற்றமானது பூமியில் எவ்வாறு இருந்து வருகிறதென்பதை கவனியுங்கள். மேலும் சிகிச்சைக்குத் தகுதி அற்ற

* *'வ ஹமலஹல் இன்ஸானு'* (திருக்குர்ஆன் 33:73). *இறைவனுக்கு உண்மையாகக் கீழ்ப்படிபவன் மனிதன்தான். அவன் தன் கீழ்ப்படிதலை அன்பு பேரன்புவரை கொண்டு சென்று விடுகிறான். மேலும் அவன் ஆயிரக்கணக்கான சோதனைகளை அனுபவித்துக் கொண்டு இறைவனது ஆட்சியை பூமியிலிருப்பதாக நிரூபித்துக் காட்டுகிறான். மன உருக்கத்தால் உண்டான இந்த கட்டுப்படுதலை மலக்குகளால் எவ்வாறு செயல்ஆற்ற முடியும்? என்பதனையே இந்த வசனம் சுட்டிக்காட்டுகிறது.*





மிக மோசமான வியாதி சூழ்ந்துகொள்ளும் போது எந்த ஒரு மருத்துவராலும் அதனைக் குணப்படுத்த முடிவதில்லை. ஆகவே அவனது கட்டளையை நிராகரிக்க முடியாத அளவிற்கு இறைவனின் ஆட்சியின் பெரும் தோற்றமானது பூமியில் எவ்வாறு இருந்து வருகிறது என்பதை கவனியுங்கள். இவ்வாறிருக்க, பூமியில் இறைவனது ஆட்சி இல்லை என்றும் பின்னர் ஏதாவது காலத்தில் உண்டாகுமென்றும் எவ்வாறு கூறமுடியும்?

கவனியுங்கள்! இதே காலத்தில் இறைவனது வானத்தின் கட்டளையானது தனது வாக்களிக்கப்பட்ட மஸீஹுக்கு ஒரு அடையாளமாக இருப்பதற்காக பிளேக் நோயால் இந்த பூமியை ஆட்டி வைத்தது. ஆகவே அவனது விருப்பம் இல்லாமல் அதனைத் தடுத்து நிறுத்த எவரால் முடியும்? எனவே இப்போது பூமியில் இறைவனது ஆட்சி இல்லை என்று எவ்வாறு கூறமுடியும்? ஆயினும் ஒரு தீயவன் கைதிகளைப்போல் அவனது பூமியில் வாழ்ந்து கொண்டு, தான் ஒருபோதும் மரணம் அடையக் கூடாது என விரும்புகிறான். ஆனால் இறைவனின் உண்மையான ஆட்சியானது அவனை அழித்து விடுகிறது. மேலும் இறுதியில் மலக்குல் மவுத் என்னும் உயிரைக் கைப்பற்றும் வானவரின் பிடிக்கு அவன் ஆளாகி விடுகிறான். இவ்வாறிருக்க இப்போது வரை பூமியில் இறைவனது ஆட்சி இல்லை என்று எவ்வாறு கூறமுடியும்?

கவனியுங்கள்! ஒவ்வொரு நாளும் பூமியில் இறைவனின் கட்டளையின் படி ஒரே சமயத்தில் கோடிக்கணக்கான மக்கள் மரணமாகிக் கொண்டிருக்கிறார்கள். மேலும் கோடிக்கணக்கில் அவனது நாட்டப்படி பிறந்து கொண்டுமிருக்கிறார்கள். இதைத் தவிர அவனது விருப்பப்படி கோடிக்கணக்கான ஏழைகள் செல்வந்தர்களாகவும், செல்வந்தர்கள் ஏழைகளாகவும் மாறுகின்றனர். இவ்வாறிருக்க இதுவரை பூமியில் இறைவனது ஆட்சி உண்டாகவில்லை என்று எவ்வாறு கூற முடியும்? வானங்களில் மலக்குகள் என்னும் வானவர்கள் மட்டும் இருந்து வருகிறார்கள். ஆனால் பூமியில் மனிதர்களும் மலக்குகளும் இருந்து வருகின்றனர். இவர்கள் இறைவனின் பணியாளர்களாகவும் அவனது ஆட்சியின் ஊழியர்களாகவும் இருக்கின்றார்கள். இவர்கள் மக்களின் பல்வேறு பணிகளின் பாதுகாப்பிற்காக ஏற்படுத்தப்பட்டுள்ளனர். அவர்கள் ஒவ்வொரு சமயமும் இறைவனுக்குக் கட்டுப்பட்டுக் கொண்டும்

தங்களின் அறிக்கைகளை இறைவனுக்கு அனுப்பிக் கொண்டும் இருக்கின்றனர். ஆகவே பூமியில் இறைவனது ஆட்சி இல்லை என்று எவ்வாறு கூற முடியும்? இன்னும் சொல்லப் போனால் எல்லாவற்றையும் விட மேலாக தனது பூமியின் ஆட்சியைக் கொண்டே இறைவன் நன்கு அறியப்பட்டிருக்கிறான்.

ஏனெனில் வானத்தின் இரகசியம் மறைவானதாகவும் காணமுடியாததாகவும் இருப்பதாக ஒவ்வொரு மனிதனும் நினைக்கிறான். பைபிளின் புதிய ஏற்பாடு இறைவனது ஆட்சியின் முழு அடிப்படையும் வானம் என்கிறது. ஆனால் இக்காலத்து கிறிஸ்தவர்களும் அவர்களின் தத்துவ வாதிகளும் வானங்கள் இருப்பதையே ஏற்றுக் கொள்வதில்லை. ஆனால் உருண்டை வடிவமான பூமி நமது கால்களுக்கடியில் இருந்து வருகிறது. அதில் கழா-வ-கத்ர் என்னும் இறைவன் வகுத்த விதியின் ஆயிரக்கணக்கான விஷயங்கள் வெளிப்பட்டுக் கொண்டிருக்கின்றன. இந்த மாறுவதும், ஆகுவதும், அழிவதும் ஆகிய இவையெல்லாம் ஏதோ ஒரு குறிப்பிட்ட எஜமானனின் கட்டளையின்படி நடந்து கொண்டிருப்பதாக நம்மால் விளங்க முடிகிறது. இவ்வாறிருக்க இதுவரை பூமியில் இறைவனது ஆட்சி ஏற்படவில்லை என்று எவ்வாறு கூற முடியும்? மாறாக, கிறிஸ்தவர்களிடையே வானங்களை மிக உறுதியாக மறுக்கப்படும் இக்காலத்தில் இவ்வாறான போதனை மிகவும் பொருத்தமற்றதாகும். ஏனெனில் புதிய ஏற்பாட்டில் இடம் பெற்று இருக்கும் இந்த துஆவில் இதுவரை பூமியின் மீது இறைவனின் ஆட்சி உருவாகவில்லை என்று ஏற்றுக் கொள்ளப்பட்டிருக்கிறது. மறுபக்கம் கிறிஸ்தவ ஆராய்ச்சியாளர்கள் தங்களது புதிய ஆராய்ச்சியால் வானம் என்று ஒரு பொருளே இல்லையென்றும், அவைகளின் இருப்பே இல்லை என்றும் முடிவு செய்து விட்டதாக உண்மையான மனதுடன் ஒப்புக் கொண்டுள்ளனர். ஆகவே இறைவனது ஆட்சியானது பூமியிலும் இல்லை வானத்திலும் இல்லை என்பதே இதன் சாரமாகும்.

வானங்களின் இருப்பை கிறிஸ்தவர்கள் மறுத்துவிட்டனர். மேலும் அவர்களின் புதிய ஏற்பாடும் பூமியின் ஆட்சியிலிருந்து இறைவனுக்கு விடையளித்து விட்டது. எனவே, அவர்களின் கூற்றின்படி அவர்களின் இறைவனிடத்தில் பூமியின் ஆட்சியுமில்லை; வானத்தின் ஆட்சியுமில்லை. ஆனால் நமது மதிப்பிற்குரிய இறைவன் ஃபாத்திஹா அத்தியாயத்தில் வானத்தின் பெயரையோ பூமியின்





பெயரையோ குறிப்பிட்டுக் கூறாமல் அவன் 'ரப்புல் ஆலமீன்' (அனைத்து உலகங்களையும் பரிபாலிப்பவன்) என தன்னைக் குறிப்பிட்டு அதன் உண்மையையும் நமக்கு விளக்கியுள்ளான். அதாவது எதுவரை குடியிருப்புகள் இருந்தாலும்* எதுவரை படைப்பினங்கள் குடியிருப்பதாக நிரூபிக்கப்பட்டாலும் மேலும் ஏதாவது ஒரு படைப்பினம் எங்கிருந்தாலும் அவை உடலாகவோ ஆன்மாவாகவோ இருந்தாலும் அவை எல்லாவற்றையும் படைப்பவன் பரிபாலிப்பவன் இறைவனேயாவான். அவன் ஒவ்வாரு சமயமும் அவர்களைப் பரிபாலித்துக் கொண்டும் அவர்களின் நிலைக்கு ஏற்றவாறு அவர்களுக்கு சகல ஏற்பாடுகளையும் நிறைவேற்றிக் கொண்டும் இருக்கிறான். மேலும் முழு உலகிலும் ஒவ்வொரு சமயமும் ஒவ்வொரு நொடிப் பொழுதிலும் தொடர்ந்து இருந்து வரக் கூடிய அவனது பண்புகளாகிய ருபூபிய்யத், ரஹ்மானியத், ரஹீமிய்யத், நன்மை தீமைகளுக்கு பிரதிபலன் அளித்தல் ஆகியவை அனைத்தும் இடைவிடாது நடைபெற்றக் கொண்டேயிருக்கின்றன. 'ஃபாத்திஹா' அதிகாரத்தில் 'மாலிகி யவ்மித்தீன்' என்னும் சொற்றொடரில் நன்மை தீமையின் பிரதிபலன் இறுதி நாளில் மட்டும்தான் இருக்கும் என்பது கருத்தன்று என்பதை நீங்கள் நினைவில் கொள்ள வேண்டும். மாறாக செயல்களுக்கு இறுதியாகவும் பெரிதாகவும் பிரதிபலன் அளிக்கும் சமயத்தின் போதே கியாமத் உண்டாகும் என்று திருக்குர்ஆனில் திரும்பத் திரும்ப மிகத் தெளிவாக விளக்கப்பட்டுள்ளது. ஆயினும் செயல்களுக்கு ஒருவிதமான பிரதிபலன் இவ்வுலகிலேயே கிடைக்கத் தொடங்கி விடுகிறது. இதைப் பற்றி 'யஜ்அல்லக்கும் ஃபுர்கானன்' என்ற (8:30) வசனம் சுட்டிக் காட்டுகிறது.

மேலும் இவ்விஷயத்தையும் கேட்டுக்கொள்ளுங்கள். பைபிளின் புதிய ஏற்பாட்டின் பிரார்த்தனையில் எங்களின் ஒவ்வொரு நாள் அப்பத்தையும் இன்றே தந்தருள்வாயாக என்று வேண்டப்பட்டிருக்கிறது. ஆனால் எவனுடைய ஆட்சி இதுவரை பூமியில் உண்டாகவில்லையோ அவனால் எவ்வாறு அப்பம் வழங்கி உதவ முடியும்? என்பதே வியப்பு மிக்கதாக இருக்கிறது. ஏனெனில் இந்நாள் வரை பூமியிலுள்ள எல்லா

** "ரப்புல் ஆலமீன்" என்னும் இச்சொல் எவ்வாறான ஒருங்கிணைந்த பொருட் செறிவுள்ள சொல் என்பதனை கவனியுங்கள். வேற்று கிரகங்களில் குடியிருப்புகள் இருக்கின்றன என்பது நிரூபிக்கப் பட்டாலும் அவை இந்தக் கூற்றின் கீழ்தான் வரும். - நூலாசிரியர்.*

பயிர்களும் எல்லா கனிவகைகளும் அவனுடைய கட்டளை இல்லாமல் தாமாக உற்பத்தியாகின்றன. மழை தானாகப் பொழிகிறது. இவ்வாறிருக்க எவருக்காவது அப்பமளிக்க அவனுக்கு என்ன அதிகாரம் இருக்கிறது? எப்போது அவனது ஆட்சி பூமியில் உண்டாகுமோ அப்போதுதான் அவனிடம் அப்பம் கேட்க வேண்டும். இப்போது அவன் பூமியிலுள்ள ஒவ்வொரு பொருள் மீதும் தொடர்பு இல்லாதவனாய் இருக்கின்றானே! எப்போது இந்த எல்லாச் சொத்துக்களையும் அவன் முழுமையாக கைக்கொள்வானோ அப்போதுதான் அவனால் அப்பம் கொடுக்க முடியும். இந்தச் சமயத்தில் அவனிடம் உதவி கேட்பதும் பொருத்தமற்ற ஒன்றாகும். மேலும் இந்நிலையில், நாங்கள் எங்களது கடன்காரர்களை மன்னிப்பது போன்று நீயும் உனது கடனுக்காக எங்களை மன்னிப்பாயாக என்ற கூற்றும் சரியன்று. ஏனெனில் பூமியின் ஆட்சி இன்னும் அவனுக்கு கிடைக்காமலிருக்கையில் மேலும் கிறிஸ்தவர்கள் இதுவரை எதையும் அவனது கையால் பெற்று உண்ணாமலிருக்கையில் பின்னர் என்ன கடன்? ஆகவே இதுபோன்ற ஒரு தரித்திரனான இறைவனிடம் கடனை மன்னிக்கக் கோருவது கொஞ்சம் கூட அவசியமில்லை. அவனுக்கு சிறிதும் அச்சப்படத் தேவையுமில்லை. ஏனெனில் இதுவரை பூமியில் அவனது ஆட்சி இல்லை. மேலும் அவனது ஆட்சியின் சாட்டை எவ்வித அச்சத்தையும் உருவாக்கவும் முடியாது.

யாராவதொரு குற்றவாளிக்கு தண்டனை அளிக்கக் கூடிய ஆற்றல் அவனுக்கு இருக்கிறதா? அல்லது மூஸா (அலை) காலத்தில் கீழ்ப்படியாத கூட்டத்தினரை பிளேக்கால் அழித்ததுபோல் அவனால் அழிக்க முடியுமா? அல்லது லூத் (அலை) கூட்டத்தினர் மீது கற்களை பொழிந்ததுபோல் அவனால் பொழிய முடியுமா? அல்லது நில நடுக்கம் மின்னல் தாக்குதல் அல்லது வேறு ஏதாவது தண்டனையால் கீழ்ப்படியாதவர்களை அவனால் அழித்தொழிக்க முடியுமா? ஏனெனில் இதுவரை இறைவனது ஆட்சியானது பூமியில் உண்டாகவில்லையே! ஆகவே தேவகுமாரன் பலவீனமானவனாய் இருந்ததைப்போல் கிறிஸ்தவர்களின் தேவனும் பலவீனமானவனாகவே இருக்கிறான். மேலும் அவனது குமாரன் எதிலும் செயலற்றவனாக இருந்ததைப் போன்று தேவனும் செயலற்றவனாகவே இருக்கிறான். இவ்வாறிருக்க இதுவரை பூமியின் மீது அவனது ஆட்சி இல்லாமலிருக்கையில் அவனிடம் பூமியில் எங்களின் கடனை மன்னிப்பாயாக என்பது போன்ற துஆ கேட்பது பயனற்றதேயாகும். கடனை மன்னிப்பதற்கு





அவன் எப்போது கடன் அளித்தான்? மேலும் பூமியில் அவனது ஆட்சியே இல்லை என்றால் பின்னர் பூமியின் மீது வளர்ந்து வரக் கூடிய பயிர்களெல்லாம் அவனது கட்டளையால் வளரக் கூடியவை அல்ல. பூமியிலுள்ள பொருள்களெல்லாம் அவனுடையதுமல்ல. மாறாக அவை அனைத்தும் தாமாகவே உண்டானவையாகும். ஏனெனில் அவனது கட்டளை பூமியில் இயங்கவில்லையே! அவன் பூமியில் அதன் அதிகாரியாகவும் அரசனாகவும் இல்லாமலிருக்கும்போது பூமியிலுள்ள சுகபோகங்கள் அனைத்தும் அவனது ஆட்சி பீடத்தின் கட்டளையால் செயல்படாமலிருக்கும் போது அவனுக்குத் தண்டனை அளிக்கக்கூடிய அதிகாரமோ, உரிமையோ கிடையாது. ஆகவே, இவ்விதமாகப் பலவீனமுள்ளவனை இறைவனாக ஆக்குவதும் பூமியில் இருந்து கொண்டு ஏதாவது காரியங்களுக்கு அவனை நம்பியிருப்பதும் அறிவீனமாகும். ஏனெனில் இதுவரை அவனது ஆட்சி பூமியில் இல்லையே!

ஆனால் பிற படைப்புகள் மீது இறைவனுக்கு அதிகாரங்கள் இருந்து வருவதுபோல் பூமியிலும் ஒவ்வொரு சமயமும் அதே அதிகாரங்கள் அவனுக்கு இருந்து வருவதாகத் திருக்குர்ஆனின் ஃபாத்திஹா அதிகாரத்தின் துஆ நமக்குக் கற்றுத் தருகிறது. மேலும் அந்த அதிகாரத்தின் ஆரம்பத்தில் இறைவனது முழுமையான ஆட்சிக்குரிய பண்புகள் அனைத்தும் விவரிக்கப்பட்டுள்ளன. இவை உலகில் வேறு எந்த வேதநூலிலும் இவ்வளவு தெளிவாக விவரிக்கப்படவில்லை. தான் ரஹ்மான், ரஹீம், மாலிகி யவ்மித்தீன் ஆக இருப்பதாக இறைவன் கூறிக்கொள்வதுடன் பின்னர் தன்னிடம் துஆ கேட்கும்படி போதித்திருக்கின்றான். மேலும் கேட்கப்பட்ட அந்த துஆவில் மஸீஹால் போதிக்கப்பட்ட துஆவைப் போல் ஒவ்வொரு நாள் அப்பத்திற்காக மட்டும் வேண்டப்படவில்லை. மாறாக படைப்புக் காலந்தொட்டே மனித இயல்பில் என்னவெல்லாம் தகுதிகள் வழங்கப்பட்டுள்ளனவோ மேலும் அவனுக்காக என்னவெல்லாம் விருப்பமாக்கப்பட்டுள்ளனவோ அவைகளுக்காகவே துஆ கற்றுக் கொடுக்கப்பட்டிருகின்றது. அந்த துஆ இதுவாகும்:

“இஹ்தினஸ்ஸிராத்தல் முஸ்தகீம். ஸிராத்தல்ல தீன அன்அம்த அலைஹிம்” ***(திருக்குர்ஆன் 1:6-9)***

பொருள்: முழுமையான பண்புகளுக்கெல்லாம் உரிமையாளனே! அருளுக்குரியவனே! ஒவ்வொரு அணுக்களும் உன்னாலேயே

வளர்ந்து வருகின்றன. மேலும் உனது பண்புகளாகிய ரஹ்மானிய்யத், ரஹீமிய்யத், நன்மை தீமைகளுக்கு பிரதிபலன் அளிக்கும் வல்லமை இவைகளால் அவை பலன் அடைந்து வருகின்றன. நீ எங்களை சென்ற கால நேர்வழி பெற்றவர்களின் வாரிசுகளாக ஆக்குவாயாக! அவர்களுக்கு அருளப்பட்ட ஒவ்வோர் அருட்கொடையையும் எங்களுக்கு நீ தந்தருள்வாயாக. மேலும் நாங்கள் உனக்குக் கீழ்ப்படியாதவர்களாகி உனது கோபத்திற்கு ஆளாகாமலிருக்க நீ எங்களைக் காப்பாற்றுவாயாக. மேலும் நாங்கள் உனது உதவி பெறுவதிலிருந்து பாக்கியம் கெட்டவர்களாகி வழிகெட்டுப் போவதிலிருந்தும் நீ எங்களைத் தடுத்துப் பாதுக்காப்பாயாக. (ஆமீன்)

இப்போது இந்த எல்லாவிதமான ஆராய்ச்சிகளிலிருந்தும் பைபிளின் புதிய ஏற்பாட்டின் துஆவிற்கும் திருக்குர்ஆனின் துஆவிற்குமுள்ள வேறுபாடு வெளிப்பட்டு விட்டது. புதிய ஏற்பாடானது இறைவனது ஆட்சி வருவதற்குரிய ஒரு வாக்குறுதியை அளிக்கிறது. ஆனால் திருக்குர்ஆனோ இறைவனது ஆட்சி உங்களிடையே இருந்து வருவதாகக் கூறுகிறது. இருந்து வருவது மட்டுமல்லாமல் செயல் முறையில் உங்கள் மீது அருட்கொடையும் தொடர்ந்து நடைபெற்று வருவதாகவும் அது கூறுகிறது. சுருங்கச் சொல்லின் புதிய ஏற்பாட்டில், ஒரு வாக்குறுதி மட்டுமே இருக்கிறது. இதற்கு மாறாக திருக்குர்ஆன் வாக்குறுதி மட்டுமல்லாமல் நிலைநாட்டப்பட்ட ஆட்சியையும் அதன் அருட்கொடைகளையும் காட்டிக் கொண்டிருக்கிறது. மேலும் திருக்குர்ஆன் உண்மையாளர் இவ்வுலக வாழ்விலேயே இரட்சிப்பையும், சுகபோகங்களையும் வழங்கக்கூடிய இறைவனையே அறிமுகப்படுத்துகிறது. இதிலிருந்தும் திருக்குர்ஆனின் மகத்துவம் நன்கு புலனாகிறது. மேலும் எந்த ஓர் ஆன்மாவும் அவனுடைய அருட்கொடையைப் பெறாமல் இல்லை. மேலும் ஒவ்வோர் ஆன்மா மீதும் அதற்குத் தகுந்தாற்போல் அதனது ருபூபிய்யத், ரஹ்மானிய்யத், ரஹீமிய்யத் ஆகியவற்றின் அருட்கொடைகள் இயங்கிக் கொண்டிருக் கின்றன. இதற்கு மாறாக புதிய ஏற்பாடானது இதுவரை ஆட்சிவராமல் வெறும் வாக்குறுதி மட்டும் அளிக்கப்பட்ட இறைவனையே அறிமுகப்படுத்துகிறது. ஆகவே, பகுத்தறிவு எதனை ஏற்றுக்கொள் வதற்குத் தகுதிபடைத்ததாகக் கருதுகிறது என்பதை இப்போது சிந்தியுங்கள்.

ஹாபிஸ் ஷீராஸி என்பவரின் கீழ்வரும் கூற்று உண்மையாகும்.

"முரீத் பீர் மகானம் ஸமன் மரஞ்ச் ஏ ஷேக்





சராகே வஃதா தூ கர்தீ வாவ் பஜா ஆவர்த்"

பொருள்: ஷேக்கே! என்னோடு நீ வருத்தப்படாதிருப்பீராக. நான் எம்பெருமானார் (ஸல்) அவர்களின் சீடனும் ஊழியனுமாவேன். நீர் வாக்குறுதி மட்டும் செய்துள்ளீர். ஆனால் என் அன்புக்குரிய குருவாகிய திருநபி (ஸல்) அவர்களோ அந்த எல்லா வாக்குறுதிகளையும் நிறைவேற்றியுள்ளார்கள்.

பைபிளின் புதிய ஏற்பாட்டில் சகித்துக் கொள்பவர்கள், ஏழை எளியவர்கள் ஆகியோர் போற்றப்பட்டிருக்கிறார்கள். மேலும் துண்புறத்துப்படும் நிலையில் எதிர்த்துப் போர் செய்யாதவர்களும் போற்றப்பட்டிருக்கிறார்கள். இதற்கு மாறாக திருக்குர்ஆன் நீங்கள் எந்நேரமும் அடக்கமுள்ளவர்களாக இருக்க வேண்டும்; தீமையை எதிர்க்கக் கூடாது என்று மட்டும் கூறாமல் சகிப்புத்தன்மை அடக்கம், எளிமை எதிர்க்காமலிருப்பது ஆகியவை நல்லதென்றாலும் இடத்தையும் சந்தர்ப்பத்தையும் கவனிக்காமல் பயன்படுத்தினால் அது தீமையானதாகும். ஆகவே, நீங்கள் இடத்தையும் சந்தர்ப்பத்தையும் கவனித்து ஒவ்வொரு நன்மையான காரியத்தையும் செய்யுங்கள் என்றும் அது கூறுகிறது. ஏனெனில் சந்தர்ப்ப, சூழ்நிலைக்கு மாறாக செய்யப்படும் நன்மை தீமையாகும். எவ்வாறு மழை மிகவும் நல்லதாகவும், அவசியமானதாகவும் இருந்த போதிலும் சந்தர்ப்பத்திற்கு மாறாக பெய்தால் அம்மழையே பெரும் அழிவுக்குக் காரணமாகி விடுகிறது என்பதனை நீங்கள் பார்த்து வருகிறீர்கள். மேலும் ஒரேவிதமான குளிர்ச்சியான உணவு அல்லது சூடான உணவைத் தொடர்ச்சியாக உண்டு வந்தாலும் உங்களது ஆரோக்கியமானது நிலைத்திருக்க முடியாது என்பதனையும் நீங்கள் கண்டு வருகிறீர்கள். மாறாக சமய சந்தர்ப்பத்திற்குத் தக்கவாறு நீங்கள் அருந்தும் அல்லது உண்ணும் பொருள்களில் அவ்வப் போது மாற்றம் இருந்து வந்தால்தான் உங்களது ஆரோக்கியம் நிலைத்திருக்க முடியும். ஆகவே கடுமை, மென்மை, மன்னித்தல், பழிவாங்குதல், துஆச் செய்தல் மற்றும் ஒரு சிலருக்கு விரோதமாகச் செய்யப்படும் துஆக்கள் மேலும் பிற நன்நடத்தைகளிலெல்லாம் உங்களுக்கு சந்தர்ப்பத்திற்கு ஏற்ற மாறுதல் தேவை.

நீங்கள் மிகச் சிறந்த சாந்தகுணம் உடையவர்களாகவும், நல்லொழுக்கமுள்ளவர்களாகவும் ஆகுங்கள். ஆயினும் இடத்திற்கும், சந்தர்ப்பத்திற்கும் மாறாக அவ்வாறு நீங்கள் இருத்தலாகாது. சுய

விருப்பங்கள் எனும் எந்தவொரு விஷமும் கலக்கப்படாத உண்மையான நல்லொழுக்கமானது மேலிருந்து பரிசுத்த ஆவியின் மூலமாகவே வருகின்றது என்பதனையும் நீங்கள் நினைவிற் கொள்ளுங்கள். மேலிருந்து அந்த நல்லொழுக்கங்கள் உங்களுக்கு அருளப்படாதவரை அவற்றை நீங்கள் உங்கள் சுய முயற்சியால் மட்டும் பெற்றுக் கொள்ள முடியாது. மேலும் பரிசுத்த ஆவியின் மூலமாக வானத்தின் அருட்கொடையிலிருந்து நல்லொழுக்கத்தில் பங்கு பெறாத ஒவ்வொருவனும் அவன்தன் நல்லொழுக்கத்தைப் பற்றிய வாதத்தில் பொய்யனாகவே இருக்கிறான். ஏனெனில் அவனது நல்லொழுக்கம் என்னும் தண்ணீரின் அடியில் அதிகமான சேறும், சாணமும் உள்ளன. அவை ஆன்மாவின் ஆவேசத்தின் போதே வெளியாகின்றன.

ஆகவே, அச்சேற்றிலிருந்தும், சாணத்திலிருந்தும் நீங்கள் இரட்சிப்பு பெறுவதற்காகவும், பரிசுத்த ஆவி உங்களிடையே உண்மையான பரிசுத்தத்தையும், செழுமையையும் உருவாக்குவதற்காகவும், நீங்கள் ஒவ்வொரு சமயமும் இறைவனிடம் அவனது சக்தியை தேடிக்கொண்டே இருப்பீர்களாக.

வேறெதுவும் இணை இல்லாத உண்மையானதும், தூய்மையானதுமான நல்லொழுக்கங்களே உண்மையானவர்களின் அற்புதங்களாக இருக்கின்றன என்பதனையும், நினைவில் கொள்ளுங்கள். ஏனெனில் இறைவனுக்காகத் தங்களை அர்ப்பணித்த நிலையில் அவனோடு ஐக்கியமாகாதவர்கள் அவனிடமிருந்து சக்தியை பெறுவதில்லை. அவர்களால் தூய்மையான நல்லொழுக்கங்களையும் பெற முடியாது. எனவே, நீங்கள் இறைவனோடு உண்மையான தொடர்பை உருவாக்குங்கள்.

ஏளனமாக நகைத்தல், பொறாமை, பழித்தல், பேராசை, பொய், விபச்சாரம், தீயப்பார்வை, தீயஎண்ணம், உலக இச்சை, பெருமை, கர்வம், சுயநலம், விஷமத்தனம், குதர்க்க வாதம் ஆகியவற்றை முற்றிலும் விட்டு விடுங்கள். இதன் பின்னரே நீங்கள் எல்லாவற்றையும் வானத்திலிருந்து பெறுவீர்கள். எதுவரை உங்களை மேலே இழுத்துச்செல்லக்கூடிய அவ்வுயர்ந்த சக்தியுள்ளவன் எப்போதும் உங்களோடு இருந்து வர மாட்டோனோ மேலும் வாழ்வு அளிக்கக்கூடிய பரிசுத்த ஆவி உங்களுக்குள் நுழையாதோ அதுவரை நீங்கள் மிகவும் பலவீனத்திலும், இருளிலும் ஆழ்ந்தவர்களாகவே





காணப்படுவீர்கள். மேலும் உயிர் இல்லாத பிணமாகவும் இருந்து வருவீர்கள். இந்நிலையில் நீங்கள் எந்த ஒரு துன்பத்தையும் எதிர்த்து சமாளிக்கவும் முடியாது. வெற்றியிலும், செல்வ நிலையிலும் கர்வம் அகங்காரத்திலிருந்து தப்பவும் முடியாது. மேலும் ஒவ்வொரு விதத்திலும் ஷெய்த்தானாலும் உலக இச்சையாலும் தோல்வி அடைந்தவர்களாகவே நீங்கள் காணப்படுவீர்கள். ஆகவே, இறைவனது சிறப்பான கரத்திலிருந்து இறங்கக்கூடிய பரிசுத்த ஆவியானது உங்களை நன்மை, நேர்மை ஆகியவற்றின் பக்கம் திருப்புவதே உங்களுக்குரிய உண்மையான ஒரே பரிகாரமாகும். ஆகவே, நீங்கள் ஷெய்த்தானின் பாதையிலிருந்து அடைக்கலம் பெறுவதற்காக வானத்தோடு சம்பந்தப்பட்டவர்களாக ஆகுங்கள்; பூமியோடு சம்பந்தப்பட்டவர்களாக ஆகாதீர்கள். மேலும் நீங்கள் ஒளியின் வாரிசாக ஆகுங்கள். இருள் மீது மோகம் கொண்டவர்களாக ஆகாதீர்கள். ஏனெனில் எப்போதும் ஷெய்த்தானின் குறிக்கோளானது இரவே அல்லாமல் பகல் அன்று. ஏனெனில் அவன் இருளில் கால் எடுத்து வைக்கும் பழக்கத்தையுடைய பழைய திருடனாய் இருக்கின்றான்.

அதிகாரம் ஃபாத்திஹாவில் வெறும் போதனை மட்டும் அல்ல. மாறாக, அதில் பெரும் முன்னறிவிப்பும் இடம் பெற்றிருக்கிறது. அதாவது, இறைவன் தனது நான்கு பண்புகளாகிய ருபூபிய்யத் (படைத்துபரிபாலித்தல்) ரஹ்மானிய்யத் (அருள் செய்தல்) ரஹீமிய்யத் (கருணை காட்டுதல்) மாலிக்கி யவ்மித்தீன் (நன்மை தீமைக்கு பிரதிபலன் அளித்து அதன் மீது தனது அதிகாரத்தையும் பொதுவான வல்லமைகளையும் வெளிப்படுத்துதல்) ஆகியவற்றிற்கு பிறகுள்ள வசனங்களில் இந்த துஆவையும் கற்றுத் தந்துள்ளான்:

இறைவா! சென்றுபோன உண்மையாளர்களாகிய நபிமார்கள் ரசூல்மார்கள் ஆகியோரின் வாரிசுகளாக எங்களையும் ஆக்குவாயாக. அவர்களது வழிகளை எங்களுக்குத் திறப்பாயாக. அவர்களது அருட்கொடைகளை எங்களுக்குத் தந்தருள்வாயாக.

இறைவா! எவர்கள் மீது உலகிலேயே உனது ஆக்கினை இறங்கியதோ அக்கூட்டத்தினரைச் சேர்ந்தவர்களாக நாங்கள் ஆவதிலிருந்தும் நீ எங்களைப் பாதுகாப்பாயாக. அதாவது, ஹஸ்ரத் ஈசா மஸீஹ் காலத்தில் பிளேக்கால் அழிக்கப்பட்ட யூதர்கள்.

இறைவா! உனது வழிகாட்டுதல் பெறாமல் வழி கெட்டுப்போன கூட்டத்தாரைச் சேர்ந்தவர்களாக அதாவது, கிறிஸ்தவர்களைப் போன்றவர்களாக நாங்கள் ஆவதிலிருந்தும் நீ எங்களைப் பாதுகாப்பாயாக.

இந்த துஆவில் ஒரு முன்னறிவிப்பு மறைந்து உள்ளது. அதாவது முஸ்லிம்களில் சிலர் உண்மையிலும் தூய்மையிலும் நிலைத்திருந்த காரணத்தால் முற்காலத்திலுள்ள நபிமார்களின் வாரிசாக ஆவார்கள் என்றும் நுபுவ்வத், ரிஸாலத் ஆகியவற்றின் அருட்கொடைகளைப் பெறுவார்கள் என்றும் சிலர் இவ்வுலகிலேயே இறை ஆக்கினை இறங்கிய யூதர்களின் குணம் உடையவர்களாக ஆகிவிடுவார்கள் என்றும் மற்றுஞ்சிலர் கிறிஸ்தவர்களது போர்வையில் காணப்படுவார்கள் என்பதுமாகும்.

ஏனெனில், ஒரு கூட்டத்தாரை ஒரு வேலையிலிருந்து இறைவன் தடை செய்யும்போது, நிச்சயமாக அவர்களில் சிலர் அவ்வேலையை செய்யக்கூடியவர்களாக இருக்கிறார்கள். இது இறைவனின் நுட்பமான ஞானத்தின் வெளிப்பாடாகும். மேலும், சிலர் நன்மையிலும் நல்லதிர்ஷ்டத்திலும் பங்கு கொள்பவர்களாக இருக்கிறார்கள் என்பது எப்போதும் இறைவனது சொல்லில் இருந்து வரக்கூடிய நடைமுறையாகும். உலகின் ஆரம்பத்திலிருந்து இறுதிவரை இறைவன் எத்தனை வேதங்களை அனுப்பியுள்ளானோ அந்த எல்லா வேதங்களிலும் ஆதியிலிருந்தே இருந்து வரக்கூடிய இறைவனுடைய பழைய நடைமுறை என்னவெனில், அவன் ஏதாவது ஒரு சமுதாயத்தினரை ஒரு வேலையிலிருந்து தடைசெய்யும்போது அல்லது ஒரு வேலையைச் செய்யத் தூண்டும்போது சிலர் அவ்வேலையைச் செய்வார்கள். சிலர் செய்ய மாட்டார்கள் என்பது அவனது ஞானத்தில் முடிவு செய்யப்பட்டதாக இருந்து வருகிறது.

ஆகவே, இந்த சமுதாயத்திலிருந்து யாராவது ஒரு மனிதர் முழுமையாக நபிமார்களின் நிலையில் தோன்றுவார் என்று இந்த சூரா ஃபாத்திஹா எனும் திருக்குர்ஆனின் முதல் அதிகாரம் முன்னறிவிக்கின்றது. 'ஸிராத்தல்லதீன அன்அம்தஅலைஹிம்' என்னும் வசனத்திலிருந்து நிரூபணமாகின்ற முன்னறிவிப்பு வெளிப்படுவதாகும். முழுமையாகவும், நிறைவாகவும் நிறைவேறுவதற்காக இது நடந்துதான் ஆக வேண்டும். மேலும்





இவர்களிலிருந்து ஒரு கூட்டத்தினர் ஹஸ்ரத் ஈசா சாபமிட்டிருந்த, இறைவனது ஆக்கினைக்கு ஆளான அந்த யூதர்களைப் போன்று வெளிப்படுவார்கள் என்ற இந்த முன்னறிவிப்பு 'கைரில் மஃலூபி அலைஹிம்' என்னும் இந்த ஆயத்திலிருந்து தெளிவாகிறது. இதுவும் நிறைவேற வேண்டும். மேலும் இவர்களில் வேறொரு கூட்டத்தினர் கிறித்தவர்களைப் போன்று ஆகிவிடுவார்கள். இவர்கள் மதுபானம் அருந்துதல், கூடாததை கூடுமானதாக நம்புதல், கெடுதிகள் செய்தல் இவற்றின் காரணமாக இறைவனது வழிகாட்டலின் பாக்கியத்தை இழந்த கிறித்தவர்களாகி விடுவர். ஆகவே, 'வலல்லால்லீன்' என்னும் இந்த வசனத்திலிருந்து வெளியாகிக்கொண்டிருக்கின்ற இந்த முன்னறிவிப்பும் நிறைவேற வேண்டியிருந்தது.

மேலும் இறுதி காலத்தில் முஸ்லிம்கள் என்று அழைக்கப்படுகின்ற ஆயிரக்கணக்கானோர் யூத குணம் உடையவர்களாக ஆகிவிடுவார்கள் என்பது முஸ்லிம்களின் நம்பிக்கையில் இடம்பெற்ற ஒரு விஷயமாகும். மேலும் திருக்குர்ஆனில் ஒரு சில இடங்களில் இதைப்பற்றிய முன்னறிவிப்பு இடம் பெற்றிருக்கிறது. மேலும் நூற்றுக்கணக்கான முஸ்லிம்கள் கிறிஸ்தவர்களாக மாறி இருப்பதும் அல்லது கிறிஸ்தவர்களைப் போன்று கட்டுப்பாடு இன்றி சுதந்திரமாக வாழ்க்கை நடத்தி வருவதும் வெளிப்படையாக நம்மால் அறியவும் உணரவும் முடிகிறது. இதுமட்டுமல்லாமல் முஸ்லிம்கள் என்று அழைக்கப்படுவோரில் பெரும்பாலார் கிறிஸ்தவர்களைப் போன்ற வாழ்க்கை நடைமுறையை விரும்புகின்றனர். தங்களை முஸ்லிம்கள் என்று அழைத்துக்கொண்டு தொழுகை, நோன்பு ஹலால் ஹராம் இவற்றின் சட்டங்களை மிகவும் வெறுப்புடன் பார்க்கிறார்கள். யூத குணம் படைத்தவர்களும் கிறிஸ்தவ குணம் படைத்தவர்களுமான இவ்விரு பிரிவினரும் இந்நாட்டில் பரவிக்கொண்டிருப்பதை நம்மால் காணமுடிகிறது. எனவே, சூரா ஃபாத்திஹாவில் இடம் பெற்று இருக்கும் இவ்விரு முன்னறிவிப்புகளும் நிறைவேறியிருப்பதை நீங்கள் பார்த்து விட்டீர்கள். மேலும் பெரும்பாலான முஸ்லிம்கள் யூத குணம் உள்ளவர்களாகவும், கிறிஸ்தவர்களின் போர்வையில் இருந்து வருவதையும், நீங்கள் உங்களது கண்களால் பார்த்து விட்டீர்கள்.

இப்போது மூன்றாவது முன்னறிவிப்பு நீங்கள் ஏற்றுக்கொள்ளப்படுவதற்குத் தகுதியுடையதாயிருக்கிறது. அதாவது

முஸ்லிம்கள் யூதர்களாகவும், கிறிஸ்தவர்களாகவும் ஆகியதால் இவர்கள் யூத கிறிஸ்தவர்களின் தீங்குகளில் பங்கு கொண்டதைப்போல் இவர்களில் சிலர் இஸ்ரவேல் சந்ததிகளில் சென்றுபோன, பரிசுத்தவான்களின் பதவியிலும், அந்தஸ்திலும் பங்கு பெறுவதும் இவர்களுக்கு உரிமையாக இருந்தது. இல்லாவிடில் முஸ்லிம்களுக்கு யூதர்கள் என்று பெயர் வைக்கும் அளவுக்கு இறைவன் அவர்களை கிறிஸ்தவர் யூதர்களின் தீங்குகளில் பங்குள்ளவர்களாக ஆக்கினான். ஆனால் அவர்களது இறைதூதர்கள், நபிமார்கள் ஆகியோரின் பதவிகளிலிருந்து இந்தச் சமுதாயத்திற்கு எவ்வித பங்கும் அளிக்கவில்லை என்று இறைவன் மீது தவறான எண்ணம் கொள்வதாகும். இவ்வாறிருக்க இந்தச் சமுதாயம் எக்காரணத்தால் உத்தம சமுதாயமானது? மாறாக கெடுதிகளுக்குரிய சமுதாயமாகவே ஆனது. ஒவ்வொரு கெடுதலின் முன்மாதிரிகளே அவர்களுக்குக் கிடைத்தது; நன்மையின் முன்மாதிரி அவர்களுக்கு கிடைக்கவில்லை. இஸ்ரவேலரின் சந்ததியினரின் எல்லா நபிமார்களின் வாரிசாகவும் அவர்களின் நிழலாகவும் இருக்கக் கூடிய நபிமார்கள், ரஸூல்கள் என்ற வகையில் இந்த சமுதாயத்திலிருந்தும் யாராவது தோன்றுவது அவசியமில்லையா?

ஏனெனில் இறைவன் இக்காலத்தில் இந்தச் சமுதாயத்தில் ஆயிரக்கணக்கில் யூத குணம் படைத்தவர்களை படைக்கவும், (முஸ்லிம்களில்) ஆயிரக்கணக்கானவர்களை கிறிஸ்தவ மார்க்கத்தில் சேர்க்கவும் செய்துவிட்டு - ஆனால் சென்றுபோன நபிமார்களின் வாரிசாகவும் அவர்களது அருட்கொடையைப் பெற்றவருமான யாரேனும் ஒரு மனிதனையும் அவன் தோற்றுவிக்கவில்லை என்பது இறைவனுடைய அருட்கொடைக்கு முற்றிலும் அப்பாற்பட்டதொரு விஷயமாகும். ஏனெனில், எவ்வாறு முஸ்லிம்கள் யூதர்களாகவும், கிறிஸ்தவர்களாகவும் ஆவார்கள் என்ற முன்னறிவிப்பு நிறைவேறியதோ அவ்வாறே 'இஹ்தினஸ்ஸிராத்தல் முஸ்தக்கீம் ஸிராத்தல்லதீன அன்அம்த அலைஹிம்' என்ற இந்த வசனத்திலிருந்து வெளிப்படும் முன்னறிவிப்பும் நிறைவேறியே தீர வேண்டும். மேலும் இந்த சமுதாயத்திற்கு ஆயிரக்கணக்கில் கெட்டபெயர்கள் வழங்கப்பட்டிருக்க - மேலும் அவர்கள் யூதர்களாக ஆவதும் அவர்கள் விதியில் உள்ளது என குர்ஆன், ஹதீதில் இருந்து நிரூபணம் ஆகும் நிலையில் அவர்கள் சென்றுபோன கிறிஸ்தவர்களிலிருந்து தீய விஷயங்களைப் பெற்றது போல் நல்ல விஷயங்களுக்கும் அவர்கள்





வாரிசாக வேண்டும் என்பதும் இறைவனது அருள் நாட்டம் கொள்வது அவசியமானதாயிருந்தது.

இதனால் இறைவன் 'சூரா ஃபாத்திஹாவில் இஹ்தினஸ்ஸிராத்தல் முஸ்தக்கீம்' என்னும் இந்த வசனத்தில் இந்தச் சமுதாயத்திலுள்ளவர்கள் வெறும் யூதர்களாகவும், கிறிஸ்தவர்களாகவும் ஆவார்கள் என்றோ அவர்கள் அக்கூட்டத்தினர்களின் கெடுதிகளை மாத்திரம் பெற்று நன்மையைப் பெறமாட்டார்கள் என்று மட்டும் கூறாமல் இந்தச் சமுதாயத்தில் சிலர் சென்றுபோன நபிமார்களது அருட்கொடையையும் பெறுவார்கள் என்றும் நற்செய்தி வழங்கியுள்ளான்.

சூரா 'தஹ்ரீமிலும்' இதுவே சுட்டிக்காட்டப்பட்டுள்ளது.(66:13) அதாவது, இந்தச் சமுதாயத்தில் சிலர் மர்யம் சித்தீக்காவுடன் ஒப்புமையுள்ளவர்களாகக் காணப்படுவார்கள் என்பதும் அவர் (மர்யம்) பாவம் அற்ற தூய்மையான வாழ்க்கை நடத்தி வந்ததால் அவரது கர்ப்பப்பையில் ஈசாவுடைய ஆவி ஊதப்பட்டு அதிலிருந்து ஈசா பிறந்தார். இந்த வசனத்தில் இந்தச் சமுதாயத்தில் ஒரு மனிதர் தோன்றுவார் என்றும் முதலாவதாக அவருக்கு மர்யமின் பதவி கிடைக்கும் என்றும் பின்னர் அவர் மீது ஈசாவுடைய ஆவி ஊதப்படுமென்றும் அப்போது மர்யமிலிருந்து ஈசா வெளிப்படுவார் என்றும் சுட்டிக் காட்டப்பட்டுள்ளது. அதாவது, அவர் மர்யமின் பண்புகளிலிருந்து ஈசாவின் பண்புகளுக்கு மாறி விடுவார். அதாவது மர்யமாக இருக்கும் பண்பு ஈசாவாக ஆகுதல் எனும் குழந்தையை பெற்றுத் தந்தது. இவ்வாறு அவர் இப்னுமர்யம் (மர்யமின் மகன்) என அழைக்கப்படுவார்.

பராஹீனே அஹ்மதிய்யாவில் முதலாவதாக எனது பெயர் 'மர்யம்' என்று வைக்கப்பட்டது. அதனையே 241-ம் பக்கத்தில் இடம்பெற்று இருக்கும் 'அன்னா லக்க ஹாஸா' அதாவது மர்யமே! நீ இந்த அருட்கொடையை எங்கிருந்து பெற்றாய் என்னும் இறையறிவிப்பு சுட்டிக்காட்டுகிறது. மேலும் அதனைப் பற்றியே 226ம் பக்கத்தில் 'ஹுஸ்ஸ இலைக்க பி ஜிஸ்யின் நகலதிஹ்' அதாவது மர்யமே! பேரீச்ச மரக்கிளையைப் பிடித்து உலுக்குவாயாக என்றும் இந்த வெளிப்பாட்டிலும் சைகையாகக் காணப்படுகிறது. பின்னர் பராஹீனே அஹ்மதிய்யாவில் 496ம் பக்கத்தில் இந்த இறை வெளிப்பாடும் இடம் பெற்று இருக்கிறது.

அதாவது, 'யாமர்ய முஸ்குன் அந்த வ ஸவ்ஜுக்கல் ஜன்னத்த நஃபக்து பீக்க மில்ல துன்னீ ரூஹஸ்ஸித்க்' அதாவது, மர்யமே! நீர் உமது நண்பர்களோடு சுவர்க்கத்தில் பிரவேசிப்பாயாக. நான் உம்மிடத்தில் உண்மையான ஆவியை ஊதினோம். இறைவன் இந்த வசனத்தின் மூலமாக எனக்கு ரூஹுஸ் ஸித்க் (உண்மையான ஆன்மா) எனப் பெயரிட்டுள்ளான். இது 'ஃபநபஹ்னா ஃபீஹி மின் ரூஹினா' (திருக்குர்ஆன் 66:13) என்னும் வசனத்திற்கு ஒப்பானதாக இருக்கிறது. ஆகவே இந்த இடத்தில் உவமையாக மர்யமின் வயிற்றில் உண்மையான ஆன்மா எனும் பெயர் கொண்ட ஈசாவின் ஆவி போய் சேர்ந்தது.

இதன்பின் பராஹீனே அஹ்மதிய்யாவின் இறுதிபக்கம் 556ல் மர்யமின் வயிற்றில் காணப்பட்ட ஈசாவின் பிறப்பைப் பற்றி 'யா ஈசா இன்னீ முத்த வஃப்பீக்க வரா ஃபிவுக்க இலைய்ய வஜாஇலுல்ல தீனத்தபவூக்க ஃபவ்க்கல் லதீன கஃபரூ இலா யவ்மில் கியாமா' என்று இல்ஹாம் இறங்கியது. இவ்விடத்தில் எனது பெயர் ஈசா என்று வைக்கப்பட்டிருக்கிறது. பராஹீனே அஹ்மதிய்யாவில் 496ம் பக்கத்தில் ஆவி ஊதப்பட்டதாக வெளிப்படுத்தப்பட்ட அந்த ஈசா பிறந்து விட்டதாக இந்த இறைவெளிப்பாடு வெளிப்படுத்தியிருக்கிறது. இதன் காரணத்தால் நான் ஈசப்னுமர்யம் என்று அழைக்கப்பட்டிருக்கிறேன். ஏனெனில் எனது ஈசாவின் நிலை மர்யமின் நிலையிலிருந்து இறைவனது ஊதுதலால் உருவானது. (பராஹீனே அஹ்மதிய்யா பக்கங்கள் 496, 556 காண்க.)

இந்த சம்பவத்தையே அதிகாரம் தஹ்ரீமில் முன்னறிவிப்பாக முழு விளக்கமாக இவ்வாறு குறிப்பிடப்பட்டுள்ளது: ஈசப்னு மர்யம் இந்தச் சமுதாயத்தில் எவ்வாறு பிறப்பாரென்றால் முதலாவதாக இந்தச் சமுதாயத்தில் ஒருவர் மர்யமாக ஆக்கப்படுவார். பின்னர் அந்த மர்யமில் ஈசாவின் ஆவி ஊதப்படும். எனவே, அது மர்யமின் தன்மையை கொண்டிருத்தல் எனும் கர்ப்பப்பையில் ஒரு குறிப்பிட்ட காலம் வரை வளர்ச்சி பெற்று ஈசாவின் ஆன்மீகத்தில் பிறப்பார். இவ்விதமாக அவர் ஈசப்னு மர்யம் என்று அழைக்கப்படுவார். முஹம்மதிய சமுதாயத்தில் தோன்றக்கூடிய இந்த இப்னுமர்யமைப் பற்றி இன்றிலிருந்து 1300 ஆண்டுகளுக்கு முன்பாகக் குர்ஆனில் அதாவது அதிகாரம் தஹ்ரீமில் விவரிக்கப்பட்டுள்ள செய்தி இதுதான்.





பின்னர் இந்த வசனத்தைப் பற்றி பராஹீனே அஹ்மதிய்யாவில் இறைவனே விரிவுரை அளித்துள்ளான். திருக்குர்ஆன் இருக்கிறது. ஒரு பக்கம் திருக்குர்ஆனை எடுத்துக்கொள்ளுங்கள். மறு பக்கம் பராஹீனே அஹ்மதிய்யாவையும் வைத்துக்கொள்ளுங்கள். அதன்பின், இந்தச் சமுதாயத்திலும் ஒருவர் மர்யம் என்று அழைக்கப்படுவார்; பின்னர் அவர் மர்யமிலிருந்து ஈசாவாக்கப் படுவார். அதாவது, அதிலிருந்து அவர் பிறப்பார் என்று அதிகாரம் தஹ்ரீமில் கூறப்பட்டுள்ள அந்த முன்னறிவிப்பு பராஹீனே அஹ்மதிய்யாவில் இடம் பெற்றுள்ள இறைவெளிப்பாடுகளினால் எவ்வாறு மிகத் தெளிவாக நிறைவேறியுள்ளது என்பதனை நியாய உணர்வோடும், அறிவோடும், தக்வா என்னும் இறையச்சத்தோடும் நன்கு சிந்தித்துப் பாருங்கள். இது மனிதனின் சக்திக்குட்பட்டதாக இருக்கமுடியுமா? இது என் அதிகாரத்திலுள்ளதா?

திருக்குர்ஆன் இறங்கிக் கொண்டிருந்த காலத்தில் நான் இருந்தேனா என்ன? என்னை இப்னு மர்யமாக்குவதற்காக ஒரு வசனத்தை இறக்க வேண்டும் எனவும், உம்மை ஏன் இப்னு மர்யம் என கூறப்பட வேண்டும் என்ற ஆட்சேபணையிலிருந்து என்னை விடுவிக்குமாறு நான் (இறைவனை) வேண்டுவதற்கு! நான் என் சார்பாக இறையறிவிப்பை இட்டுக் கட்டி முதலில் எனக்கு மர்யம் என்று பெயர் வைத்து, பிறகு முந்தைய காலத்து மர்யத்தைப் போன்று என் மீது ஈசாவின் ஆன்மா ஊதப்பட்டது என்ற இறையறிவிப்பை இட்டுக்கட்டிக் கூறி, பிறகு கடைசியில் பராஹீனே அஹ்மதிய்யாவின் 556-ம் பக்கத்தில், 'இப்போது நான் மர்யமாக இருந்து ஈசாவாகி விட்டேன்' என எழுதுவது ஆகிய இவையெல்லாம் இன்றிலிருந்து இருபது, இருபத்தைந்து ஆண்டுகளுக்கு முன்னால் - ஏன் - அதைவிட அதிக ஆண்டுகளுக்கு முன்னால் என் சார்பாக இந்தத் திட்டம் தீட்டப்பட்டிருக்க முடியுமா என்ன ?

அன்புக்குரியவர்களே! சிந்தியுங்கள்! இறைவனுக்கு அஞ்சுங்கள் ஒருபோதும் இது மனிதனின் செயல் அல்ல. இந்த நுட்பமான, நுணுக்கமான, ஞானங்கள் மனிதனது யூகத்துக்கும், எண்ணத்திற்கும் அப்பாற்பட்டவையாகும். பராஹீனே அஹ்மதிய்யாவை இயற்றி சில காலம் கடந்து விட்டது. அச்சமயத்தில் எனக்கு இத்திட்டம் பற்றிய எண்ணம் இருந்திருக்குமேயனால் இப்னுமர்யமாகிய ஈசா மஸீஹ் வானத்திலிருந்து மீண்டும் வருவார் என்று இதே பராஹீனே

அஹ்மதிய்யாவில் நான் ஏன் எழுதியிருக்க வேண்டும் ? ஆகவே இந்த நுட்பமான கருத்தை அறிந்திருப்பின் இந்த ஆதாரம் பலவீனம் அடையும் என இறைவன் அறிந்திருந்தான். இதனால் அவன் பராஹீனே அஹ்மதிய்யாவின் மூன்றாவது பாகத்தில் எனது பெயரை மர்யம் என்று வைத்தபோதிலும் இரு ஆண்டுகள் வரை நான் மர்யமின் பண்பால் வளர்ந்து வந்தேன். மேலும் மறைவாகவே வளர்ச்சி அடைந்து வந்தேன் என்பது பராஹீனே அஹ்மதிய்யாவிலிருந்து நிரூபணமாகிறது. பின்னர் இதன்மீது இரண்டு ஆண்டுகள் கடந்ததும் பராஹீனே அஹ்மதிய்யாவின் நான்காவது பாகம் 496ம் பக்கத்தில் குறிப்பிட்டிருப்பது போல் மர்யமைப்போல் ஈசாவின் ஆவி என்மீது ஊதப்பட்டது. மேலும் உவமையான நிலையில் நான் கர்ப்பவதியாக்கப்பட்டேன். இறுதியில் பலமாதங்களுக்கு பின்னர்-அது பத்து மாதங்களுக்கு அதிகமானதல்ல - பராஹீனே அஹ்மதிய்யாவின் நான்காவது பாகம் பக்கம் 556ல் இடம்பெற்றிருக்கும் இறைவெளிப்பாடு மூலமாக நான் மர்யமிலிருந்து ஈசாவாக்கப்பட்டேன். ஆகவே நான் இவ்வாறு ஈசப்னு மர்யமாக இருக்கிறேன்.

பராஹீனே அஹ்மதிய்யாவை இயற்றிக்கொண்டிருக்கும் சமயத்தில் இந்த மறைவான இரகசியங்கள் குறித்து இறைவன் எனக்கு அறிவிக்கவில்லை. ஆயினும் இந்த இரகசியங்களைக் கொண்ட எல்லா இறைவெளிப்பாடுகளும் என்மீது இறக்கப்பட்டு அவை பராஹீனே அஹ்மதிய்யாவில் பதிவு செய்யப்பட்டுள்ளன. ஆனால் அவற்றின் பொருள்கள் வரிசைமுறைகள் ஆகியவற்றைக் குறித்து எனக்கு அறிவிக்கப்படவில்லை. இதனாலேயே முஸ்லிம்களில் வழிவழியாக நம்பப்பட்டு வரும் நம்பிக்கையை பராஹீனே அஹ்மதிய்யாவில் நான் எழுதியிருந்தேன். அது எனது தன்னடக்கம் மற்றும் பகட்டில்லாத பண்பிற்கு சாட்சியாக இருக்கிறது. நான் அவ்வாறு எழுதியது இறைவெளிப்பாட்டின் அடிப்படையில் அல்ல. முஸ்லிம்களின் வழக்கமான நம்பிக்கையை எழுதியிருந்தேன். ஆகவே அது எதிரிகளுக்கு ஒரு ஆதாரமாக இருக்க முடியாது.

ஏனெனில் இறைவன் தானாகவே ஒன்றை எனக்கு விளங்க வைக்காதவரை மறைவான விஷயங்களை நான் அறிவேன் என்பது என் வாதம் அல்ல. இறைவனால் எனக்கு விளக்கப்படாத சமயம் வரை பறாஹீனே அஹ்மதிய்யாவில் இடம் பெற்றுள்ள சிலவெளிப்பாடுகளின் இரகசியங்கள் என்னால் புரிந்துக்கொள்ள





முடியாமல் இருக்க வேண்டும் என்பதை இறை ஞானம் நாடியது. ஆனால் எப்போது ஏற்ற சமயம் வந்தடைந்ததோ, அப்போது அந்த இரகசியங்களையெல்லாம் எனக்குப்புரிய வைக்கப்பட்டன. இதன் பின்பே நான் வாக்களிக்கப்பட்ட மஸீஹாக இருக்கிறேன் என்றும் எனது வாதத்தில் புதிய விஷயம் ஒன்றுமில்லை என்றும் பராஹீனே அஹ்மதிய்யாவில் திரும்பத் திரும்ப விவரத்துடன் எழுதப்பட்ட அதே வாதம்தான் என்பதை நான் அறிந்து கொண்டேன்.

இந்த இடத்தில் இன்னும் ஒரு வெளிப்பாட்டையும் குறிப்பிடுகிறேன். இதனை நான் ஏதாவது எனது நூலில் அல்லது பிரசுரத்தில் பிரசுரித்திருக்கிறேனா? இல்லையா? என்பது எனக்கு நினைவில் இல்லை. ஆனால் இதனை நூற்றுக்கணக்கான மக்களுக்கு நான் கூறியுள்ளேன் என்று எனக்கு நினைவில் உள்ளது. மேலும் எனது வெளிப்பாடுகளின் நினைவுக் குறிப்பில் இது இடம் பெற்று இருக்கிறது. இறைவன் எனக்கு முதலாவதாக மர்யம் என்று பட்டம் அளித்தான். பிறகு என்னுள் ஆவி ஊதியதாக இறைவெளிப்பாட்டை இறக்கினான். இதன்பின் இந்த இறை வெளிப்பாடு இறங்கியது:

“ஃபஜா அஹல் மக்காலு இலா ஜிஸ்யின் னக்லத்தி. காலத்

யாலைத்தனீ மித்துகப்ல ஹாதா. வகுன்து நஸீய்யம் மன்ஸிய்யா.’

பொருள்: பின்னர் மர்யமை (மர்யம் என்பது இந்த எளியவனையே குறிக்கும்.) பிரசவ வேதனையானது பேரீச்ச மரத்தின் பக்கம் கொண்டு வந்தது. அதாவது, பொதுமக்கள், அறிவிலிகள், புரியாத ஆலிம்கள் போன்றோரை சந்திக்க நேர்ந்தது. அவர்களிடம் ஈமான் (நம்பிக்கை) என்னும் கனி காணப்படவில்லை. அவர்கள் என்னை நிராகரித்தனர். இழிவுபடுத்தினர். பழித்துரைத்தனர். மேலும் பெரும் புயலையே உருவாக்கினர். அப்போது மர்யம் அந்தோ! நான் இதற்கு முன்பே இறந்து போய் இருக்கக்கூடாதா? எனது பெயரும் அடையாளமும் எஞ்சி இருக்காமல் போயிருக்கக்கூடாதா? என்று கூறினார். இது ஆரம்பத்தில் ஆலிம்களிடமிருந்து ஒட்டுமொத்தமாக ஏற்பட்ட பயங்கரமான கூக்குரலை சுட்டிக்காட்டுகிறது. இந்த வாதத்தை அவர்களால் சகிக்க முடியவில்லை. மேலும், அவர்கள் ஒவ்வொரு திட்டத்தைக் கொண்டும் என்னை அழிக்க விரும்பினர். அப்போது வேதனை, துக்கம், அறிவீனர்களின் கூக்குரல் இவற்றை கண்டு என் உள்ளத்தில் எழும்பிய வேதனையையும் கஷ்டத்தையும் இறைவன்

இங்கு சித்தரித்துக் கூறியுள்ளான். மேலும் அதனைப்பற்றிய இறை வெளிப்பாடுகள் இன்னும் இருக்கின்றன. உதாரணமாக,

“லகத் ஜிஃதி ஷைஅன்ஃபரிய்யா. மாகான ஆபூகிம் ரஅ ஸவ்யிவ் வமா கானத் உம்முக்கி பகிய்யா”

மேலும் இதோடு சேர்ந்த இன்னொரு வெளிப்பாடும் பராஹீனே அஹ்மதிய்யாவில் 521-வது பக்கத்தில் இடம் பெற்று இருக்கிறது.

அதாவது, “அலைஸல்லாஹு பிகாஃபின் அப்தஹு. வலினஜ் அலஹு ஆயத்தல்லின்னாஸி வரஹ்மதன் மின்னா. வகான அம்ரன் மக்ழிய்யா. கவ்லல் ஹக் கில்லதீ ஃபீஹீ தம்தரூன்” (பராஹீனே அஹ்மதிய்யா பக்கம் 516 வரி 12, 13 காண்க.)

பொருள்: மேலும் மக்கள் கூறியதாவது, நீ அருவருக்கத்தக்கதும் நிந்திக்கக்கூடியதும் நேரான பாதையை விட்டு தூரமானதுமான இந்த வேலையை செய்திருக்கிறாய். உனது தந்தையும்* தாயும் இவ்விதமானவர்களாக இருக்கவில்லையே? ஆனால் இறைவன் இந்தக்குற்றச்சாட்டுகளிலிருந்து தனது அடியானை விடுவிப்பான். மேலும் நாம் அவரை மக்களுக்கு ஒரு அடையாளமாக ஆக்குவோம். இது ஆரம்பத்திலேயே முடிவு செய்யப்பட்ட ஒரு விஷயமாகும். மேலும் இவ்வாறாகவே நடைபெற வேண்டியதாக இருந்தது. இவர் ஈசப்னு மர்யமாக இருக்கிறார். இதில் மக்கள் சந்தேகம் கொள்கிறார்கள். இக்கூற்றே உண்மையானதாகும்.

---

*இந்த இறை வெளிப்பாட்டின்போது எனக்கு ஞாபகம் வருவதாவது:- பட்டாலாவில் ஃபஸ்ல் ஷா அல்லது மஹர்ஷா என்ற பெயருள்ள ஒரு ஸய்யது இருந்தார். அவர் எனது தந்தையுடன் மிகவும் அன்புள்ளவராகவும் பற்றுள்ளவராகவும் இருந்தார். நான் வாக்களிக்கப் பட்ட மஸீஹாக வாதம் புரிவதாக எவரோ அவரிடம் கூறியதும் அவர் மிகவும் அழுதார். இவரின் தந்தை மிகவும் நல்ல மனிதராக இருந்தார். அதாவது இவர் யாருக்கு பிறந்திருக்கிறார். இவருடைய தகப்பனார் நல்ல பண்புள்ளவராகவும், எதனையும் இட்டுக் கட்டிக் கூறும் வேலை களிலிருந்து விலகியவராகவும், நேர்மையானவராகவும், தூய்மையான உள்ளம் கொண்டவராகவும் இருந்தார் என்று கூறினார். இவ்வாறு பெரும்பாலார் நீர் இவ்விதமாக ஒரு வாதத்தை புரிந்ததன் மூலம் உம் குடும்பத்திற்கு மிகப்பெரும் அவப்பெயரை உண்டாக்கி விட்டீர் என்று கூறினர்.





இவை எல்லாம் பராஹீனே அஹ்மதிய்யாவின் சொற்றொடர்களாகும். மேலும் இந்த வெளிப்பாடு உண்மையில் ஹஸ்ரத் ஈசாவைப் பற்றியும் அவரது தாயாரைப் பற்றியும் வந்துள்ள குர்ஆனின் வசனங்களாகும். எந்த ஈசாவைப் பற்றி முறைகேடான பிறப்பின் மூலம் பிறந்த மனிதன் என்று மக்கள் தீர்மானித்திருக்கின்றார்களோ அவரைப் பற்றியே இந்த வசனங்களில் நாம் அவரை நமது அடையாளமாக ஆக்குவோம் என அல்லாஹ் கூறுகிறான். இவரே எதிர்ப்பார்க்கப்பட்ட ஈசாவாக இருக்கிறார். இறைவெளிப்பாட்டின் வசனங்களில் மர்யம் என்றும் ஈசா என்றும் வந்திருப்பதன் கருத்து நானாகவே இருக்கிறேன். நாம் அவரை ஓர் அடையாளமாக ஆக்குவோம் என்று என்னைப் பற்றியே கூறப்பட்டிருக்கிறது. மேலும் இவர் வர இருந்த அதே ஈசாப்னு மர்யமாக இருக்கிறார். இவர் மீது மக்கள் சந்தேகம் கொள்கிறார்கள். வரவேண்டியவர் இவராகவே இருக்கிறார். இதுவே உண்மையானதாகும் என்றும் கூறப்பட்டுள்ளது. புரியாததனாலே சந்தேகம் ஏற்பட்டுள்ளது. எவர்கள் இறைவனது இரகசியங்களை புரிவதில்லையோ அவர்கள் வெளித்தோற்றத்தைப் பார்க்கிறார்கள். அவர்களது பார்வை உண்மையின் பக்கம் செல்வதே இல்லை.

அதிகாரம் ஃபாத்திஹாவின் மகத்தான நோக்கங்களில் ‘இஹ்தினஸ்ஸிராத்தல் முஸ்தகீம் ஸிராத்தல்லதீன அன்அம்த அலைஹிம்’ என்னும் இந்த துஆவும் ஒன்றாகும் என்பதையும் நினைவில் கொள்ள வேண்டும். பைபிளின் புதிய ஏற்பாட்டின் பிரார்த்தனையில் அப்பம் கேட்கப்பட்டதுபோல் இந்த துஆவில் சென்று நபிமார்களுக்கும், ரசூல்களுக்கும் அருளப்பட்ட அனைத்து அருட்கொடைகளும் இறைவனிடம் கேட்கப்பட்டிருக்கின்றன.

இந்த ஒப்பீடு கவனிக்கத்தக்கதாகும். எவ்வாறு ஹஸ்ரத் மஸீஹ் உடைய பிரார்த்தனை அங்கீகரிக்கப்பட்டு கிறிஸ்தவர்களுக்கு அப்பத்திற்குரிய சாதனங்கள் பெருமளவில் கிடைத்தனவோ அவ்வாறே குர்ஆனிலுள்ள இப்பிரார்த்தனை ஹஸ்ரத் ரஸூல் (ஸல்) அவர்கள் மூலமாக அங்கீகரிக்கப்பட்டு, நற்செயல்கள் செய்பவர்களும், உத்தமமானவர்களுமான முஸ்லிம்கள் குறிப்பாக அவர்களில் முழுமையான நபர் இஸ்ரவேலரின் சந்ததிகளில் தோன்றிய நபிமார்களின் வாரிசாக ஆக்கப்பட்டுள்ளார்.

வாக்களிக்கப்பட்ட மஸீஹ், இந்தச் சமுதாயத்திலிருந்து

தோன்றிருப்பதும் உண்மையில் இதே பிரார்த்தனை அங்கீகரிக்கப்பட்டதன் விளைவேயாகும். ஏனெனில் பெரும்பாலான நல்லடியார்கள் மறைவான நிலையில் இஸ்ரவேலரின் நபிமார்களது ஒப்புவமையில் பங்கு கொண்டவர்களாக இருந்தபோதிலும் இந்தச் சமுதாயத்தில் தோன்றக்கூடிய வாக்களிக்கப்பட்ட மஸீஹ், முற்றிலும் இறைவனது கட்டளை மற்றும் அவனது அனுமதியின்படி இஸ்ரவேலரின் மஸீஹுக்கு ஒப்பாக நிறுத்தப்பட்டுள்ளார். ஏனெனில் இது மூஸாவின் சமுதாயத்திற்கும், முஹம்மதிய சமுதாயத்திற்கும் இடையேயுள்ள ஒப்புவமை அறியப்படுவதற்காகவேயாகும். இந்த நோக்கத்திற்காகவே இந்த மஸீஹ் எல்லா வகையிலும் இப்னு மர்யமோடு ஒப்பிட்டுக் கூறப்பட்டுள்ளார். எதுவரையெனில், இஸ்ரவேல் சந்ததிகளில் தோன்றிய இப்னு மர்யமுக்கு வந்த சோதனை களைப் போலவே இந்த இப்னு மர்யமுக்கும் சோதனைகள் வந்தன.

முதலாவதாக ஈசப்னுமர்யம் இறைவனது ஊதுதலால் படைக்கப்பட்டது போலவே இந்த மஸீஹும் அதிகாரம் தஹ்ரீமின் வார்த்தைப்பாட்டிற்கு ஏற்ப இறைவனது ஊதுதலால் மர்யமிலிருந்து படைக்கப்பட்டுள்ளார். மேலும் ஈசப்னு மர்யமின் பிறப்பின் மீது அதிகம் கூக்குரல் எழுந்ததைப் போலவே என் மீதும் பெரும் கூக்குரல் எழுந்தது. குருடர்களான பகைவர்கள் மர்யமை 'லகத் ஜிஃதி ஷைஅன் ஃபரிய்யா' (திருக்குர்ஆன் 19:28) என்று கூறியது போலவே இவ்விடத்திலும் கூறப்பட்டது. மேலும் பெரும் குழப்பம் விளைவிக்கப்பட்டது. எவ்வாறு இஸ்ரவேல் மர்யத்திற்கு பிரசவம் நடந்தபோது இறைவன் பகைவர்களுக்கு ஈசாவைப் பற்றி 'வலினஜ்அலஹூ ஆயத்தல் லின்னாஸி வரஹ்மதம் மின்னா வகான அமரம் மக்ழிய்யா' (திருக்குர்ஆன் 19:22) என்ற மறுமொழியை அளித்தானோ அவ்வாறே என்னைப் பற்றியும், எனது உவமையான ஆன்மீக பிரசவத்தின் மீதும் அதே மறுமொழியையே விரோதிகளுக்கு பராஹீனே அஹ்மதிய்யாவில் அளித்துள்ளான். மேலும் அவன் கூறியதாவது, நீங்கள் உங்களது வஞ்சகங்களினால் இவரை அழிக்க முடியாது. நான் அவரை மக்களுக்கு அருட்கொடையின் அடையாளமாக ஆக்குவேன். மேலும் இவ்வாறு ஆக்குவது ஆரம்பத்திலேயே முடிவு செய்யப்பட்டதாகும். ஒரு துஷ்டனான யூதப்பண்டிதன் ஹஸ்ரத் ஈசா (அலை) அவர்களுக்கு விரோதமாக உருவாக்கிய கோரிக்கையின் மீது யூத மார்க்க அறிஞர்கள் அவரை நிராகரிக்கப்பாளர் என அறிவித்துத் தீர்ப்பு வழங்கினர். இவர்களில்





பைத்துல் முகத்தஸிலுள்ள நூற்றுக்கணக்கான அஹ்லே ஹதீதுகளின் மார்க்க அறிஞர்கள் பலரும் இடம்பெற்று இருந்தனர். அவர்களும் ஈசா (அலை) நிராகரிப்பாளர் என்ற தீர்ப்புக்கு ஆதரவு அளித்தனர். இதே சம்பவம் என்னோடும் நிகழ்ந்தது.

ஹஸ்ரத் ஈசா மீது நிராகரிப்பாளன் என்ற குஃப்ர் பத்வா அளிக்கப்பட்டபின் அவர்கள் மிகவும் துன்புறுத்தப்பட்டார்கள்; பழித்துரைக்கப்பட்டார்கள். அவர்களைப் பழித்து நூல்கள் எழுதப்பட்டன. இதே நிலை இங்கு எனக்கும் உண்டானது.*

1800 ஆண்டுகளுக்குப் பின் அதே ஈசா மீண்டும் பிறந்துள்ளார். அதே யூதர்கள் மீண்டும் தோன்றியுள்ளனர். அந்தோ! "கய்ரில் மஃலூபி அலைஹிம்" என்ற முன்னறிவிப்பிற்கு இறைவன் முன்பே அறிவித்த அதே பொருளாகும். ஆனால் இவர்கள் அந்த யூதர்களைப் போல் இறைவனின் கோபத்திற்கு இலக்காகாதவரை பொறுமையாக இருக்கவில்லை. (அதாவது இறைவனின் கோபத்திற்கு இலக்காகி யூதர்களைப் போல் ஆகிவிட்டனர்)

---

*ஹஸ்ரத் ஈஸா (அலை) காலத்தில் யூதர்களில் பல பிரிவினர் இருந்தபோதிலும் அவர்களுள் உண்மைவாதிகளாக நம்பப்பட்டவர்கள் இருபிரிவினர்களாவர். இவர்களில் முதலாவது பிரிவினர் தவ்ராத் என்னும் வேதத்திற்குப் கட்டுப்பட்டவர்களாவர். இவர்கள் கவனமாய் ஆராய்ந்து அதிலிருந்து மார்க்கப் பிரச்சனைகளை நிவர்த்தி செய்து வந்தார்கள். இரண்டாவது பிரிவினர் ஹதீதுகளை கடைபிடிக்கக் கூடியவர்களாகிய அஹ்லே ஹதீஸ் ஆவர். இவர்கள் தவ்ராத் மீது ஹதீஸை தீர்ப்பு வழங்கக்கூடியதாக நம்பிவந்தனர். அந்த அஹ்லே ஹதீஸ் இஸ்ரவேலரின் நகரங்களில் பெருமளவில் பரவி விட்டனர். இவர்கள் பெரும்பாலும் தவ்ராத்திற்கு மாறான மற்றும் விரோதமான ஹதீஸுகளின்படி செயல்பட்டு வந்தனர். சில மார்க்கச் சட்டங்களாகிய வணக்கம், பொதுவான மார்க்க விஷயங்கள், செயல்களுக்கு நியாயம் வழங்கும் சட்டங்கள் இவற்றை தவ்ராத்திலிருந்து பெற முடியாது என்பதும், இவற்றை ஹதீதுகளிலிருந்தே அறியமுடியும் என்பதுமே இவர்களது வாதமாகும். இவர்களின் ஹதீது நூலின் பெயர் "தால்மூத்" ஆகும். இதில் ஒவ்வொரு நபியின் காலத்தின் ஹதீதுகளும் இடம்பெற்று இருந்தன. ஒரு காலம் வரை இந்த ஹதீதுகள் வாய்மொழியைக் கொண்டே ஞாபகம் செய்யப்பட்டு வந்தன. பின்னர் அவை எழுத்து வடிவில் பதிவு செய்யப்பட்டு வந்தன. இதனால் இவற்றில் சில இட்டுகட்டப்பட்ட ஹதீதுகளின் பகுதியும் கலந்துவிட்டன. அச்சமயத்தில்

இறைவன் இந்த ஒப்புவமை என்னும் கல்லை தனது கரங்களால் நாட்டியுள்ளான். அதாவது மஸீஹ் இப்னு மர்யம் பதினான்காவது நூற்றாண்டின் ஆரம்பத்தில் தோன்றியது போன்றே என்னையும் சரியாக பதினான்காவது நூற்றாண்டின் ஆரம்பத்தில் இஸ்லாத்தின் மஸீஹாக இறைவன் அனுப்பியுள்ளான். மேலும் எனக்காக தனது வல்லமையான அடையாளத்தை வெளிப்படுத்திக் கொண்டிருக்கிறான். வானத்தின் கீழ் எந்த ஒரு பகைவனாலும் அவர் முஸ்லிமாக இருந்தாலும், யூத கிறிஸ்தவராக இருந்தாலும் அல்லது வேறு எவராக இருந்தாலும் அவரால் அவற்றை எதிர்த்து நிற்கும் சக்தி கிடையாது. பலவீனமானவனும், இழிந்தவனுமான மனிதனால் இறைவனை எவ்வாறு எதிர்த்து நிற்க முடியும்? இது இறைவன் புறமிருந்து வந்த ஒரு அடிக்கல் ஆகும். எவன் இதனை உடைக்க நாடுகின்றானோ, அவன் இதனை ஒருபோதும் உடைக்க முடியாது. ஆனால் இந்தக் கல் அவன் மீது விழும்போது அவனை அது துண்டு துண்டாக்கிவிடும். ஏனெனில் இக்கல் இறைவனுடையதாகும். கையும் இறைவனுடையதாகும்.

எனது எதிரிகள் வேறு ஒரு கல்லை உருவாக்கி அதற்கு எதிராக வைத்தனர். அதாவது அக்காலத்தில் அந்த யூதர்கள் செய்தது போன்ற

*யூதர்கள் எழுபத்திரண்டு பிரிவினர்களாக பிரிந்துவிட்டதாலும், ஒவ்வொரு பிரிவினரும் தமக்காக வெவ்வேறு ஹதீதுகளை வைத்துக்கொண்டதாலும், ஹதீதுகளின் விரிவுரையாளர்களும் தவ்ராத் மீது கவனம் செலுத்துவதை கைவிட்டதாலும் பெரும்பாலார் ஹதீதுகளின் மீதே செயல்பட்டு வந்தனர். தவ்ராத்தானது கைவிட்டதைப் போலவும், துண்டிக்கப்பட்டதை போலவும் ஆகிவிட்டது. ஹதீதுக்கு ஏற்ப வந்தால் ஒப்புக்கொள்வார்கள். இல்லாவிடில் அதனைத் தள்ளி விடுவார்கள். அந்தக் காலத்தில்தான் ஈசா (அலை) தோன்றினார்கள். தவ்ராத்தைவிட ஹதீதுக்கு கண்ணியம் அளித்து வந்த ஹதீதைப் பின்பற்றும் மக்களுக்கே ஈசா (அலை) அவர்கள் குறிப்பாக போதிக்க வேண்டியதாயிற்று. யூதர்கள் பல பிரிவினர்களாக பிரிந்து இறைவனது வேதத்தை விட்டு விட்டு இதற்கு மாறாக ஹதீதுகள் மீது செயல்பட்டுவரும் காலத்தில் நியாயம் வழங்கும் ஒரு நீதிபதி அவர்களுக்கு கொடுக்கப்படும் என்றும், அவரே மஸீஹ் என்று அழைக்கப்படுவார் என்றும் அவர்கள் அவரை ஏற்றுக்கொள்ள மாட்டார்கள் என்றும், இதனால் பெரும் ஆக்கினை அவர்கள் மீது உண்டாகும் என்றும் நபிமார்களின் ஏடுகளில் முன்பே அறிவிக்கப்பட்டு இருந்தது. அந்த ஆக்கினையே பிளேக்காகும். நவூது பில்லாஹ் (நாங்கள் இறைவனிடம் அடைக்கலம் தேடுகிறோம்).*





வேலையை எனக்கு எதிராக இவர்களும் செய்தனர். என்னை அழிப்பதற்காக என்மீது ஒரு கொலை வழக்கும் உருவாக்கப்பட்டது. இதைப்பற்றி முன்பே எனது இறைவன் எனக்கு அறிவித்திருந்தான். என் மீது தொடரப்பட்ட அவ்வழக்கானது ஹஸ்ரத் ஈசப்னு மர்யமுக்கு விரோதமாய் உருவாக்கப்பட்ட வழக்கைவிட மிகவும் கொடூரமான தாகும். ஏனெனில் ஹஸ்ரத் ஈசா (அலை) அவர்களுக்கு எதிராக தொடுக்கப்பட்ட வழக்கானது மார்க்க விரோதத்தின் அடிப்படையில் மட்டும் உருவாக்கப்பட்டதாகும். அது நீதிபதியிடத்தில் ஓர் அற்பமான விஷயமாக இருந்தது. இன்னும் சொல்லப்போனால், அது நீதிபதிக்கு ஒரு பிரச்சனையேயல்ல. ஆனால் என் மீது தொடரப்பட்ட வழக்கிலோ நான் கொலை முயற்சி செய்ததாக குற்றம் சாட்டப்பட்டிருந்தேன். மேலும் மஸீஹ் உடைய வழக்கில் யூத மார்க்க அறிஞர்கள் சாட்சியம் கூறியதுபோல் இவ்வழக்கிலும் மௌலவிமார்கள் என்னும் மார்க்க அறிஞர்களிலிருந்தும் யாராவது சாட்சியம் கூறுவது அவசியமாக இருந்ததால் மௌலவி முஹம்மது ஹுஸைன் பட்டாலவியை இவ்வேலைக்காக இறைவன் தேர்ந்தெடுத்தான். மஸீஹுக்கு தூக்குத் தண்டனை விதிக்கும் பொருட்டு அவருக்கு விரோதமாய் சாட்சியம் கூற தலைமை புரோகிதன் நீதிமன்றத்திற்கு வந்தது போல் முஹம்மது ஹுஸைன் பட்டாலவியும் நீண்ட அங்கி அணிந்து கொண்டு எனக்கு விரோதமாய் சாட்சியம் அளிக்க நீதிமன்றத்திக்கு வந்திருந்தார்.

ஆனால் இதில் காணப்படும் வேறுபாடு என்னவெனில் யூதர்களின் கண்ணியமானவர்களுக்கு ரோம அரசில் நீதிமன்றத்தில் அமர்வதற்கான இருக்கை அளிக்கப்பட்டு வந்ததால் தலைமை புரோகிதனுக்கு பிலாத்துவின் நீதிமன்றத்தில் அமர்வதற்கு இருக்கை கிடைத்தது. மேலும் அவர்களில் சிலர் நடுவராக (கவுரவ நீதிபதியாக) இருந்த காரணத்தால் தலைமை புரோகிதனும் நீதிமன்றத்தின் விதிகளுக்குகேற்ப உட்கார இருக்கை பெற்றிருந்தான். மஸீஹ் இப்னு மர்யம் ஒரு குற்றவாளியை போல் நீதிபதிக்கு முன் நின்று கொண்டிருந்தார். ஆனால் எனது வழக்கில் அதற்கு மாறாக நடந்தது.

அதாவது நீதிபதி பிலாத்துவின் நிலையில் நீதியின் நாற்காலியில் அப்போது அமர்ந்திருந்த நீதிபதி கேப்டன் டக்லஸ் என் விரோதிகளின் விருப்பத்திற்கு மாறாக நீதிமன்றத்தில் நான் அமர்வதற்கு இருக்கை அளித்தார். இந்த பிலாத்து என்பவர் மஸீஹ் இப்னு மர்யமின் பிலாத்துவை விட மிகவும் நல்ல மனிதராக நடந்து கொண்டுள்ளார்.

நீதிமன்ற நடவடிக்கைகளில் அவர் மிகவும் தைரியத்துடனும், உறுதியுடனும் நீதிமன்றத்திற்கு கட்டுப்பட்டவராக இருந்தார். உயர் இடங்களிலிருந்து வரும் பரிந்துரைகளை அவர் பொருட்படுத்தவேயில்லை. இனம், மதம் மீதுள்ள எண்ணங்கள் எதுவும் அவரிடம் எவ்வித மாற்றத்தையும் சிறிதளவும் உண்டு பண்ணவில்லை. அவர் நீதியை முழுமையாக கடைபிடித்ததன் மூலம் சிறப்பான முன்மாதிரிகையை எடுத்துக்காட்டினார். அவர் சமுதாயத்திற்குப் பெருமைக்குரியவராகவும், நீதிபதிகளுக்கு முன்மாதிரியாகவும் திகழ்ந்தாரென்று கருதப்படுவாராயின், அது ஒரு போதும் தவறாகாது. நீதியுடன் நடப்பது என்பது சிக்கலான ஒரு விஷயமாகும். எதுவரை ஒருவர் எல்லா தொடர்புகளிலிருந்தும் முற்றிலும் வேறுபட்ட நிலையில் நீதிமன்றத்தின் இருக்கையில் அமர மாட்டாரோ, அதுவரை அவரால் இக்கடைமைகளை அருமையான முறையில் நிறைவேற்ற முடியாது. ஆயினும் இந்த பிலாத்து என்பவர் இக்கடமைகளை முழுமையாக நிறைவேற்றினார் என்று நாங்கள் உண்மையாகவே சாட்சியம் பகர்கிறோம். முதலாவது பிலாத்து ரோமராக இருந்தபோதிலும் இக்கடமையை அவரால் நல்லவிதமாக நிறைவேற்ற முடியவில்லை. அவருடைய அச்ச உணர்வானது மஸீஹை பெரும் பெரும் இன்னல்களுக்கு இலக்காக்கியது.

இந்த வேறுபாடானது நமது ஜமாஅத்தில் எப்பொழுதும் நினைவு கூரத்தக்க ஒன்றாயிருக்கிறது. எதுவரை இவ்வுலகம் இருந்து வருமோ, எந்தெந்த விதமாக இந்த ஜமாஅத் இலட்சக்கணக்கிலும் கோடிக்கணக்கிலும் பல்கிப் பெருகிவிடுமோ அந்தந்த விதமாக இந்த நல்லெண்ணம் கொண்ட நீதிபதியைப் பற்றி புகழுடன் நினைவுகூர்வது இவ்வுலகில் என்றென்றும் நிலைத்து நின்றுகொண்டேயிருக்கும். இந்த வேலைக்காக அவரையே இறைவன் தேர்ந்தெடுத்திருப்பது அவரது நற்பாக்கியமாகும்.

இரு பிரிவினர் அவரிடம் வருகிறார்கள். அவர்களில் ஒருவர் அவரது மதத்தைச் சார்ந்த பாதிரியாராக இருக்கிறார். மற்றவர் அவரது மதத்திற்கு வேறுபட்டவராக இருக்கிறார். இந்நிலையில் இவர் (மிர்ஸா சாஹிப்) உங்கள் மார்க்கத்திற்கு கடும் எதிரியாவார் என்று அவரிடம் வாக்குமூலம் கொடுக்கும் நிலையானது ஒரு நீதிபதிக்கு எவ்வளவு சோதனைக்குரிய இடமாகும். ஆயினும் வீரரான அந்த பிலாத்து இச்சோதனையை மிக உறுதியுடன் தாங்கிக் கொண்டார். அவர்களின்





குறை மதியின் காரணமாக, கிறித்தவ மார்க்கத்தைப் பற்றி கடினமான வார்த்தைகள் என கருதப்பட்ட இடங்களையும் எனது நூல்களிலிருந்து அவருக்குக் காட்டப்பட்டது. மேலும் விரோதமான திட்டம் ஒன்றும் வகுக்கப்பட்டது. ஆயினும் அந்நீதிபதியின் முகத்தில் சிறிதளவும் மாற்றம் உண்டாகவில்லை. ஏனெனில் அவரது தெளிந்த மனசாட்சியின் காரணத்தால் உண்மையை அவர் புரிந்து கொண்டார். மேலும் அவர் வழக்கின் உண்மையான அடிப்படையை உண்மையான உள்ளத்துடன் ஆராய்ந்து வந்ததனால் இறைவன் அவருக்கு உதவி புரிந்தான். மேலும் அவரது உள்ளத்தில் சத்தியத்தைப் பற்றிய வெளிப்பாட்டையும் இறக்கினான். இதனால் உண்மையாக அவரிடம் சத்தியம் வெளிப்படுத்தப்பட்டது. மேலும் நீதியை நிலைநாட்டும் வழி அவருக்குத் தென்பட்டதைக் குறித்து அவர் மிகவும் மகிழ்ச்சி அடைந்தார். அதனால் அவர் நீதியை முன்வைத்து வாதிக்கு எதிராக எனக்கு அமர்வதற்கு இருக்கை அளித்தார்.

மௌலவி முஹம்மது ஹுஸைன் பட்டாலவி தலைமை புரோகிதனைப் போல் எனக்கு விரோதமாகச் சாட்சியம் அளிக்க வந்தபோது நான் இருக்கையில் அமர்ந்திருப்பதைக் கண்ட அவர், எனது எந்த இழிவைக் காண்பதற்கு அவரது கண்கள் ஆசை கொண்டவையாக இருந்தனவோ அந்த இழிவை அவரால் காணமுடியவில்லை. அப்போது சமஅந்தஸ்தாவது தமக்குக் கிடைத்தால் அதுவே போதுமானது என நினைத்து அவரும் அந்த பிலாத்திடம் அமர்வதற்கு இருக்கை ஒன்றை விரும்பிக் கேட்டார். ஆனால், அந்த பிலாத்து அவரைக் கண்டித்ததுமட்டுமல்லாமல் உமக்கும் உமது தந்தைக்கும் ஒருபோதும் இருக்கை கிடைத்ததில்லை. மேலும் எங்களது அலுவலகத்தில் உமக்கு இருக்கைக்காக எவ்வித கட்டளையும் இல்லை என உரத்த குரலில் கூறினார்.

இப்போது இந்த வேறுபாடும் கவனத்திற்குரியதாயிருக்கிறது. அதாவது முதலாவது பிலாத்து யூதர்களுக்கு அஞ்சி அவர்களது கண்ணியமிக்க சில சாட்சிகளுக்கு அமர்வதற்கான இருக்கை அளித்தார். ஆனால் குற்றவாளிகளைப்போல் கொண்டு வரப்பட்ட ஹஸ்ரத் மஸீஹை நிற்க வைத்தார். இருந்தபோதிலும் அவர் இதயப்பூர்வமாக அவரது நன்மையை விரும்பக்கூடியவராக இருந்தார். அதுமட்டும் அல்லாமல் அவர் அவரது சீடரைப்போல் இருந்து வந்தார். அவரது மனைவியாரும், மஸீஹின் சிறப்புமிக்க சீடராகவும் இருந்தார். மேலும்

அவர் இறைநேசர் என்று அழைக்கப்பட்டு வந்தார். ஆயினும் அவரது பீதியானது அநீதியாக நிரபராதிபதியான மஸீஹை யூதர்களிடம் ஒப்படைக்கும்படியான தவறான கட்டளையை பிறப்பிக்கச் செய்தது. என்னைப்போன்று அவர்மீது கொலைக் குற்றம் சுமத்தப்படவில்லை. மாறாக சிறிய நிலையில் மார்க்க வேறுபாடு மட்டுமே காரணமாக இருந்தது. ஆயினும் அந்த ரோமரான பிலாத்து உறுதியான மனம் கொண்டவராக இருக்கவில்லை. அரசரிடம் அவரைப்பற்றி முறையீடு செய்யப்படும் என்பதைக் கேள்வியுற்றதுமே அவர் பீதி அடைந்து விட்டார்.

மேலும் முதலாவது பிலாத்து இந்த இரண்டாவது பிலாத்து இருவரிடமும் காணப்படும் வேறு ஒரு ஒப்புமையும் ஞாபகம் வைக்க தகுதியுள்ளதாகும். அதாவது, மஸீஹ் இப்னுமர்யம் நிதிமன்றத்திற்கு கொண்டு செல்லப்பட்டபோது முதல் பிலாத்து யூதர்களிடம் நான் இந்த மனிதரிடம் எவ்வித குற்றமும் காணவில்லையே எனக் கூறினார். இவ்வாறே இறுதி மஸீஹ் இறுதி பிலாத்துக்கு முன்சென்ற போது என்மீது கொலை குற்றம் சுமத்தப்பட்டிருப்பதால் இதற்கு மறுமொழி அளிக்கச் சில நாட்கள் கால அவகாசம் அளிக்கப்பட வேண்டும் என்று இந்த (வாக்களிக்கப்பட்ட) மஸீஹ் கூறியதும் நான் உங்கள் மீது எவ்வித குற்றமும் சுமத்தவில்லையே என்று விடை அளித்தார்.

இந்த இரண்டு பிலாத்துக்களின் இவ்விரண்டு கூற்றுகளிலும் ஒப்புமை காணப்படுகிறது. இதில் வேறுபாடு இருக்குமானால் இந்த அளவில்தான் உள்ளது: அதாவது, முதலாவது பிலாத்து தனது வார்த்தையில் நிலைநிற்க முடியவில்லை. உம்மைக் குறித்து அரசரிடம் முறையீடு செய்யப்படும் என்று அவரிடம் கூறப்பட்டதும் அவர் அச்சம் அடைந்து விட்டார். அவர் தெரிந்து கொண்டே ஹஸ்ரத் மஸீஹைக் கொலையாளிகளான யூதர்களிடம் ஒப்படைத்தார். பிலாத்தும் அவரது மனைவியும் அவர்மீது நல்லவிசுவாசம் கொண்டவர்களாக இருந்தமையால் அவரை அவர்களிடம் ஒப்படைத்ததில் அவ்விருவருக்கும் கவலை இருந்து வந்தது. ஆயினும் யூதர்களின் பெருங்கூக்குரலைக் கண்டு கோழைத்தனம் அவர் மீது வெற்றி கொண்டு விட்டது.

ஆயினும்! சந்தேகமின்றி மஸீஹின் உயிர் சிலுவையில் கொல்லப்படுவதிலிருந்து இரட்சிக்கப்பட வேண்டும் என்பதற்காக அவர் மறைமுகமாக மிகவும் முயற்சித்தார். இம்முயற்சியில் அவர்





வெற்றியும் பெற்றார். ஆயினும் மஸீஹ் சிலுவையில் ஏற்றப்பட்ட பிறகு மிகக்கொடிய வேதனையின் காரணத்தால் மரணத்தைப் போன்ற கடுமையான மயக்க நிலை அவருக்கு உண்டானது. எவ்வாறாயினும் ரோமரான பிலாத்து என்பவர் எடுத்த முயற்சியால் மஸீஹ் இப்து மர்யமின் உயிர் காப்பாற்றப்பட்டது. உயிர் தப்புவதற்காக மஸீஹ் செய்த பிரார்த்தனையும் முன்பே அங்கீகரிக்கப்பட்டிருந்தது. (எபிரேயர் அத்தியாயம் 5 வசனம் 7 காண்க.)*

இதன் பின்னர் மஸீஹ் அந்நாட்டிலிருந்து இரகசியமாக காஷ்மீர் நோக்கி வந்து அங்கேயே மரணமும் அடைந்தார். அவரது கல்லறை காஷ்மீர் நகரில் கான்யார் வீதியில் இருப்பதை நீங்கள் கேட்டிருக்கிறீர்கள். இவையெல்லாம் பிலாத்தின் முயற்சியால் உண்டான விளைவுகளேயாகும். இருந்தபோதிலும் முதலாவது பிலாத்தின் நடவடிக்கை கோழைத்தனம் மிக்கதாயிருந்தது.

நான் இந்த மனிதனிடம் எவ்வித பழிபாவத்தையும் காணவில்லையே என்று அவர் கூறிய தமது கூற்றின்படி அநுகூலம் செய்து அவர் விடுதலையும் செய்திருந்தால் இது அவருக்கு சிரமத்திற்குரிய விஷயமாயிருந்திருக்காது. மேலும் அவரை விடுதலை செய்வதற்கான வல்லமை படைத்தவராகவும் அவர் இருந்தார். ஆனால் அரசரிடம் அவரைப்பற்றி முறையீடு செய்யப்படும் என்பதைக் கேட்டதும் அவர் மிகவும் பீதி அடைந்துவிட்டார்.

இதற்கு மாறாக இந்நாட்டிலும் இராணியின் ஆட்சி இருந்தும் இந்த இறுதி பிலாத்து என்பவர் பாதிரிகளின் கூக்குரல்களுக்குச் சற்றும் அச்சம்

*யூனுஸின் அடையாளத்தைத் தவிர வேறு அடையாளம் உங்களுக்குக் காட்டப்படமாட்டாது என மஸீஹ் முன்னறிவிப்பாக தாமும் கூறியிருந்தார். அக்கூற்றின் மூலம் குறிப்பாகக்கூறியது என்னவென்றால் எவ்வாறு யூனுஸ் 'உயிருடன் மீனுடைய வயிற்றில் நுழைந்து உயிருடனேயே வெளிவந்தாரோ அவ்வாறே நானும் உயிருடன் கபரில் நுழைந்து உயிருடனேயே வெளிவருவேன் என்பதாகும். ஆகவே மஸீஹ் சிலுவையிலிருந்து கீழே உயிருடன் இறக்கப்படாமலும் உயிருடன் கல்லறையில் நுழையாமலும் இருந்திருந்தால் இந்த அடையாளம் எவ்வாறு நிறைவேறி இருக்க முடியும்? மேலும் வேறு எந்த அடையாளமும் காட்டப்படமாட்டாது என்று ஹஸ்ரத் மஸீஹ் கூறியுள்ளார். இக்கூற்றின் மூலம் மஸீஹ் வானத்திற்குப்போன ஒரு அடையாளத்தையும் அவர் காட்டியுள்ளார் என்று கூறக்கூடியவர்களது கூற்றையும் அவர் நிராகரித்துள்ளார் - நூலாசிரியர்

அடையவில்லை. இந்த இராணி அம்மையார் அந்த அரசரைவிட எவ்வளவோ மேலானவராக இருந்ததால் இந்த நீதிபதி மீது எவ்வித நிர்பந்தத்தையும் புகுத்தவும், நீதியை கைவிடச் செய்யவும் இவரைப் பயன்படுத்தி பயமுறுத்தச் செய்யவும் எவராலும் முடிந்ததில்லை. ஒவ்வொரு விதத்திலும் முதல் மஸீஹை விட இறுதி மஸீஹுக்கு விரோதமாய் பெருமளவில் கூக்குரல்கள் எழுந்ததுடன், சதித்திட்டமும் தீட்டப்பட்டது. மேலும் எனக்கு விரோதமாக எனது விரோதிகளும் எல்லாச் சமுதாயங்களின் தலைவர்களும் ஒன்று சேர்ந்தனர். ஆயினும் இறுதி பிலாத்து உண்மையையே நேசித்தார். நான் உம்மீது கொலைக் குற்றம் சாட்டவில்லையே என்று என்னை நோக்கிக் கூறிய அவர் அக்கூற்றை நிறைவேற்றிக் காட்டினார். அவர் மிக நேர்மையுடனும், வீரத்துடனும் என்னை விடுதலை செய்தார். இதற்கு மாறாக முதலாவது பிலாத்து மஸீஹை காப்பாற்றுவதற்குப் பல சாக்குப்போக்குகளைக் கையாண்டு பார்த்தார். ஆனால் இந்த பிலாத்தோ நீதிமன்றத்திற்கென்று என்ன எதிர்பார்ப்பு இருந்ததோ அதை முழுமை செய்தார். அதில் அவரிடம் எவ்வித கோழைத்தனமும் காணப்படவில்லை. நான் விடுதலை அடைந்த அந்நாளில் முக்திபடையின் திருடன் ஒருவனும் அந்நீதிமன்றத்திற்கு கொண்டுவரப்பட்டான். இது சம்பவிக்க வேண்டிய காரணம், முதல் மஸீஹோடும் ஒரு திருடன் இருந்தான். ஆயினும் இறுதி மஸீஹோடு பிடிபட்ட அத்திருடன் முதல் மஸீஹோடு பிடிபட்ட திருடனைப் போல் சிலுவையில் ஏற்றப்படவுமில்லை. அவனுடைய எலும்புகள் முறிக்கப்பட்டவுமில்லை. மாறாக அவன் மூன்று மாதம் சிறையில் தள்ளப்பட்டான்.

இப்போது நாம் நமது விஷயங்களின் பக்கம் திரும்பியவாறு எழுதுகிறோம். சூரா ஃபாத்திஹாவில் எந்த அளவுக்கு உண்மைகளும் நுட்பங்களும், ஞானங்களும் அடங்கியுள்ளனவென்றால் அவை எல்லாவற்றையும் எழுதுவதென்றால் அதற்கென ஒரு தனி நூலை ஒதுக்கினாலும் அவ்விஷயங்கள் முடிவடையாது. இந்த சூராவில் கற்றுக்கொடுக்கப்பட்டிருக்கும் 'இஹ்திஸ்ஸிராத்தல் முஸ்தகீம்' என்ற இந்த ஒரு ஞானம் மிக்க துஆவை கவனியுங்கள். இந்த துஆவானது அதனுள் முழுமையானான கருத்தைக் கொண்டதாய் இருக்கிறது. மார்க்கம், உலகம் ஆகியவற்றின் அனைத்து குறிக்கோள்களுக்கும் இதுவே ஒரு திறவு கோலாக இருக்கிறது. நமக்கு ஒன்றை அடைவதற்கான நேரான பாதை கிடைக்காதவரை அதன் உண்மை நிலையை அறியவோ அதன் பயன்களிலிருந்து பலன் பெறவோ





முடியாது. உலகில் எந்த அளவில் பல்வேறு கஷ்டங்களும் சிக்கலான பிரச்சனைகளும் காணப்படுகின்றனவோ அவை ஆட்சியியல் அமைச்சரவை சம்பந்தமான பொறுப்புகளாக இருந்தாலும், படைவீரர்கள், போர்களங்கள், கலகங்கள் சம்பந்தமானவையாக இருந்தாலும், புவியியல், வானவியல் பற்றிய நுணுக்கமான விஷயங்களாக இருந்தாலும், நோயைக் கண்டறியக் கூடிய வழிமுறையாக இருந்தாலும், சிகிச்சை சம்பந்தமானதாக இருந்தாலும் வேளாண்மை, வணிகம் ஆகிய அனைத்திலும் இவற்றை எவ்வாறு ஆரம்பிக்க வேண்டும் என்னும் நேரான சீரிய வழி நமக்குக் கிடைக்காவிட்டால் அவ்விஷயங்களில் நாம் வெற்றி பெறுவது கடினமானதும் சாத்தியமில்லாததுமாகும்.

ஒவ்வோர் அறிவாளியும் இக்கட்டான இச்சமயத்தில் மறைந்து கிடக்கும் இக்கஷ்டங்கள் நீங்குவதற்கு ஏதாவதொரு வழி பிறக்க வேண்டுமே என்று இரவும், பகலும் நீண்டநேரம் சிந்தித்து வருவதையே அவனது கடமையாக நினைக்கிறான். ஒவ்வொரு கைத்தொழிலும் புதிதாக உண்டு பண்ணக்கூடிய ஒவ்வொரு காரியமும் தொல்லைகள் நிரம்பிய ஒவ்வொரு பிரச்சினையும், சிக்கலுக்கு இலக்கான ஒவ்வொரு வேலையும் ஆகிய இவை அனைத்தும் ஒழுங்காய் நடைபெறுவதற்கு தக்க வழி பிறந்தாக வேண்டும் என்றே விரும்புகின்றன. ஆகவே உலக மார்க்க நோக்கங்களுக்குத் தேவைப்படும் சரியான துஆ, அவற்றிற்கு தக்க வழி பிறப்பதற்காக வேண்டிச் செய்யப்படும் பிரார்த்தனையேயாகும். ஏதாவதொரு விஷயத்திற்கு நேரான வழியைக் கைக்கொண்டு விட்டால் நிச்சயமாக அவ்விஷயமும் இறைவனது கருணையால் கைகூடிவிடுகிறது. இறைவனது இயற்கை விதியும் அவனது ஞானமும் ஒவ்வொரு குறிக்கோளையும் அடைவதற்கான வழியொன்றையும் அமைத்திருக்கிறது. உதாரணமாக, ஒரு நோயின் உண்மையை அறியவும் அதற்குரிய மருந்தை கண்டுபிடிக்கவும் இந்த வழியால் வெற்றிகிடைக்கும் என்பதாக அவனது உள்ளம் தீர்ப்புக் கூறும் ஒரு வழி அவனுக்கு கிடைக்காவிடில் எந்த நோய்க்கும் சரியான சிகிச்சை அமைய முடியாது. ஒரு ஏற்பாட்டிற்காக ஒரு வழி பிறக்காதவரை எந்த ஒரு ஏற்பாடும் உலகில் நடக்கவே முடியாது. ஆகவே, ஒரு குறிக்கோளுக்காக வழியைத் தேடுவதென்பது அக்குறிக்கோளைத் தேடுபவனின் கடமையாகிவிடுகிறது.

எவ்வாறாக உலகில் கால் ஊன்றுவதற்கும் அதன் வெற்றிக்குரிய சரியான வழிமுறையைக் கையாளவும் முதலாவது ஒருவழி தேவைப்படுகிறதோ, அவ்வாறே இறைவனது நண்பனாகவும், அவனது அன்பிற்கும், பேரருளுக்கும் பாத்திரமானவனாக ஆவதற்காகவும் ஆதியிலிருந்து ஒரு வழி தேவையாக இருந்தது. இதன் காரணத்தாலேயே இந்த அத்தியாயத்திற்குப் பிறகுள்ள 'பக்ரா' என்னும் இரண்டாவது அத்தியாயத்தின் ஆரம்பத்திலேயே 'ஹுதல்லில் முத்தகீன்' என்று இறைவனால் கூறப்பட்டிருக்கிறது. அதாவது, அருட்கொடை அடைவதற்கு நம்மால் விவரிக்கப்படும் வழி இதுவாகும்.* ஆகவே 'இஹ்தினஸ்ஸிராத்தல் முஸ்தக்கீம்' என்னும் துஆ ஒரு பரிபூரணமான துஆ ஆகும். மேலும் இந்தத் துஆவானது மார்க்க, உலக விஷயங்களில் உண்டாகும் கஷ்டங்களின் போது முதலாவதாக மனிதன் எவ்விஷயத்தை தேடுவது அவனது கடமையாக இருக்கிறதோ, அதனை அடைவதற்கு அவன் 'ஸிராத்தல் முஸிதக்கீம்' எனும் நேரான பாதையைத் தேடுவதே அவனது கடமையாகும் என மனிதனது கவனத்தை அதன் பக்கம் திருப்புகிறது. அதாவது, அவன் மிக எளிதாக அதன் நோக்கம் வரை சென்று அடைவதற்காகவும், நம்பிக்கை உறுதியில் அவனது உள்ளம் நிறைவு பெறுவதற்காகவும், மேலும் சந்தேகங்களிலிருந்து அவன் இரட்சிப்பு பெறுவதற்காகவும், தெளிவானதும், நேர்மையானதுமான ஒரு வழியைத் தேடியாக வேண்டும் என்பதேயாகும்.

ஆனால் பைபிளின் புதிய ஏற்பாட்டின் கட்டளைப்படி அப்பத்தைக் கேட்கக்கூடியவன் இறைவனை அடையும் வழியைக் கைக்கொள்ள மாட்டான். அவனது குறிக்கோள் அப்பமேயாகும். அப்பம் அவனுக்குக் கிடைத்துவிட்டால் இறைவன் தேவைப்படுவானேன். இதன் காரணத்தால் கிறிஸ்தவர்கள் 'ஸிராத்தல் முஸ்தக்கீம்' என்னும் நேரான பாதையிலிருந்து விலகிவிட்டனர். மனிதனை இறைவனாக ஆக்கும் வெட்கக்கேடான நம்பிக்கை அவர்களின் கழுத்தில் மாட்டிக் கொண்டது.

மஸீஹ் இப்னு மர்யமை இறைவன் என்று நினைப்பதற்கு

---

**ஃபாத்திஹா அத்தியாயத்தில் நேரான பாதைக்காக வேண்டி துஆ செய்யப்பட்டது. இரண்டாவது அத்தியாயத்தில் இந்த (துஆ) ஏற்றுக்கொள்ளப்பட்டு நேரான பாதை தெரிவிக்கப்பட்டுள்ளது*

*- நூலாசிரியர்*





அவரிடம் மற்றவர்களைவிட அதிகமாக என்ன இருக்கிறது? என்பதனை நம்மால் புரிந்துகொள்ள முடியவில்லை. அற்புதங்களைக் காட்டுவதில் சென்றுபோன பெரும்பாலான நபிமார்களுள் பலர் இவரை விட முன்னிலையில் இடம்பெற்றுள்ளனர். இவர்களில் மூஸா, அல்யஸஃப், எலியா நபி ஆகியோர் அடங்குவர்.

எனது உயிர் எவன் கையில் இருக்கிறதோ அவன் மீது ஆணையாக! எனது காலத்தில் மஸீஹ் இப்னுமர்யம் இருந்திருப்பாரேயானால் என்னால் செய்ய முடிந்த வேலையை அவரால் ஒருபோதும் செய்ய முடியாது. மேலும் என்னிடமிருந்து வெளியாகிக்கொண்டிருக்கும் அவ்வடையாளங்களை அவரால் ஒருபோதும் வெளிப்படுத்தியிருக்கவும் முடியாது.*

இறைவனது கருணையை அவர் தம்மைவிட மிகுதியாக என்னிடமே கண்டிருப்பார். நான் இவ்விதமாக இருக்கையில் எவருடைய தாசனாக ஆக்கப்பட்டுள்ளேனோ அப்பரிசுத்த ரஸூல் (ஸல்) அவர்களின் அந்தஸ்து எப்படிப்பட்டதாகும் என்பதனை இப்போது சிந்தியுங்கள். "தாலிக்க பலுல்லாஹி யுஃதீஹீ மைன்யஷாவு" *(திருக்குர்ஆன் 5:55)* பொருள்: இது இறைவனின் அருட்கொடையாகும்; தான் விரும்பக்கூடியவர்களுக்கு அவன் அதனை அளிக்கிறான்.

---

**இதன் சான்றாக அச்சாகிக் கொண்டிருக்கும் 'நுஸூலேமஸீஹ்' என்னும் நூலை விரைவில் காண்பீர்கள். இதன் பத்து பாகங்கள் அச்சாகி விட்டன. விரைவில் இது வெளிவரும். பீர் மெஹர்அலி கோல்டவியின் நூலாகிய 'தன்பூர் சிஷ்தியாயீ' என்பதற்கு மறுப்பாக எழுதப்பட்டதாகும். இதில் பீர்சாஹிப் இறந்துபோன முஹம்மது ஹஸனின் கட்டுரையை திருடி இருப்பதன் மூலம் வெட்கக்கேடான தவறுகளை செய்துள்ளார் என்பது நிரூபிக்கப்பட்டுள்ளது. இப்போது அவர் அதை அறிந்தால் அவரது வாழ்க்கை கசப்பாகிவிடும். (முஹம்மது ஹஸன் என்ற) அந்தப் பாக்கியம் கெட்டவன் 'இஃஜாஸுல் மஸீஹில்' இடம் பெற்றுள்ள முன்னறிவிப்பின்படி மரணமடைந்தான். இரண்டாவது பாக்கியம் கெட்டவன் உண்மைக்கு மாறான ஒரு நூலை எழுதியதால் "இன்னீமுஹீனுன்மன் அராத இஹானதக்க" (உம்மை அவமானப்படுத்த நினைக்கின்றவர்களை நான் அவமானப்படுத்துவேன்) என்னும் முன்னறிவிப்புக்கு இலக்கானான். அகப் பார்வை கொண்டவர்களே! படிப்பினை பெறுங்கள் - நூலாசிரியர்*

இந்த இடத்தில் எவராலும் பொறாமையையோ, விரோதத்தையோ காட்ட முடியாது. ஏனெனில், இறைவன் எதனை நாடுகிறானோ அதனை அவன் செய்து கொள்கிறான். எவன் அவனது நாட்டத்திற்கு விரோதமாக செயல்படுவானோ அவன் தனது நோக்கங்களில் தோல்வி அடைவது மட்டுமல்லாமல் மரணம் அடைந்து நரகத்தின் வழியை அடைகிறான். பலவீனமான படைப்பை கடவுளாக ஆக்கியவர்கள் அழிந்து போயினர். தேர்ந்தெடுக்கப்பட்ட ஒரு ரசூலை ஒப்புக்கொள்ளாதவர்கள் நாசமாயினர். என்னை கண்டறிந்தவர் பாக்கியசாலியாக இருக்கிறார். நான் இறைவனின் எல்லா வழிகளிலும் இறுதி வழியாக இருக்கிறேன். நான் அவனது எல்லா ஒளிகளிலும் இறுதி ஒளியாக இருக்கிறேன். எவர் என்னோடுள்ள தொடர்பை விட்டு விடுகிறாரோ அவன் பாக்கியம் கெட்டவராய் இருக்கிறார். ஏனெனில் நான் இன்றி அனைத்தும் இருளேயாகும்.

நேர்வழிக்காக வேண்டி முஸ்லிம்களுக்கு அருளப்பட்ட இரண்டாவது வழி சுன்னத் என்னும் எம்பெருமானின் நடைமுறைகள் ஆகும். அதாவது திருக்குர்ஆனின் கட்டளைகளை விவரித்துக்காட்டும் பொருட்டு எம்பெரும்பானார் (ஸல்) அவர்கள் செய்துகாட்டிய செயல்முறைகளாகும். உதாரணமாக ஐந்து வேளைத்தொழுகை களுக்கும் ரக்அத்துகள் எத்தனை என்பதை திருக்குர்ஆனிலிருந்து நம்மால் வெளிப்படையாக அறிந்து கொள்ள முடிவதில்லை. அதாவது, சுபுஹ் (காலை) தொழுகையின் ரக்அத்துகள் எத்தனை, இதர நேரங்களின் தொழுகைகளுக்கு ரக்அத்துகள் எத்தனை என்பதை அறிய முடியாது. ஆனால் சுன்னத் எல்லாவற்றையும் மிகவும் தெளிவுபடுத்திக் காட்டிருக்கிறது. மேலும் சுன்னத் என்னும் எம்பெருமானின் நடைமுறைகள் ஹதீத் என்னும் எம்பெருமானின் திருவாய்மொழி செய்திகள் ஆகிய இவ்விரண்டும் ஒன்றே என்று கருதி எவரும் ஏமாற்றம் அடையவேண்டாம். ஏனெனில் ஹதீதுகள் எம்பெருமானின் மறைவுக்குப் பின்னர் நூறு, நூற்றைம்பது ஆண்டுகள் கழித்தே ஒன்று திரட்டப்பட்டவையாகும். ஆனால் சுன்னத் திருக்குர்ஆனுடன் இணைந்து காணப்பட்டதாகும். திருக்குர்ஆனுக்குப்பின் முஸ்லிம்களுக்கு அருளப்பட்ட பெரும் அருட்கொடை சுன்னத்தே ஆகும். இரண்டு விஷயங்கள் மீது மாத்திரமே இறைவனுக்கும், ரஸூலுக்கும் பொறுப்புகள் இருந்தன. அதாவது, இறைவன் திருக்குர்ஆனை அருளி படைப்பினங்களுக்கு தனது வசனங்கள் மூலமாகத் தனது நாட்டத்தை அறிவித்துக் கொடுத்தான். இதுவே





இறைவனது சட்டத்தின் பொறுப்பாக இருந்தது. மேலும் இறைவனது வசனங்களை செயல்முறைகள் மூலமாக மக்களுக்கு நல்லவிதம் புரிய வைப்பது. எம்பெருமானார் (ஸல்) அவர்களின் கடமையாக இருந்தது. ஆகவே எம்பெருமானார் (ஸல்) அவர்கள் சொல் வடிவிலிருந்த எல்லா இறை வசனங்களையும் தங்களது செயல்முறைகளின் மூலமாக வெளிப்படுத்திக் காட்டினார்கள். மேலும் அவர்கள் தங்களின் சுன்னத்தாகிய செயல்முறைகள் மூலம் சிரமங்கள், சிக்கல்கள் நிரம்பிய பிரச்சனைகளை தக்க வகையில் நிவர்த்தி செய்து தீர்த்து வைத்தார்கள். ஆனால் இப்பிரச்சினைகளை ஹதீதே நிவர்த்தி செய்தது என்று கூறுவதென்பது தவறானதாகும். ஏனெனில் ஹதீதுகள் உருவாவதற்கு முன்பே இஸ்லாம் மார்க்கம் இவ்வுலகில் நிலை நாட்டப்பட்டுவிட்டது.* ஹதீதுகள் ஒன்று திரட்டப்படுவதற்கு முன்பே மக்கள் தொழுது வரவில்லையா? அல்லது ஸக்காத்து கொடுத்து வரவில்லையா? அல்லது ஹஜ் செய்யவில்லையா? விலக்கப் பட்டவை குறித்தும் அனுமதிக்கப் பட்டவை குறித்தும் அவர்கள் அறியவில்லையா?

ஆயினும், நேர்வழி காட்டக் கூடிய மூன்றாவது மார்க்கம் ஹதீதென்னும் எம்பெருமானார் அருளிய திருவாய் மொழிகளாகும். ஏனெனில் இஸ்லாத்தின் பெரும்பாலான வரலாறுகள், ஒழுக்கங்கள், இஸ்லாம் மார்க்கச் சட்டங்கள் ஆகிய அனைத்தையும் ஹதீதுகள் தெளிவான முறையில் விவரிக்கின்றன. மேலும் ஹதீஸின் மிகப் பெரிய பயன் என்னவெனில், அது திருக்குர்ஆனின் ஊழியனாகவும் சுன்னத்தின் சேவகனாகவும் இருப்பதாகும். எவர்களுக்கு திருக்குர்ஆன் ஒழுக்கம் பற்றிய ஞானம் வழங்கப்படவில்லையோ அவர்கள், யூதர்கள் தங்களது ஹதீஸுகளைப்பற்றிக் கூறியது போன்று, இந்த சந்தர்ப்பத்தில் ஹதீஸை திருக்குர்ஆனுக்குத் தீர்ப்பு கூறும் நீதிபதி எனக் கூறுகின்றனர். இதற்கு மாறாக நாம் ஹதீதை குர்ஆனின் ஊழியவனாகவும் சுன்னத்தின் சேவகனாகவும் கருதுகின்றோம். எஜமானரின் மகிமையானது அவருக்கு சேவகர்கள் இருப்பதால் உயர்கிறது என்பது வெளிப்படையாகும்.

* *ஹதீதுகளை கடைபிடித்துத் தொழக் கூடியவர்களாகிய அஹ்லே ஹதீத் என்போர் எம்பெருமானார் (ஸல்) அவர்களின் செயலுக்கும் வசனத்திற்கும் ஹதீத் என்றே பெயர் வைக்கிறார்கள். ஆனால் அவர்களின் தனிப்பட்ட கருத்து எங்களுக்குத் தேவை இல்லை. உண்மையில் சுன்னத் என்பது வேறு. இதனைப் பரவச் செய்வதற்குரிய ஏற்பாடுகளை திரு நபி (ஸல்) அவர்கள் தாமே செய்துள்ளார்கள். ஹதீது என்பது வேறு. இது பின்னரே ஒன்று திரட்டப்பட்டது.*

திருக்குர்ஆன் இறை வசனமாக இருக்கிறது; சுன்னத் திருநபி (ஸல்) அவர்களின் செயல்முறையாக இருக்கிறது; ஹதீத், சுன்னத்துக்குத் துணையாக இருக்கும் சாட்சியாக இருக்கின்றது.

ஆகவே, ஹதீத் திருக்குர்ஆன் மீது தீர்ப்புக் கூறும் நீதிபதி எனக் கூறுவது பெருந் தவறாகும். நவூதுபில்லாஹ் (நாங்கள் இறைவனிடம் பாதுகாப்பு தேடுகிறோம்) குர்ஆன்மீது தீர்ப்பு வழங்கும் உரிமை ஏதாவது ஒன்றிற்கு இருக்குமானால் அது திருக்குர்ஆனேயாகும். அனுமானத்தின் நிலையில் உள்ள ஹதீதானது குர்ஆனுக்கு நீதிபதியாகும் தகுதியினை ஒருபோதும் பெற முடியாது. அது வலுவூட்டக்கூடிய ஒரு சாட்சியின் தன்மையிலேயே இருக்கிறது. அடிப்படையான தத்துவங்களை எல்லாம் குர்ஆனும், சுன்னத்தும் நமக்கு விளக்கிக் காட்டியிருக்கின்றன. ஹதீதானது வலுவூக்கும் ஒரு சாட்சி மட்டுமேயாகும். ஆகவே, ஹதீத் குர்ஆன் மீது எவ்வாறு தீர்ப்புக் கூறும் நீதிபதியாக ஆகமுடியும்? இந்தக் கற்பனையான நீதிபதியின் பெயரும் அடையாளமும் இல்லாத காலத்திலேயே குர்ஆனும், சுன்னத்தும் மக்களுக்கு நேர்வழிக் காட்டிக்கொண்டிருந்தன. ஹதீதைக் குர்ஆனுக்கு நீதிபதி எனக் கூறாதீர்கள். மாறாக ஹதீதானது குர்ஆனையும், சுன்னத்தையும் வலுவூட்டும் சாட்சியாகும் எனக் கூறுங்கள். நிச்சயமாக சுன்னத்தானது குர்ஆனின் விருப்பத்தை வெளிப்படுத்திக் காட்டக்கூடிய ஒன்றாய் இருக்கிறது. சுன்னத் என்பது திருநபி (ஸல்) அவர்கள் தமது செயல்முறைப்படி தமது தோழர்களை நடக்கச் செய்த நடைமுறையாகும். எம்பெருமானார் (ஸல்) மறைந்து நூறு நூற்றைம்பது ஆண்டுகளுக்குப் பின்னர் நூல்களில் எழுதப்பட்ட அவ்விஷயங்களுக்கு சுன்னத் என்று பெயர் அல்ல. நூல்களில் எழுதப்பட்ட அவ்விஷயங்களுக்கு ஹதீஸ் என்று பெயர் ஆகும். நேர்மையான முஸ்லிம்கள் ஆதிகாலத்திலிருந்து தமது செயல்களின் மூலமாக கடைபிடித்து வந்துள்ள செயல் வடிவிலான முன்மாதிரிக்குப் பெயரே சுன்னத் ஆகும். (செயல் வடிவிலான) இதில் ஆயிரக்கணக்கான முஸ்லிம்கள் ஈடுபடுத்தப்பட்டிருந்தனர். ஆம்! ஹதீதின் பெரும் பகுதி யூகங்கள், அனுமானங்களின் அடிப்படையிலுள்ளவையாக இருந்தபோதிலும் திருக்குர்ஆனோடும் சுன்னத்தோடும் அவை மோதாமலிருக்கும் பட்சத்தில் அவை ஏற்றுக் கொள்ளப்படுவதற்குத் தகுதியுள்ளவையாகும். மேலும் குர்ஆனுக்கும், சுன்னத்துக்கும் வலுவூட்டக்கூடியவையாகும். மேலும் இஸ்லாம்





மார்க்கத்தின் பெரும்பாலான விஷயங்கள் இடம்பெற்றுள்ள களஞ்சியமாகும். ஆகவே, ஹதீதை மதிப்பளிக்காமலிருப்பது இஸ்லாத்தின் ஓர் உறுப்பையே துண்டித்து எறிவது போன்றதாகும்.

மேலும், திருக்குர்ஆனுக்கும், சுன்னத்துக்கும் முரண்பாடான ஒரு ஹதீது இருக்குமேயானால் மேலும் அது திருக்குர்ஆனுக்கு இணக்கமாக இருக்கும் ஒரு ஹதீதுக்கு முரணாக காணப்படுமானால் அல்லது உதாரணமாக ஸஹீஹ் புகாரிக்கு எதிரான ஒரு ஹதீத் இருக்குமானால் அது ஒப்புக்கொள்வதற்கு தகுதியுள்ளதாகாது; ஏனெனில் அதனை ஒப்புக்கொள்வதால் திருக்குர்ஆனையும் திருக்குர்ஆனுக்கு இணக்கமான எல்லா ஹதீதுகளையும் மறுக்க வேண்டியதிருக்கும். திருக்குர்ஆன், சுன்னத் ஆகியவற்றிற்கு எதிராகவும் திருக்குர்ஆனுக்கு இணக்கமான ஹதீதுகளுக்கு எதிராகவும் உள்ள ஹதீதின் மீது நம்பிக்கை கொள்ள எந்த இறையச்சம் கொண்டவரும் துணிவு கொள்ளமாட்டார் என்பதை நான் நன்கறிவேன்.

எப்படியிருந்தாலும், ஹதீதுகளுக்கு கண்ணியம் கொடுங்கள். அவற்றிலிருந்து பயன் பெறுங்கள். ஏனெனில் அவை நபிகள் நாயகம் (ஸல்) அவர்களிடமிருந்து வெளிவந்தவையாகும். அவற்றை குர்ஆனும் சுன்னத்தும் மறுக்காதவரை நீங்களும் அவற்றை மறுக்காதீர்கள். மேலும் அவற்றை முற்றாய் கடைபிடித்தொழுகுங்கள். எவ்வாறெனில் உங்களிடையே ஹதீதின் ஆதாரமில்லாமல் எவ்வித அசைவும் அசையாமையும் ஏற்படுதல் கூடாது. மேலும் அதன் ஆதாரமின்றி எதையும் செய்யவோ செய்யாமல் விட்டு விடவோ கூடாது. ஆயினும் திருக்குர்ஆனில் விவரிக்கப்பட்ட விவரங்களுக்கு முற்றிலும் மாறான வகையில் எந்த ஹதீதாவது இருக்குமேயானால் அதனை திருக்குர்ஆனோடு ஒன்றுபடுத்துவதில் கவனம் செலுத்துங்கள். ஏனெனில் அந்த முரண்பாடு ஒருவேளை உங்களது தவறாகவே இருக்கலாம். எவ்விதத்திலும் அந்த முரண்பாடு நீங்கவில்லையாயின் அவை திரு நபி (ஸல்) அவர்கள் புறமிருந்து வந்த ஹதீதுகள் அல்ல எனக் கருதி அவற்றை அகற்றி விடுங்கள். மேலும் ஒரு ஹதீது பலவீனமாக இருப்பினும் அது திருக்குர்ஆனுக்கு இணக்கமாகக் காணப்பட்டால் அதனை ஒப்புக் கொள்ளுங்கள். ஏனெனில் குர்ஆன் அதனை மெய்ப்படுத்துகிறது. மேலும், ஒரு ஹதீது ஏதாவதொரு முன்னறிவிப்பைக் கொண்டதாய் இருந்து அது முஹத்ததீன்கள் என்னும் ஹதீதுகலை வல்லுனர்களின் கருத்தின்படி,

பலவீனமானதாயினும் அது உங்களது காலத்தில் அல்லது அதற்கு முன்பாக அந்த ஹதீதின் முன்னறிவிப்பு நிறைவேறி இருக்குமாயின் அதனை உண்மையான ஹதீத் என ஒப்புக் கொள்ளுங்கள். அந்த ஹதீதை பலவீனமானதென்றும் இட்டுக்கட்டப்பட்ட தென்றும் குறிப்பிட்ட அந்த முஹத்ததீன்கள் என்னும் ஹதீது கலை வல்லுனர்களையும் ராவிகள் என்னும் ஹதீது அறிவிப்பாளர்களையும் தவறு செய்தவர்களாகவும் பொய்யர்களாகவும் நீங்கள் கருதிக் கொள்ளுங்கள். அவ்வாறான முன்னறிவிப்புகளைக் கொண்ட நூற்றக்கணக்கான ஹதீதுகள் உள்ளன. அவற்றில் பெரும்பாலானவை முஹத்திஸீன்களின் பார்வையில் குறைபாடுள்ளவையாகவும் இட்டுக்கட்டப்பட்டவையாகவும் பலவீனமானவையாகவும் இருக்கின்றன.

ஆகவே அவற்றில் ஏதாவதொரு ஹதீது நிறைவேறிய பின்பும் இது பலவீனமானது; அதன் அறிவிப்பாளர் நம்பிக்கைக்குத் தகுதி அற்றவர்; ஆகவே இதனை நாங்கள் ஒப்புக் கொள்ள மாட்டோம் எனக் கூறி அதனை நீங்கள் தள்ளுவீர்களென்றால் இச்செயல் உங்களின் நம்பிக்கையின்மையையே புலப்படுத்தும். ஏனெனில் இத்தகைய ஹதீது உண்மையானதென்று இறைவன் வெளிப்படுத்தியிருக்க நீங்கள் அதனை ரத்து செய்வதாக ஆகிவிடும். இவ்வாறான ஆயிரம் ஹதீதுகள் முஹத்ததீன்களின் கருத்தின்படி பலவீனமுள்ளவையாக இருந்து, பின்னர் அந்த ஆயிரம் முன்னறிவிப்புகள் உண்மையாகவே நிறைவேறி இருந்தால் நீங்கள் இந்த ஹதீதுகளைப் பலவீனமானவை என்று தீர்மானிப்பதன் மூலம் இஸ்லாத்தின் ஆயிரம் அத்தாட்சிகளை அழித்து விடுவீர்களா? என்பதை சற்று சிந்தனைச் செய்து பாருங்கள். ஆகவே அப்படிப்பட்ட நிலையில் நீங்கள் இஸ்லாத்தின் பகைவர்களாகவே ஆகிவிடுவீர்கள். இறைவன் கூறுவதாவது:

‘ஃபலா யுழ் ஹிரு அலா கய்பிஹீ அஹதன் இல்லா மனிர்த்தழா மிர்ரஸூல்.’ *(திருக்குர்ஆன் 73:27-28)*

பொருள்: இறைவன் தான் தேர்ந்தெடுத்த தூதரைத் தவிர வேறு எவருக்கும் தனது மறைவான ஞானங்களை வெளிப்படுத்த மாட்டான்.

ஆகவே உண்மையான முன்னறிவிப்பை உண்மையான தூதரின் பக்கம் அல்லாமல் யார் பக்கம் தொடர்பு படுத்த முடியும்? அப்படிப்பட்ட சந்தர்ப்பத்தில், சஹீஹான ஹதீஸை பலவீனமானது





எனக் கூறுவதில் ஹதீஸ் தொகுப்பாளர் தவறிழைத்து விட்டார் எனக் கூறுவது நேர்மையான நிலைக்குப் பொருத்தமானதில்லையா என்ன? அல்லது பொய்யான ஹதீதை இறைவன் உண்மையானதாகச் சம்பவிக்கச் செய்ததன் மூலம் அவன் தவறு இழைத்திருக்கிறான் என்று கூறுவது பொருத்தமானதா?

ஒரு ஹதீது பலவீனமாக இருந்த போதிலும் அது திருக்குர்ஆனுக்கும், சுன்னத்துக்கும், இணக்கமான ஹதீதுகளுக்கும் மாறுபாடில்லாத வகையில் அமைந்திருந்தால் அதன்படி செயல்படுங்கள். ஆயினும் இஸ்லாத்தில் குழப்பத்தை உண்டு பண்ணிய பெரும்பாலான பொய்யான ஹதீதுகளும் இருப்பதால் நீங்கள் மிகவும் கவனமாய் ஹதீதுகளைப் பற்றிச் செயல்படவேண்டும். ஒவ்வொரு பிரிவினரும் தத்தம் நம்பிக்கைக்கு ஏற்றவாறு ஹதீதுகளை ஆதாரமாக வைத்துக் கொள்கிறார்கள். எதுவரை எனில், தொழுகையைப் போன்ற தொடர்ந்து செயல்பட்டு வரக்கூடிய முக்கியமான கடமைகளையும் ஹதீதுகளின் வேறுபாடானது பலவிதமான நிலைகளை உருவாக்கி விட்டது. சிலர் தொழுகையில் உரத்த குரலில் ஆமீன் என்று கூறுகின்றனர். வேறு சிலர் மெதுவாக கூறுகின்றனர். சிலர் இமாமின் பின்னால் ஃபாத்திஹா ஓதுகிறார்கள். சிலர் அவ்வாறு ஓதுவது தொழுகையை கெடுத்து விடும் எனக் கருதுகிறார்கள். சிலர் நெஞ்சின் மீது கையைக் கட்டுகிறார்கள். சிலர் தொப்புளின் மீது கையை கட்டுகிறார்கள். இவ்வேறுபாடுகளுக்கு உண்மையான காரணம் ஹதீதுகளேயாகும்.

“குல்லு ஹிஸ்ன் பிமா லதைஹிம் ஃபரிஹூன்” *(திருக்குர்ஆன் 23:54)*

பொருள்: ஒவ்வொரு கூட்டத்தாரும் அவரவர் கையில் இருப்பதைக் கொண்டு மகிழ்கிறார்கள்.

ஆனால் சுன்னத் ஒரே வழியையே தெரிவித்திருந்தது. பின்னர் அறிவிப்புகளின் தலையீட்டால் இவ்வழிமுறையானது ஆட்டங்கான தொடங்கியது. இவ்விதமே ஹதீதைப் பற்றிய தவறான கருத்து பெரும்பாலான மக்களை நாசமாக்கிவிட்டது. ஷியாக்களும் இதே காரணத்தாலேயே நாசமாயினர். திருக்குர் ஆனைத் தங்களுக்கு தீர்ப்புக் கூறும் நீதிபதியாக கைக்கொண்டிருந்தால் ‘நூர்’ என்னும் அத்தியாயம் ஒன்றே அவர்களுக்கு ஒளியை அளித்திருக்க முடியும். ஆனால் ஹதீதுகளே அவர்களை நாசத்திற்குள்ளாக்கியது. இவ்வாறே ஹஸ்ரத்

ஈசா மஸீஹ் காலத்திலும் அஹ்லே ஹதீத் என்று அழைக்கப்பட்ட அந்த யூதர்களும் நாசமாகிப் போயினர்.*

சில காலமாகவே அவர்கள் தவ்ராத்தை விட்டு விட்டனர். இன்று வரை அவர்களது நம்பிக்கை இருந்து வருவதுபோல், ஹதீது தவ்ராத்தின் மீது தீர்ப்புக் கூறும் நீதிபதியாகும் என்பது அவர்களின் கொள்கையாக இருந்தது. அந்த ஹதீதுகளில் எதுவரை எலியா மீண்டும் தமது பூத உடலுடன் வானத்திலிருந்து இறங்க மாட்டாரோ அதுவரை அவர்களது வாக்களிக்கப்பட்ட மஸீஹும் வரமாட்டார் என்ற பெரும்பாலான ஹதீதுகளும் இருந்தன. இந்த ஹதீதுகள் அவர்களை பெரும் தவறிழைக்கச் செய்தது. அந்த மக்கள் அந்த ஹதீதுகள் மீது விசுவாசம் கொண்டிருந்ததால் இல்யாஸ் என்பதன் பொருள் யோவான் அதாவது யஹ்யா நபி ஆவார்; அவர் இல்யாஸ் உடைய குணத்திலும் பண்பிலும் பிரதிபிம்பமாக வந்திருக்கிறார் என்ற ஹஸ்ரத் (ஈஸா) மஸீஹ் உடைய விளக்கத்தை யூதர்களால் ஒப்புக் கொள்ள முடியாமற் போய் விட்டது. ஆகவே இந்த எல்லா தவறுகளும் அவர்களின் ஹதீதுகளின் காரணத்தால் விளைந்தனவையாகும். இறுதியில் அது அவர்கள் நம்பிக்கையிழக்கக் காரணமாய் அமைந்தது. அந்த மக்கள் அந்த ஹதீதுகளின் பொருளை புரிந்து கொள்வதில் தவறிழைத்திருக்கலாம் அல்லது ஹதீதுகளில் சில மனிதர்களின் சொற்களும் சேர்ந்திருக்கலாம்.

சுருங்கச் சொல்லின், யூதர்களின் மஸீஹை மறுத்தவர்கள் அஹ்லே ஹதீதுகளே என்பதை ஒருவேளை முஸ்லிம்கள் அறியாமலிருக்கலாம். அவர்கள் (ஈஸா நபி அலைஹிவஸ்ஸல்லம்) அவர்கள் மீது கூக்குரல் எழுப்பினர். நிராகரிப்பாளன் என மார்க்கத் தீர்ப்பு

* *தாலமூத்திலுள்ள ஹதீகளிலும் அறிவிப்புகளிலும் வெளியிடப்பட்ட விசுவாசங்கள் மீது பைபிளின் புதிய ஏற்பாட்டில் மிகவும் கடுமையான ஆட்சேபணை செய்யப்பட்டுள்ளது. இந்த ஹதீதுகள் பரம்பரையாக ஹஸ்ரத் மூஸா (அலை) வரை எட்டவைக்கப்பட்டது. இவை ஹஸ்ரத் மூஸாவின் வெளிப்பாடுகள் என்று கூறப்பட்டு வந்தன. இறுதியில் தவ்றாத்தை விட்டு விட்டு எல்லா நேரங்களிலும் ஹதீதுகளைப் படிப்பிதிலேயே அவர்கள் ஈடுபடலாயினர். சில விஷயங்களில் தாலமூத் தவ்றாத்திற்கு முற்றும் மாறுபட்டதாக இருக்கிறது. அப்போதும் யூதர்கள் தாலமூத்தில் வந்துள்ளவற்றிற்கேற்பவே செயல்பட்டு வந்தனர். (தாலமூத். எழுத்தாளர், யூசுப் ’ பார்கலி, லண்டன் பதிப்பு 1878)*





வழங்கினர். மேலும் இம்மனிதன் இறைவனின் வேதங்களை ஒப்புக் கொள்வதில்லை. இல்யாஸ் மீண்டும் வருவார் என்று இறைவன் அறிவித்திருக்கையில் இவர் இந்தத் முன்னறிவிற்பிற்கு சுயவிளக்கம் கொடுக்கிறார். மேலும் எவ்வித சார்புச் சொல்லுமின்றி முறைப்படி அந்த விஷயங்களை தன் பக்கம் இழுத்து செல்கிறார் என்றெல்லாம் கூறி வந்தனர்.*

மேலும் அவர்கள் ஹஸ்ரத் மஸீஹுக்கு காஃபிர் (நிராகரிப்பாளர்) என்று பட்டம் சூட்டியதுமல்லாமல் மார்க்கத்தை விட்டு விலகியவர் என்னும் பெயரையும் அவருக்கு சூட்டினர். மேலும் இம்மனிதர் உண்மையாளராக இருந்தால் மூஸாவின் மார்க்கம் பொய்யாகும் என்றும் அவர்கள் கூறி வந்தனர். அது அவர்களுக்கு அக்கிரமங்கள் அநீதிகளின் மோசமான காலகட்டமாக அமைந்திருந்தது. பொய்யான ஹதீதுகளே

* *ஹஸ்ரத் ஈசா (அலை) மீது நிராகரிப்பாளன் என்ற தீர்ப்பு எழுதப்பட்ட சமயத்தில் பவுல் என்பவனும் நிராகரிப்பாளர்களின் கூட்டத்தில் சேர்ந்திருந்தான். இந்த மனிதனே பின்னர் தன்னை “ரசூலே மஸீஹ்” என விளம்பரப்படுத்திக் கொண்டு பிரபலம் அடைந்தான். ஹஸ்ரத் மஸீஹின் வாழ்நாளில் இம்மனிதன் அவர்களுக்கு பெரும் பகைவனாக விளங்கினான். எந்த அளவில் மஸீஹின் பெயரில் பைபிளின் புதிய ஏற்பாடு எழுதப்பட்டிருக்கின்றனவோ அவைகளில் எதிலும் எனக்குப் பின் பவுல் தவ்பா என்னும் பாவமன்னிப்பு கோரிய பின் ரஸூல் ஆவான் என்னும் முன்னறிவிப்பு இடம் பெறவில்லை. இம்மனிதனின் கடந்த கால செயல்முறைகளைக் குறித்து கிறிஸ்தவர்கள் நன்றாய் அறிந்திருப்பதால் அதனை மீண்டும் நாமும் இப்போது இங்கு எழுத வேண்டிய அவசியமில்லை. அந்தோ பரிதாபம்! ஹஸ்ரத் மஸீஹ் அந்நாட்டில் இருந்தவரை அவர்களுக்கு அதிகம் தொல்லைகள் கொடுத்த மனிதனும் இவனேயாவான். மேலும் அவர்கள் சிலுவையிலிருந்து இரட்சிப்புப் பெற்று காஷ்மீர் நோக்கி சென்ற பின்னர் அவன் ஒரு பொய்யான கனவின் மூலம் தன்னை ஹவாரீன்களிள் ஒருவனாக ஆக்கிக் கொண்டான். பின்னர் இவன் முக்கடவுள் கொள்கையை உருவாக்கினான். மேலும் தவ்ராத்தின் மூலமாக கிறிஸ்தவர்கள் மீது பன்றி இறைச்சியானது நிரந்தரமாக விலக்கப்பட்டிருந்ததை மாற்றி அதனை ஆகுமானதாக்கினான். மதுபானம் உபயோகிப்பதை பரவலாக்கினான். பைபிளின் புதிய ஏற்பாட்டின் கொள்கையில் முக்கடவுள் கொள்கையை புகுத்தினான். பித்அத் எனப்படும் இப்புதிய செயல்கள் அனைத்தும் சிலைகளை வணங்கக் கூடிய யூனானியர்களை (கிரீஸ் நாட்டைச் சேர்ந்தவர்களை) திருப்தி செய்வதற்காக உற்பத்தி செய்யப்பட்டதாகும்.*

அவர்களை வஞ்சித்தன. சுருங்கச் சொல்லின் இதற்கு முன் ஒரு சமுதாயம் ஹதீதைத் தவ்ராத்தின் மீது தீர்ப்பு கூறும் நீதிபதியாகத் தீர்மானித்து ஒரு உண்மையான நபியைக் காஃபிர் (நிராகரிப்பாளன்) என்றும் தஜ்ஜால் (பொய்யன்) என்றும் கூறி அவரை ஒப்புக் கொள்ளாமல் நிராகரிக்கும் நிலைக்கு வந்தடைந்ததை நாம் ஹதீதுகளை படிக்கும் போது நினைவில் கொள்ள வேண்டும். இருப்பினும் முஸ்லிம்களுக்கு ஸஹீஹ் புகாரி என்னும் ஹதீதுகளின் தொகுப்பானது மாபெரும் அருட்கொடையாகவும் பலன் அளிக்கக் கூடிய நூலாகவும் இருக்கிறது. ஹஸ்ரத் ஈஸா (அலை) மரணம் அடைந்து விட்டார்கள் என்று மிகவும் தெளிவாக எழுதப்பட்டிருக்கும் சிறப்பு மிக்க நூலும் இதுவேயாகும். இவ்வாறே முஸ்லிமென்னும் ஹதீதுகளின் சிறப்பு நூலும் இதர ஹதீதுகளின் நூற்களும் பெரும்பாலான ஞானங்களையும் விஷயங்களையும் கொண்ட களஞ்சியங்களாகத் திகழ்கின்றன. நாம் இவற்றைப் பின்பற்றி செயல்படும்போது திருக்குர்ஆனுக்கும் சுன்னத்துக்கும் மாறானதும், குர்ஆனுக்கு இணக்கமான ஹதீதுகளுக்கு மாறுபாடானதுமான எந்த ஒரு விஷயமும் இடம் பெறாமல் பேணி நடப்பது அவசியமாகும்.

இறைவனைத் தேடும் அடியார்களே!

உங்கள் செவிகளை திறந்து கேளுங்கள் யகீன் என்னும் திடநம்பிக்கைப் போன்று சிறந்தது வேறொன்றுமில்லை. உங்களைப் பாவத்திலிருந்து விடுவிப்பதும் நீங்கள் நன்மை புரிவதற்கு உங்களுக்கு சக்தி அளிப்பதும் இறைவனின் உண்மையான நேசர்களாய் உங்களை ஆக்குவதும் திடநம்பிக்கையேயாகும். திட நம்பிக்கை இல்லாமல் பாவத்தை உங்களால் விட்டு விட முடியுமா? திட நம்பிக்கை என்னும் ஒளி இல்லாமல் மன இச்சைகளிலிருந்தும் நீங்கள் விலகியிருக்க முடியுமா? திட நம்பிக்கை இல்லாமல் உங்களால் மனஅமைதி அடைய முடியுமா? திட நம்பிக்கை இல்லாமல் உங்களிடையே உண்மையான மாற்றத்தை உண்டாக்க முடியுமா? திட நம்பிக்கை இல்லாமல் உண்மையான இன்பத்தை உங்களால் பெறமுடியுமா? உங்களைப் பாவத்திலிருந்து தடுத்து விமோசனம் அளிக்கக் கூடிய நிவாரணமும் பரிகாரமும் உங்களுக்கு வானத்தின் கீழ் வேறு ஏதேனும் உண்டா? மர்யமின் மகன் ஈசா சிந்தியதாகக் கூறப்படும் போலி இரத்தமானது உங்களை பாவத்திலிருந்து காப்பாற்ற முடியுமா?





கிறிஸ்தவர்களே! இப்பூமியானது துண்டு துண்டுகளாக சிதையும் வகையிலான பொய்யைக் கூறத் துணியாதீர்கள். இயேசுவும் கூட தமது இரட்சிப்பிற்காக திட நம்பிக்கையின் தேவையுடையவராக இருந்தார். அவர் அத்திட நம்பிக்கை கொண்டார்; இரட்சிப்பு பெற்றார். ஆனால் நாம் மஸீஹின் இரத்தத்தால் பாவத்திலிருந்து இரட்சிப்பு அடைந்தோம் என்று கூறி மக்களை ஏமாற்றும் கிறிஸ்தவர்கள் மீது பரிதாபமே நமக்கு ஏற்படுகிறது. அவர்கள் உச்சியிலிருந்து பாதம் வரை பாவத்தில் மூழ்கி இருக்கின்றனர். அவர்களது தெய்வம் யார் என்பதையே அவர்கள் அறிவதில்லை. மேலும் அவர்களது வாழ்க்கையானது அலட்சியப் போக்குள்ளதாயிருக்கிறது. அவர்களது மூளையில் மதுபான போதையானது ஏறியிருக்கிறது. ஆனால் வானத்திலிருந்து இறங்கக் கூடிய அப்பரிசுத்தமாகிய போதையை அவர்கள் அறியாதவர்களாகவே இருக்கிறார்கள். மேலும் இறைவனோடு தொடர்புள்ள வாழ்க்கையிலிருந்து தூய்மையான வாழ்க்கையால் உண்டாகும் அதன் பிரதிபலன்களிலிருந்தும் அவர்கள் பாக்கியம் கெட்டவர்களாக இருந்து வருகிறார்கள்.

திட நம்பிக்கையில் இல்லாமல் நீங்கள் இருள் நிறைந்த வாழ்விலிருந்து மீட்சி பெற மாட்டீர்கள் என்பதையும் ரூஹுல் குதுஸ் என்னும் பரிசுத்த ஆவியை நீங்கள் அடையமாட்டீர்கள் என்பதையும் நீங்கள் நினைவில் வையுங்கள். திடநம்பிக்கை உடையவர்களே பாக்கியவான்களாக இருக்கிறார்கள். ஏனெனில் அவர்களே இறைவனைக் காண்பார்கள். சந்தேகங்களிலிருந்தும் ஐயங்களிலிருந்தும் இரட்சிப்பு பெற்றவர்கள் அருளுக்குரியவர்கள். ஏனெனில் அவர்களே இரட்சிப்பு பெறுவார்கள். திட நம்பிக்கை என்னும் செல்வம் உங்களுக்கு அருளப்படும்போதுதான் நீங்கள் பாக்கியவான்களாவீர்கள். இதன் பின்னரே உங்களது பாவங்கள் அழிக்கப்படும்.

பாவம் திட நம்பிக்கை இவ்விரண்டும் ஒன்றோடு ஒன்று சேரக் கூடியவை அல்ல. ஒரு பொந்திற்குள் கொடிய நச்சுப் பாம்பு இருப்பதை கண்ட நீங்கள் அதற்குள் உங்கள் கையை விடத் துணிவீர்களா? ஒரு எரிமலையிலிருந்து எறிகள்கள் வந்து விழுந்து கொண்டிருக்கையில் அல்லது மின்சாரம் தாக்கிக் கொண்டிருக்கும் இடத்தில் அல்லது வெறிப் பிடித்த சிங்கம் தாக்கும் இடத்தில் அல்லது மனித வர்க்கத்தையே அழித்து கொண்டிருக்கின்ற பிளேக் என்னும் கொடி நோய் காணப்படும்

இடத்தில் நீங்கள் நின்று கொண்டிருப்பீர்களா? இவ்வாறிருக்க பாம்பு மீதும் மின்சாரம் மீதும் சிங்கத்தின் மீதும் பிளேக் மீதும் இருக்கும் அதே நம்பிக்கையானது உங்களுக்கு உங்களைப் படைத்த இறைவனின் மீதும் இருக்குமேயானால் அவனுக்கு எதிராக அவனது கட்டளைகளை மீறித் தண்டனைக்குரிய வழியை நீங்கள் கடைப்பிடிப்பீர்களென்பது அல்லது அவனோடுள்ள சத்திய விசுவாசத்தின் தொடர்பை முறித்துக் கொள்வீர்களென்பதோ ஒருபோதும் ஆகக் கூடிய விஷயமல்ல.

நன்மை, நேர்மை ஆகியவற்றின் பக்கம் அழைக்கப்பட்ட மக்களே!

எப்போது உங்களுடைய இருதயங்கள் யக்கீன் என்னும் திட நம்பிக்கையால் நிரப்பப்படுமோ அப்போதே இறைவன் மீதுள்ள கவர்ச்சியும் உங்களிடையே தோன்றும். அப்போதே பாவத்தின் அறுவறுப்பான கறையிலிருந்து நீங்கள் தூய்மைப்படுத்தப்படுவீர்கள் என்பதை உறுதியாக நம்புங்கள். ஒரு வேளை நீங்கள் உங்களுக்குத் திடநம்பிக்கை இருப்பதாக கூறிக் கொள்ளலாம். ஆனால் அவ்வாறு கூறுவதில் உங்களுக்கு ஏமாற்றம் ஏற்பட்டுள்ளது என்பதை நினைவில் கொள்ள வேண்டும். திட நம்பிக்கை உங்களுக்கு ஒருபோதும் உண்டாகவில்லை. ஏனெனில் அதைச் சார்ந்த அவசியமான விஷயங்களை நீங்கள் பெறவில்லை. இதற்குக் காரணம் நீங்கள் பாவத்திலிருந்து விலகாதிருப்பதேயாகும். நீங்கள் உங்கள் பாதங்களை எவ்வாறு முன்னால் எடுத்து வைக்க வேண்டுமோ அவ்வாறு எடுத்து வைக்கவில்லை. நீங்கள் எவ்வாறு பயப்படவேண்டுமோ அவ்வாறு பயப்படவில்லை. நீங்களே சற்று சிந்தித்துப் பாருங்கள். இந்த பொந்திற்குள் பாம்பு இருப்பதாக திட நம்பிக்கை கொண்ட ஒருவன் அப்பொந்திற்குள் கையை விடுவானா? தனது உணவில் விஷம் கலந்திருப்பதாக திட நம்பிக்கை கொண்ட ஒருவன் அதனை உண்ணுவானா? ஒரு புதரில் ஆயிரம் இரத்த வெறிபிடித்த சிங்கங்கள் இருப்பதை உறுதியாக அறிகின்ற ஒருவன் தன்னைப் பேணாமலும் கவனமின்மையாலும் அப்புதரின் பக்கம் கால் எடுத்து வைக்கத் துணிவானா? ஆகவே உங்களுக்கு இறைவன் மீதும், தீர்ப்பு அளிக்கப்படும் நாள் மீதும் திட நம்பிக்கை இருக்குமானால் உங்களது கரங்களும், உங்கள் செவிகளும், உங்களது கண்களும் பாவங்கள் புரிய எங்ஙனம் தைரியம் கொள்ளத் துணியும்?

பாவமானது திட நம்பிக்கையை வெல்ல முடியாது. உங்களை





எரித்துச் சாம்பலாக்கக் கூடிய நெருப்பை நீங்கள் காணும்போது அதில் நீங்கள் எவ்வாறு விழத்துணிவீர்கள்? திட நம்பிக்கையின் சுவர்கள் வானம் வரை உயர்ந்தோங்கியிருக்கின்றன. ஷய்த்தானால் அச்சுவர்கள் மீது ஏற முடியாது. பரிசுத்தம் அடைந்த ஒவ்வொருவரும் திட நம்பிக்கையினால்தான் பரிசுத்தம் அடைந்தனர். திட நம்பிக்கையானது துயரத்தை சமாளிப்பதற்கான சக்தியை அளிக்கிறது. அது எத்தகையது என்றால் ஒரு அரசனை சிம்மாசனத்திலிருந்து அகற்றி ஒரு பிச்சைக்காரனின் ஆடையை அணியச் செய்கிறது. திட நம்பிக்கையானது ஒவ்வொரு துன்பதையும் எளிதாக்குகிறது. திட நம்பிக்கையானது உங்கள் இறைவனை உங்களுக்குக் காட்டிக் கொடுக்கிறது. ஒவ்வொரு பாவ நிவர்த்திக் கொள்கையும் பொய்யானதாகும். பித்யா என்னம் ஒவ்வொரு ஈடுசெய்தலும் பொய்யானதேயாகும். ஒவ்வொரு தூய்மையும் திட நம்பிக்கையின் வழியாகவே உண்டாகின்றது. உங்களை பாவத்திலிருந்து விடுவிப்பதும், உங்களை இறைவன் வரை எடுத்துச் செல்வதும், உண்மையிலும் உறுதியிலும் மலக்குகளை விட உங்களை முன்னுக்கு கொண்டுச் செல்வதும் திட நம்பிக்கையேயாகும். திட நம்பிக்கையின் வழியைக் காட்டாத ஒவ்வொது மதமும் பொய்யானதேயாகும். திட நம்பிக்கையின் வழியாக இறைவனைக் காட்டித்தராத ஒவ்வொரு மதமும் பொய்யானதாகும்.

பழங்கதைகளைத் தவிர வேறு ஒன்றுமில்லாத ஒவ்வொரு மதமும் பொய்யானதேயாகும். இறைவன் முன்பு இருந்தது போலவே இப்போதும் இருந்து வருகின்றான். இதற்கு முன்பு, அவனிடம் இருந்த வல்லமைகள் அனைத்தும் இப்போது இருந்து வருகின்றன. அடையாளங்களைக் காட்டுவதற்குரிய அதிகாரங்களும், அவனிடம் முன்பு இருந்தது போலவே இப்போதும் இருந்து வருகின்றன. அவ்வாறிருக்க நீங்கள் பழங் கதைகளின் மீது திருப்தி கொள்கிறீர்கள்?

எந்த மதத்தில் பழங்கதைகள் மட்டுமே அதன் தெய்வீக அற்புதங்களாகவும் அதன் முன்னறிவிப்புகளாகவும் இருக்கின்றனவோ அம்மதம் அழிந்து போனதாயிருக்கிறது. எந்த ஜமாஅத் மீது (எக்கூட்டத்தின் மீது) இறைவன் இறங்கவில்லையோ அக்கூட்டம் அழிந்து போனதாகும். மேலும் திட நம்பிக்கையின் வழியாக இறைவனது கரத்தால் தூய்மைஅடையாத அந்த ஜமாஅத் (அக்கூட்டம்) அழிந்து போனதாகும். எவ்வாறாக மனிதன் மனஇச்சைகளை

உருவாக்கும் பொருட்களைக் கண்டு அவற்றின் பக்கம் ஈர்க்கப்படுகின்றானோ அவ்வாறே மனிதன் ஆன்மீக இன்பங்களைத் திட நம்பிக்கையின் வழியாக அடையும் போது அவன் இறைவன் பக்கம் ஈர்க்கப்படுகிறான். மேலும் இறைவனிடம் அமைந்துள்ள சிறப்புத் தன்மையானவை மற்ற எல்லா பொருட்களையும் கழிவுப் பொருட்களாக அவனுக்குத் தோற்றம் அளிக்கும் வகையில் அவனைப் போதை கொள்ளச் செய்து விடுகின்றன. அவன் இறைவனைப் பற்றியும் அவனது மகத்துவம், கம்பீரம், வல்லமை, தீர்ப்பளிக்கும் நாள் ஆகியவை பற்றியும் திட நம்பிக்கையால் அறியும் அதே சமயத்தில் தான் பாவத்திலிருந்து இரட்சிப்பு பெறுகிறான். எல்லாவிதமான அச்சமற்ற நிலைக்கும் அடிப்படை காரணம் அறியாமையேயாகும். இறைவனிடமிருந்து உறுதியான ஞானத்தில் பங்கு பெறும் மனிதன் ஒருபோதும் அச்சமில்லாமல் இருக்க மாட்டான். ஒரு பயங்கரமான வெள்ளப் பெருக்கானது தன் வீட்டை நோக்கி வருவதாக அல்லது அவ்வீட்டின் இறுதி இடமொன்றே எஞ்சி இருப்பதைத் தவிர இதர பாகங்களையெல்லாம் நெருப்பு பிடித்து எரிவதாகவோ அறிந்த அவ்வீட்டின் உரிமையாளன் அவ்வீட்டில் ஒருபோதும் தங்கியிருக்க மாட்டான்.

இவ்வாறிருக்க நீங்கள் இறைவனின் தீர்ப்பளிக்கும் இறுதி நாள் மீது திட நம்பிக்கை கொண்டவர்களாக வாதம் புரிந்து கொண்டு அதே சமயம் உங்களது அபாயகரமான நிலையிலிருந்து மீண்டுவராமல் அதிலேயே எப்படி நிலை கொண்டிருக்கிறீர்கள்?

ஆகவே நீங்கள் உங்கள் கண்களைத் திறங்கள். முழு உலகிலும் காணப்படுகின்ற அத்தெய்வீக சட்டங்ளை பாருங்கள். கீழ்நோக்கிச் செல்கின்ற எலிகளைப்போல் ஆகாதீர்கள். மாறாக வானவெளியை தனக்காக விரும்பி உயரப் பறக்கும் புறாவைப் போல் ஆகுங்கள். நீங்கள் பைஅத் என்னும் உடன்படிக்கை மூலம் தவ்பா (பாவமன்னிப்பு) கோரிய பின்னரும் அப்பாவத்திலேயே நிலை கொள்ளாதீர்கள். பாம்பு தனது சட்டையை கழற்றி எறிந்து விட்ட பின்னரும் பாம்பாகவே இருப்பதுபோல் நீங்களும் ஆகாதீர்கள். உங்களை நெருங்கிக் கொண்டிருக்கும் மரணத்தை நினைவு கூறுங்கள். ஆனால் நீங்களோ இதனை அறியாதவர்களாக இருக்கிறீர்கள். நீங்கள் பரிசுத்தவான்களாக ஆவதற்கு முயற்சியுங்கள். மனிதன் தானாக பரிசுத்தமான பின்னரே பரிசுத்தத்தை பெறுகிறான். இருப்பினும் நீங்கள் இந்த





அருட்கொடையை எவ்வாறு பெறுவீர்கள்? இதன் விடையை இறைவனே திருக்குர்ஆனில் அளித்துள்ளான்.

“வஸ்தயீனு பிஸ்ஸப்ரி வஸ்ஸலாத்” ***(திருக்குர்ஆன் 2 : 46)***
பொருள் : தொழுகையைக் கொண்டும் பொறுமையைக் கொண்டும் இறைவனிடம் உதவி தேடுங்கள்.

தொழுகை என்றால் என்ன? அது தஸ்பீஹ் (இறை தூய்மையை எடுத்துரைத்தல்) தக்தீஸ் (இறை பரிசுத்தத்தை நினைவு கூர்தல்) தம்ஹீத் (இறைவனை புகழ்தல்) இஸ்திஃபார் (பாவமன்னிப்பு கோருதல்) மேலும் துரூத் (ஸலவாத்து ஓதுதல்) ஆகியவற்றைக் கொண்டு மன உருக்கத்துடன் செய்யும் பிரார்த்தனையாகும். ஆகவே நீங்கள் தொழும்போது அறியாத மக்களைப் போன்று அரபு மொழியில் மாத்திரம் உங்களது துஆக்களை கேட்க வேண்டாம். ஏனெனில் அறியாதவர்களின் தொழுகை அவர்களது இஸ்திக்ஃபார் ஆகிய அனைத்தும் வெறும் சடங்குகளும் சம்பிரதாயங்களுமாகும். அவற்றில் எவ்வித உண்மையும் இல்லை. ஆயினும் உங்களது இதயங்களில் பணிவும் மன்றாடுதலும் நல்லவிதம் உண்டாகும் பொருட்டு நீங்கள் தொழும்போது இறைவனது வசனமாகிய திருக்குர்ஆனையும், எம்பெருமானார் (ஸல்) அவர்கள் அருளிய சில துஆக்களையும் தவிர உங்களது மற்ற எல்லா துஆக்களையும் உங்களது சொந்த மொழியிலேயே மனஉருக்கத்துடன் கேட்டு வாருங்கள்.

ஐந்து நேரத் தொழுகைகள் என்றால் என்ன? அவை உங்களின் பல்வேறு நிலைகளின் சித்திரமாகும். இவை ஆபத்தான சமயங்களில் உங்களது வாழ்க்கையில் உங்கள் மீது உண்டாகக் கூடிய அவசியமான ஐந்து மாற்றங்களாகும். உங்களின் இயல்புக்கு அவை அமையப் பெறுவது மிகவும் அவசியமாயிருக்கிறது.

உதாரணமாக, உங்கள் மீது ஏதாவது ஆபத்து வரப்போகிறதாக முதலில் உங்களுக்கு அறிவிக்கப்படும் போது உங்களின் பெயரில் நீதிமன்றத்திலிருந்து ஒரு வாரண்ட் அனுப்பப்படுகிறது. இது உங்களுடைய திருப்தியிலும் சுகவாழ்விலும் இன்னலை விளைவித்த முதல் நிலையாகும். ஆகவே இந்நிலை சூரியன் கீழ்வானை நோக்கிச் சரியக் கூடிய நேரத்திற்கு ஒப்பாக இருக்கிறது. ஏனெனில் இதனால் உங்களின் சுகவாழ்வில் சரிவு உண்டாகத் தொடங்கியது. இதற்கு நேர் எதிராக “லுஹ்ர்” என்னும் பகல் தொழுகை தீர்மானிக்கப்பட்டுள்ளது.

இதன் நேரம் சூரியன் கீழ்வானை நோக்கிச் சரியும் சமயத்திலிருந்து ஆரம்பமாகிறது.

ஆபத்திற்குரிய இடம் நெருங்கும்போதே இரண்டாவது நிலை உங்களிடையே உண்டாகிறது. உதாரணமாக, நீங்கள் வாரண்ட் மூலமாக கைது செய்யப்பட்டு நீதிபதிக்கு முன் கொண்டு வரப்படுகிறீர்கள். இது உங்களுக்குள் ஏற்படும் அச்சத்தினால் இரத்தம் வரண்டு போவதற்கும் நிம்மதி என்னும் ஒளி உங்களிலிருந்து மறைந்து போவதற்குமானதொரு சமயமாகும். ஆகவே இந்நிலையானது சூரியனிலிருந்து ஒளி குறைந்து அதன்மீது உங்கள் பார்வை பதியக்கூடிய, அதன் மறைவு நெருங்கிக் கொண்டிருப்பது தெளிவாக தென்படுவதற்குமுள்ள நேரத்திற்கு ஒப்பானதாகும். இந்த ஆன்மீக நிலைக்கு நேர் எதிராக "அஸ்ர்" என்னும் பிற்பகல் தொழுகையானது நியமிக்கப்பட்டுள்ளது.

இந்த ஆபத்திலிருந்து விடுதலை பெறக் கூடிய நம்பிக்கை முற்றிலும் கைவிடப்படும்போது மூன்றாவது நிலை உங்களிடையே உண்டாகிறது. உதாரணமாக, உங்கள் மீது குற்றப் பத்திரிக்கை தாக்கல் செய்யப்படுகிறது. உங்களை நாசமாக்கும் பொருட்டு உங்களுக்கு விரோதமாய் சாட்சியங்கள் அளிக்கப்பட்டுள்ளன. இது உங்களை உணர்விழக்கச் செய்யக் கூடிய சமயமாகும். மேலும் நீங்கள் உங்களை ஒரு கைதியாக நம்பத் தொடங்குகிறீர்கள். ஆகவே இந்நிலை சூரியன் மறைவதற்கும் பகற்பொழுதின் பிரகாசத்தின் மீதுள்ள நம்பிக்கை அனைத்தும் இழக்கப்படக் கூடிய சமயத்திற்கும் ஒப்பானதாகும். ஆகவே இந்த ஆன்மீக நிலைக்கு எதிராக "மக்ரிப்" என்னும் முன் இரவுத் தொழுகையானது நியமிக்கப்பட்டுள்ளது.

எப்போது உங்கள் மீது ஆபத்து வந்து அடைந்து விடுகிறதோ, மேலும் அதன் கடுமையான இருள் உங்களைச் சூழந்து விடுகிறதோ அச்சமயத்தில்தான் உங்களுடைய நான்காவது நிலை உண்டாகிறது. உதாரணமாக, உங்கள் மீது குற்றப் பத்திரிக்கை தாக்கல் செய்யப்பட்டுச் சாட்சியங்களும் முடிந்ததற்குப் பின்னர் உங்கள் மீது தண்டனைக்குரிய தீர்ப்பு கூறப்படுகிறது. உங்களைக் கைது செய்யுமாறு காவலரிடம் ஒப்படைக்கப்படுகிறீர்கள். ஆகவே இந்நிலை இரவு உண்டாவதற்கும் கடுமையான இருள் சூழக் கூடிய சமயத்திற்கும் ஒப்பானதாய் இருக்கிறது. ஆகவே இந்த ஆன்மீக நிலைக்கு எதிராக "இஷா" என்னும் இரவுத் தொழுகையானது நியமிக்கப்பட்டுள்ளது.





பின்னர் நீங்கள் ஒரு குறிப்பிட்ட ஒரு காலம் வரை இந்தச் சங்கடமான இருளை கடந்து கொண்டிருக்கையில் ஐந்தாவது நிலையாக இறைவனது கருணையானது உங்கள் மீது பீரிட்டெழுந்து உங்களை அந்த இருளிலிருந்து விடுவித்து விமோசனம் அளிக்கிறது. உதாரணமாக, இருளுக்குப் பின்னர் மீண்டும் காலை உதயமாகி அதே பகலின் ஒளி தனது சக்தியுடன் வெளிப்படுகிறது. இந்த ஆன்மீக நிலைக்கு எதிராக "பஜ்ர்" என்னும் அதிகாலைத் தொழுகையானது நியமிக்கப்பட்டுள்ளது.

ஆகவே இயற்கையாக உங்களில் அமைந்துள்ள மாற்றங்களின் ஐந்து நிலைகளை முன்வைத்து ஐந்து நேரத் தொழுகைகளை இறைவன் உங்களுக்காக ஏற்படுத்தியுள்ளான். இத்தொழுகைகள் விசேஷமாக உங்களின் ஆன்மாவின் நலனுக்காக அமைந்துள்ளவையாகும் என்பதனை இதிலிருந்து நீங்கள் புரிந்து கொள்ள இயலும். அதனால் நீங்கள் இந்த ஆபத்திலிருந்து தப்ப வேண்டுமென்றால் இந்த ஐந்து நேரத் தொழுகைகளையும் விட்டு விடாதீர்கள். அவை உங்கள் அகத்திலும் ஆன்மீகத்திலும்மாற்றங்களை உண்டாக்குகின்ற நிழல்களாகும். வரக்கூடிய ஆபத்துகளுக்கு தொழுகைகளில் தக்க பரிகாரம் இருக்கின்றது. வரக் கூடிய ஒவ்வொரு புதிய நாளும் உங்களுக்கு எத்தகைய விதியைக் கொண்டு வரும் என்பதை நீங்கள் அறியமாட்டீர்கள். ஆதலால் சூரியன் உதயம் ஆவதற்கு முன்பே அது உங்களுக்கு நன்னாளாகவும் பாக்கியமுள்ள நாளாகவும் இருக்க நீங்கள் உங்கள் எஜமானனின் முன்பு மன உருக்கத்துடன் கெஞ்சிப் பிரார்த்தனை செய்து வாருங்கள்.

தலைவர்களே! அரசர்களே! செல்வந்தர்களே!

உங்களிடையே இறைவனுக்கு அஞ்சுகிறவர்களும் அவன் காட்டித் தந்த எல்லாப் பாதைகளிலும் நேர்மையாக செயல்படக் கூடியவர்களும் மிகக் குறைவாகவே காணப்படுகிறார்கள். மேலும் பெரும்பாலானவர்கள் உலகச் செல்வங்கள் மீதே பற்று கொண்டவர்களாகவும் அதிலேயே தமது காலத்தை கழிக்கக் கூடியவர்களாகவும் இருக்கிறார்களே தவிர அவர்களில் யாரும் மரணத்தைப் பற்றிச் சிறிதும் நினைவில் கொள்வதில்லை. தொழுகையை கடைப்பிடிக்காமலும் இறைவனைவிட்டு கவனமில்லாதவர்களாகவும் இருக்கும் ஒவ்வொரு எஜமானன் மீதும் அவரது ஊழியவர்கள் செய்யும் எல்லாப் பாவங்களும் அந்த

எஜமானனின் பிடரியின் மீதே வந்து விழும். மேலும் மதுபானம் அருந்தும் ஒவ்வொரு எஜமானனின் கீழ் பணியாற்றும் ஊழியர்களும் அவருடன் மதுபானம் அருந்துவதில் பங்கு கொண்டவர்களாயின் அவர்களின் பாவமும் அந்த எஜமானனின் பிடரியின் மீதே விழும்.

அறிவாளிகளே! இவ்வுலகமானது நிலையான ஓர் இடம் அல்ல. ஆகவே நீங்கள் சுதாரித்துக்கொள்ளுங்கள். நீங்கள் எல்லாவிதமான அநீதிகளையும் விட்டு விடுங்கள். போதையை விளைவிக்கக் கூடிய ஒவ்வொரு பொருளையும் விட்டொழித்து விடுங்கள். மனிதனை நாசமாக்கக் கூடியது மது மாத்திரம் அல்ல. மேலும் எப்போதும் வழக்கமாக்கிக் கொண்டிருக்கின்ற, அபின், கஞ்சா, சரஸ், பங்கு, கள் முதலான போதை பொருட்களையும் நீங்கள் விட்டு விடுங்ள். அவை மூளையை கெடுத்து விடுவதுமல்லாமல் இறுதியில் மனிதனையே அழித்து விடுகிறது. ஆகவே இவற்றிலிருந்து நீங்கள் தப்பித்துக் கொள்ளுங்கள். நீங்கள் இப்பொருட்களை ஏன் உபயோகித்து வருகிறீர்கள் என்பதை நம்மால் புரிந்து கொள்ள முடியவில்லை. இவற்றின் தீங்கினால் உங்களைப் போன்றவர்கள் போதை பொருள்களுக்கு அடிமையாகி ஒவ்வோர் ஆண்டும் ஆயிரக்கணக்கில் இவ்வுலகத்தை விட்டும் பிரிந்து கொண்டிருக்கிறார்கள்.* இதுபோக இத்தகையவர்களுக்கு மறுமையின் ஆக்கினை வேறு இருக்கிறது.

நீங்கள் நீண்ட வயதுடன் வாழவும் இறைவனுடைய அருட்கொடையை பெறவும் தூய்மையானவர்களாக மாறிவிடுங்கள். வரம்பு மீறி சிற்றின்பத்தில் வாழ்க்கை நடத்துவது சாபத்திற்குரிய

*ஐரோப்பாவில் எந்த அளவில் மதுபானம் நஷ்டத்தை விளைவித்ததோ அதற்குக் காரணம் ஈசா (அலை) மதுபானம் அருந்தி வந்ததேயாகும். ஒருவேளை ஏதாவதுநோயின் காரணத்தால் அல்லது பழைய பழக்கத்தின் காரணத்தால் அவர்கள் அதனை உபயோகித்திருக்கலாம். ஆனால் முஸ்லிம்களே! உங்களுக்கு திருநபி (ஸல்) அவர்கள் இயற்கையாகவே பாவமற்றவர்களாக இருந்ததைப் போன்றே ஒவ்வொருவிதமான போதையிலிருந்தும் விடுபட்டுத் தூய்மையானவர்களாயும் பாவ மற்றவர்களாயும் இருந்தார்கள். ஆதலால் நீங்கள் உங்களை முஸ்லிம்கள் என்று அழைத்துக் கொண்டு நீங்கள் யாரைப் பின்பற்றுகிறீர்கள்? திருக்குர்ஆனானது பைபிளின் புதிய ஏற்பாட்டைப் போல் மதுவை ஹலால் (ஆகுமானது) ஆக்கவில்லை. இவ்வாறிருக்க நீங்கள் எந்த ஆதாரத்தைக் கொண்டு மதுவை ஹலால் (ஆகுமானது) ஆக கொள்கிறீர்கள்? நீங்கள் மரணிக்கப் போவதில்லையா?





வாழ்க்கையாகும். வரம்பு மீறி தீய நடத்தையுடன் செயல்படுவதும் தான்தோன்றித்தனமாய் நடப்பதும் சாபத்திற்குரிய வாழ்க்கையாகும். வரம்பு மீறி இறைவனோடும் அல்லது அவனது அடியார்களோடும் நேசபாவமில்லாமல் அலட்சியமாக இருப்பதும் சாபக்கேடான வாழ்க்கையேயாகும். இறைவனுக்கும் மனிதர்களுக்கும் ஆற்ற வேண்டிய கடமைகளைப் பற்றி ஒரு யாசகரிடம் கேட்கப்படுவது போல் ஒவ்வொரு செல்வந்தனிடமும் இறைவனால் கேட்கப்படும். இன்னும் சொல்லப்போனால் அதைவிட அதிகமாக கேட்கப்படும்.

இக்குறுகிய வாழ்க்கையை நம்பி இறைவனை விட்டும் முழுமையாக முகம் திரும்பக் கூடியவன் எத்தகைய துர்பாக்கியவனாயிருக்கிறான். இறைவனால் விலக்கப்பட்டவற்றை அவனுக்கு இறைவனால் ஆகுமானதாக்கப்பட்டதுபோல் சிறிதும் அச்சமில்லாமல் உபயோகித்து வருகிறான். ஆவேசம் வரும்போது பைத்தியக்காரர்களைப் போல் பிறரைப் பழித்துரைக்கிறான். சிலரை அடித்துக் காயப்படுத்துகிறான். சிலரை கொலை செய்திடவும் ஆயத்தமாகிறான். தன் காமவெறியை நிறைவேற்ற வெட்கக் கேடான முறைகளின் எல்லையையே தாண்டி விடுகின்றான். ஆகவே அவன் உண்மையான சுகவாழ்வைப் பெறாமலேயே மரணமாவான்.

அன்புக்குரியவர்களே! நீங்கள் சில நாட்களுக்காக இவ்வுலகிற்கு வந்திருக்கிறீர்கள். அவற்றில் பெரும்பாலான நாட்கள் கடந்து விட்டன. ஆகவே நீங்கள் உங்களது எஜமானனை கோபப்படுத்த வேண்டாம். உங்களை விட சக்திமிக்க ஓர் அரசுக்கு உங்களோடு பகை ஏற்பட்டால் அது உங்களை அழித்து விடமுடியுமல்லவா? இவ்வாறிருக்க நீங்கள் இறைவனின் வெறுப்பிலிருந்து உங்களால் எவ்வாறு தப்ப இயலும்? என்பதை சற்றுச் சிந்தித்துப் பாருங்கள். நீங்கள் இறைவனது பார்வையில் இறையச்சமுடையவர்களாக இருந்தால் உங்களை எவராலும் அழித்து விட முடியாது. இறைவனே உங்களை பாதுகாத்து வருவான். உங்களை கொலை செய்யும் பொருட்டு உங்களை பின் தொடரக் கூடியவனால் உங்களை எதுவும் செய்து விட முடியாது. இல்லாவிடில் இறைவனைத் தவிர உங்களது உயிரை பாதுகாக்கிறவன் வேறு யாருமில்லை; மேலும் நீங்கள் உங்களை பகைவர்களுக்குப் பயந்தும் அல்லது வேறு ஆபத்துக்களில் சிக்கியும் நிம்மதியிழந்தவர்களாக வாழ்வீர்கள். அதுமட்டுமல்லாமல் உங்கள் வாழ்க்கையின் இறுதி நாள் பெரும் துக்கத்திலும் துயரத்திலுமே கழியும். எவர்கள் இறைவனோடு

இருக்கிறார்களோ அவர்களுக்காகவே அவன் பாதுகாவலனாகி விடுகிறான். ஆகவே நீங்கள் இறைவன் பக்கம் வாருங்கள். அவனோடுள்ள ஒவ்வோர் எதிர்ப்பையும் விட்டு விடுங்கள். அவனுக்குரிய கடமைகளை நிறைவேற்றுவதில் எவ்விதச் சோம்பலையும் காட்டாதீர்கள். அவனது படைப்பினங்களுக்கு நாவைக் கொண்டோ அல்லது கரங்களைக் கொண்டோ அநியாயம் செய்யாதீர்கள்.*

மேலும் வானத்தின் கோபத்திற்கும் ஆக்கினைக்கும் அஞ்சிக் கொண்டிருங்கள். இதுவே உங்களின் இரட்சிப்பிற்கான சரியான மார்க்கமாகும்.

---

** எந்த மனிதன் மனித சமுதாயத்தின் மீது கடுங்கோபத்தை வளர்ப்பானோ அவன் அக்கோபத்தினாலேயே அழிக்கப்படுவான். இதனாலேயே இறைவன் சூரா "பாத்திஹாவில்" யூதர்களுக்கு "மஃலூபி அலைஹிம்" என்று பெயர் சூட்டியுள்ளான். ஒவ்வொரு குற்றவாளியும் கியாமத் தென்னும் இறுதி நாளில் இறைவனது கோபத்தின் ருசியை நிச்சயம் சுவைத்துப் பார்ப்பான். ஆயினும் எவன் அநியாயமாக இவ்வுலகில் கோபப்படுவானோ அவன் இவ்வுலகிலேயே இறைவனது கோபத்தின் ருசியை சுவைத்து விடுகிறான் என்பதாக இதில் குறிப்பு உள்ளது.*

*இவ்வுலகில் யூதர்களை விட கிறிஸ்தவர்கள் மீது இறைவனது கோபம் உண்டாகவில்லை. இதன் காரணத்தால் "பாத்திஹா" அத்தியாயத்தில் அவர்களுக்கு "லால்லீன்" என்று பெயர் வைக்கப்பட்டுள்ளது "லால்லீன்" என்னும் சொல்லுக்கு இரு பொருள்கள் உள்ளன. ஒன்று அவர்கள் வழி கெட்டவர்களாவர். இரண்டாவது பொருள் இழந்து விடுபவர்கள் என்பதாகும். அதாவது ஏதாவதொரு சமயம்பொய்யான மதத்திலிருந்து இரட்சிப்புப் பெற்று இஸ்லாத்தில் மூழ்கி கொள்வார்கள் என்பதும் மேலும் படிப்படியாக இணை வைக்கும் கொள்கைகளையும், குறைபாடுகள், வெட்கக் கேடான பழக்க வழக்கங்கள் ஆகியவற்றையும் விட்டு விட்டு ஏக இறைவனை வணங்கக் கூடிய முஸ்லிம்களாகி விடுவார்கள் என்பதும் இதன் விளக்கமாகும். எனது கருத்தில் இது அவர்களுக்கு ஒரு நற்செய்தியாகும். சுருங்கச் சொல்லின் "பாத்திஹா" அத்தியாயத்தின் இறுதியில் வந்திருக்கும் "லால்லீன்" என்ற சொல்லின் "லலாலத்" என்பதற்கான இரண்டாவது விளக்கம் ஒருபொருள் மற்ற பொருள்மீது தன்னை அர்ப்பணிப்பதற்குச் சொல்லப்படுவதாகும். இது கிறிஸ்தவர்களின் இனி வரப்போகும் மார்க்க நிலையை குறித்த ஒரு முன்னறிவிப்பாகும் -நூலாசிரியர்.*





இஸ்லாமிய அறிஞர் பெருமக்களே! என்னை பொய்ப்படுத்துவதற்கு நீங்கள் அவசரப்படாதீர்கள். ஏனெனில் மனிதனால் விரைந்து புரிந்து கொள்ள முடியாத இரகசியங்கள் பெருமளவில் இருக்கின்றன. ஒரு விஷயத்தை செவிமடுத்த அதே சமயத்தில் அதனை நிராகரிக்கத் துணிந்து விடாதீர்கள். இது தக்வா என்னும் இறையச்சத்திற்குரிய வழி அல்ல. உங்களிடையே சில தவறுகள் உண்டாகாமலிருந்தால், நீங்கள் சில ஹதீதுகளின் பொருள்களை தவறாக புரியாதிருந்தால் தீர்ப்பு வழங்கக் கூடியவரான வாக்களிக்கப்பட்ட மஸீஹின் வருகையே வீணானதாக ஆகியிருக்கும். உங்களுக்கு முன்னால் நீங்கள் கற்றுக் கொள்ளவதற்குரிய ஒரு இடம் இருக்கிறது. அதாவது, எவ்விஷயத்தைப் பற்றி நீங்கள் வலியுறுத்தி வருகிறீர்களோ மேலும் எந்த இடத்தில் நீங்கள் உங்கள் பாதத்தை வைத்து வருகிறீர்களோ அதே இடத்தின் மீதே யூதர்களும் கால் வைத்து வந்தார்கள். அதாவது, நீங்கள் எவ்வாறு ஹஸ்ரத் ஈஸா (அலை) மீண்டும் வருவார்கள் என்று காத்திருக்கின்றீர்களோ அவ்வாறே அவர்களும் இல்யாஸ்(அலை) மீண்டும் வருவார் என்று எதிர்ப்பார்த்து வந்தனர். வானத்திற்கு உயர்த்தப்பட்ட இல்யாஸ் நபி மீண்டும் உலகத்திற்கு வந்த பின்பே மஸீஹ் வருவார் என்றும் மேலும் எவன் இல்யாஸ் மீண்டும் வருவதற்கு முன்னதாகத் தன்னை மஸீஹ் என்று வாதம் புரிவானோ அவன் பொய்யனாவான் என்றும் கூறி வந்தார்கள். அவர்கள் ஹதீதுகளின் படி மட்டும் இந்த எண்ணத்தை கடைப்பிடிக்கவில்லை. மாறாக மலாக்கி நபிக்கு அருளப்பட்ட தெய்வீக கிரந்தத்தையும் இதற்கு ஆதாரமாகக் காட்டி வந்தார்கள்.

ஆனால் ஹஸ்ரத் ஈஸா (அலை) யூதர்களின் வாக்களிக்கப்பட்ட மஸீஹாகத் தாம் தோன்றியிருப்பதாக வாதம் புரிந்தபோது அந்த வாதத்திற்கு நிபந்தனையாக இருந்த இல்யாஸ் நபி வானத்திலிருந்து இறங்காதபோது அந்த யூதர்களின் எல்லா நம்பிக்கைகளும் பொய்யாகிப் போனது நிரூபிக்கப்பட்டன. மேலும் இல்யாஸ் பூத உடலுடன் வானத்திலிருந்து இறங்குவார் என்ற அந்த யூதர்களின் எண்ணத்திற்கு மாறாக இல்யாஸின் குணத்திலும் பண்பிலும் யாராவது வேறொரு மனிதரே வெளிப்படுவார் என்ற பொருளே இறுதியில் தெளிவாயிற்று. இப்பொருளையே நீங்கள் வானத்திலிருந்து மீண்டும் இறக்க விரும்பும் ஹஸ்ரத் ஈஸா (அலை) அவர்கள் அளித்துள்ளார்கள். ஆகவே உங்களுக்கு முன் எந்த இடத்தில் யூதர்கள் தடுமாற்றம்

அடைந்தார்களோ அதே இடத்தில் நீங்களும் ஏன் தடுமாற்றம் அடைகிறீர்கள்? உங்களது நாட்டில் ஆயிரக்கணக்கான யூதர்கள் வாழ்ந்து வருகிறார்கள். இப்போது நீங்கள் கொண்டிருக்கும் இதே நம்பிக்கை யூதர்களின் நம்பிக்கையாக இருக்கவில்லையா? என்பதனை அவர்களிடம் கேட்டுப் பாருங்கள். ஆகவே இறைவன் ஹஸ்ரத் ஈஸாவுக்காக எலியா நபியை வானத்திலிருந்து இறக்கிக் கொடுக்கவில்லை. எனவே அதன் விளக்கத்தை யூதர்களுக்கு முன் வேறுவிதமாக விவரித்துக் காட்ட வேண்டிய நிலை அவருக்கு உண்டாயிருக்கும்போது நீங்கள் மீண்டும் இறக்கவிருக்கும் ஈஸாவை மட்டும் அவ்விறைவன் உங்களுக்கு எவ்வாறு இறக்கித் தருவான்? அவருடைய தீர்ப்பை நீங்கள் நிராகரிக்கக் கூடியவர்களாக இருக்கின்றீர்கள். உங்களுக்கு சந்தேகம் இருக்குமேயானால் இலட்சக்கணக்கான கிறித்தவர்கள் இந்நாட்டில் இருந்து வருகிறார்கள். அவர்களது பைபிளின் புதிய ஏற்பாடும் இருந்து வருகிறது. ஆகவே மீண்டும் வரவேண்டிய எலியா என்பவர் யோவானாகிய எலியாவே என்று ஈஸா கூறியது உண்மை இல்லையா? என்பதனை அவர்களிடம் கேட்டுப் பாருங்கள். ஹஸ்ரத் ஈஸா (அலை) இவ்விஷயத்தை வெளிப்படுத்தியதன் மூலம் யூதர்களின் பழைய விசுவாசங்களை தவிடுபொடியாக்கினார்கள். இப்போது ஹஸ்ரத் ஈஸா நபியோ வானத்திலிருந்து வரவேண்டியது அவசியமென்றால் அவர் உண்மையான நபியாக இருக்க முடியாது. ஏனெனில் வானத்திலிருந்து திரும்பி வருவது இறைவனது நடைமுறைக்கு உட்பட்டது என்றால் இல்யாஸ் நபி மீண்டும் வராததேன்? மேலும் இந்த இடத்தில் யஹ்யாவை இல்யாஸாக தீர்மானித்து விவரிக்க வேண்டியநிலை உணடானதேன்? அறிவாளிகளுக்கு இது சிந்தனைக்குரிய ஒரு இடமாகும்.

மேலும் உங்களின் நம்பிக்கையின்படி, மஸீஹ் இப்னுமர்யம் வானத்திலிருந்து எந்த வேலைக்காக இறங்கி வருவாரோ அதாவது மஹ்தியுடன் சேர்ந்து மக்களைப் பலவந்தமாக முஸ்லிம்களாக் குவதற்காக போர் புரிவார். இந்த நம்பிக்கை இஸ்லாத்திற்கு கெட்ட பெயரை உண்டாக்குகிறது. மார்க்கத்தில் பலவந்தம் கூடும் எனத் திருக்குர்ஆனில் எங்கு இடம் பெற்றுள்ளது? இதற்கு மாறாக இறைவன் திருக்குர்ஆனில் "லா இக்ராஹ ஃபித்தீன்" என்று கூறுகிறான். அதாவது, மார்க்கத்தில் பலவந்தம் இல்லை என்பதாகும். (திருக்குர்ஆன் 2:257) இவ்வாறிருக்க பலவந்தத்திற்குரிய அதிகாரம் மஸீஹ் இப்னு மர்யமுக்கு





எவ்வாறு அளிக்கப்படும்? (மக்களை) இஸ்லாத்தை ஏற்றுக் கொள்ளச் செய்தல் அல்லது (அவர்களை) கொலை செய்தல் என்பதைத் தவிர "ஜிஸ்யா" என்னும் வரியையும் (ஈஸாவாகிய அவர்) ஏற்றுக்கொள்ளமாட்டாராம். இப்போதனை திருக்குர்ஆனில் எந்த இடத்தில் எந்த பாகத்தில் எந்த அதிகாரத்தில் இடம் பெற்றிருக்கிறது.*

மார்க்கத்தில் பலவந்தம் இல்லை என்று திருக்குர்ஆன் முழுவதும் திரும்பத் திரும்ப கூறிக் கொண்டிருக்கிறது. மேலும் திரு நபி (ஸல்) அவர்களது காலத்தில் எவர்களோடு போர்கள் புரியப்பட்டனவோ அந்த போர்களெல்லாம் மார்க்கத்தை பலவந்தமாய்ப் பரப்புவதற்காகப் புரிய பட்டவை அல்ல; மாறாக முஸ்லிம்களுக்கு அநியாயம் செய்த அந்த நிராகரிப்பாளருக்கு தண்டனை வழங்கும் பொருட்டே நடந்தன. அதாவது எவர்கள் முஸ்லிம்களின் பெரும்பாலானவர்களைக் கொலை செய்தார்களோ சிலரை நாட்டைவிட்டு வெளியேற்றினார்களோ மிகவும் கொடூரமான அநியாயங்களை செய்தார்களோ அவர்களுக்குத் தக்க தண்டனை கொடுக்கவே முஸ்லிம்கள் அனுமதிக்கப்பட்டார்கள் எனத் திருக்குர்ஆன் தெளிவாகக் கூறுகிறது. இதைப்பற்றி இறைவன் கூறுவதாவது:

** பலவந்தமாக முஸ்லிம்களாக்க வேண்டும் என்பது அரபிகளுக்கும் கட்டளை இருந்தது என்று நீங்கள் சொல்வீர்களானால் அது திருக்குர்ஆனிலிருந்து ஒருபோதும் நிரூபணமாகவில்லை. மாறாக முழு அரபு நாடு ஹஸ்ரத் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களுக்கு கொடியது ன்பங்களைக் கொடுத்து வந்தது. ஸஹாபாக்களில் ஏராளமான ஆண்களும் பெண்களும் கொலை செய்யப்பட்டனர். வாளின் தாக்குதளிலிருந்து தப்பியவர்கள் நாட்டை விட்டு வெளியேற்றப்பட்டார்கள். இதனால் கொலை குற்றத்திற்குரியவர்களும் அல்லது அக்குற்றத்திற்கு துணையாக இருந்த அனைவரும் இறைவனது பார்வையில் அவர்கள் செய்த கொலைக்குப் பதிலாக அவர்களே கொலைத் தண்டனைக்குத் தகுதியுள்ளவர்களாக இருந்தனர். பழிக்குப் பழி என்ற நிலையில் அவர்களுக்குச் சரியான தீர்ப்பு அவர்களை கொலை செய்வதேயாகும். ஆனால் அவர்களில் யாரேனும் முஸ்லிம்களாகிவிட்டால் அவரது சென்றுபோன குற்றத்திற்காக அவர் மரண தண்டனைக்குத் தகுதியுள்ளவராக இருந்தாலும் அவர் மன்னிக்கப்படுவார் என கருணை காட்டுபவர்களில் மிகச் சிறந்த கருணை காட்டுபவனாகிய இறைவனிடமிருந்து இந்த சலுகை வழங்கப்பட்டது. இது குர்ஆனிலிருந்து நிரூபணமாகிறது. ஆகவே கருணை என்ற இந்நிலை எங்கே? பலாத்காரம் எங்கே? - நூலாசிரியர்*

"உஸின லில்லஸீன யுகாத்தலூன பி அன்னஹூம் லுலிமூ. வ இன்னல்லாஹ அலா நஸ்ரிஹிம் லகதீர்" *(திருக்குர்ஆன் 22:40)*

பொருள்: எந்த முஸ்லிம்களோடு நிராகரிப்பாளர்கள் போர் புரிகிறார்களோ அவர்களுக்கு அநீதி இழைக்கப்பட்ட காரணத்தால் அந்நிராகரிப்பாளர்களை எதிர்க்க அவர்களுக்கு அனுமதி வழங்கப்பட்டிருக்கிறது. அவர்களுக்கு உதவி புரிவதில் இறைவன் வல்லமையுள்ளவனாய் இருக்கிறான்.

அல்லது அவை தற்காப்புக்காக வேண்டி செய்யப்பட்ட போர்களாகும். அதாவது, எவர்கள் இஸ்லாத்தை அழித்தொழிப்பதற்காக படை எடுத்து முந்திக் கொண்டார்களோ அவர்களுக்கு எதிராகவும் அல்லது எவர்கள் தமது நாட்டில் இஸ்லாம் பரவுவதைப் பலவந்தமாய்த் தடை செய்தார்களோ அவர்களோடு தங்களது உரிமையைப் பாதுகாப்பதற்காகவும் அல்லது நாட்டில் சுதந்திரத்தை நிலை நாட்டுவதற்காகவும் இஸ்லாத்தின் ஆரம்பகாலத்தில் போர்கள் புரியப்பட்டன.

இம்மூன்று வகைகளைத் தவிர திரு நபி (ஸல்) அவர்களும் அவர்களது பரிசுத்த கலீஃபாக்களும் எவ்வித போரும் புரியவில்லை. மேலும் இஸ்லாம் பிற வகுப்பினரால் இழைக்கப்பட்ட அநியாயங்கள் மீது மிகுதியான அளவில் பொறுமையைக் கடைபிடித்து வந்திருக்கின்றது. இதன் முன் மாதிரியை பிற சமுதாயத்தார்களிடம் நம்மால் காணவே முடியாது. இவ்வாறிருக்க இந்த ஈசா மஸீஹும் மஹ்தி சாஹிபும் வந்ததுமே மக்களை எவ்வாறு கொன்று குவிக்கக்கூடியவராக இருப்பார்? மேலும் அவர்கள் வந்ததுமே வேதம் அளிக்கப்பட்டவர்களிடமிருந்து "ஜிஸ்யா" என்னும் வரி ஏற்றுக் கொள்ள மாட்டார்களாம். மேலும் "ஹத்தா யுஃதுல் ஜிஸ்யத்த அய்யதீன் வஹூம் ஸாகிரூன்" (திருக்குர்ஆன் 9:29) பொருள்: அவர்கள் தங்கள் விருப்பத்துடன் ஜிஸ்யா (கப்பம்) கட்டி உங்களுக்குப் பணிந்து விடும்வரை போர் புரியுங்கள். (அதாவது பணிந்து விட்டால் போரை நிறுத்தி விடுங்கள்) என்ற திருவசனத்தையும் இவர்கள் ரத்து செய்து விடுவார்களா? திருநபி (ஸல்) அவர்களது காலத்தில் கூட ரத்து செய்யப்படாத குர்ஆனின் இவ்வசனங்களை, வந்ததுமே ரத்து செய்யும் ஈஸா மஸீஹ் (மஹ்தியாகிய) இவர்கள் இஸ்லாம் மார்க்கத்திற்கு எவ்வாறு துணை புரியக் கூடியவர்களாக ஆக முடியும்? இவர்கள்





செய்யும் இப்பெரும் புரட்சியானால் "கத்மே நுபுவ்வத்திற்கு" எவ்வித பாதிப்பும் உண்டாக மாட்டாதாம்.

நுபுவ்வத்தின் காலம் கடந்து 1300 ஆண்டுகள் ஆகிவிட்ட இக்காலத்தில் இஸ்லாத்திற்குள்ளேயே 73 பிரிவுகள் உண்டாகியிருக்கையில் உண்மையான மஸீஹ் வந்து செய்ய வேண்டிய வேலை வாளைக் கொண்டு அல்லாமல் ஆதாரங்களைக் கொண்டு உள்ளங்களை வெல்ல வேண்டியதாகும். மேலும் வெள்ளி, தங்கம், பித்தளை, மரம் இவைகளைக் கொண்டு உருவாக்கப்படும் சிலுவைகளை உடைத்துக் கொண்டு திரிவதற்குப் பதிலாக அச்சிலுவைகளின் மீதுள்ள கொள்கையை, சரியான, உண்மையான ஆதாரங்களைக் கொண்டு உடைப்பதுமேயாகும்

நீங்கள் பலவந்தத்தை உபயோகிப்பீர்களேயானால் உங்களது உண்மைக்கு எவ்வித ஆதாரமும் உங்களிடம் இல்லை என்பதற்கு இந்த பலாத்காரமே போதுமான ஒரு அத்தாட்சியாகும்.* எப்போது ஒவ்வொரு

** இவர் ஆங்கிலேயர் ஆளும் நாட்டில் இருந்து வருவதால் "ஜிஹாத்" என்னும் புனிதப் போர் செய்வதைத் தடை செய்கிறார் என்று "மனார்" என்னும் பத்திரிகையின் ஆசிரியர் ஆட்சேபனை செய்ததுபோல் சில அறிவீனர்கள் என் மீது ஆட்சேபனை செய்கிறார்கள். நான் பொய்யாக இந்த அரசை திருப்தி செய்யக் கூடியவனாக இருந்தால் ஈசப்னு மர்யம் சிலுவையிலிருந்து இரட்சிப்புப் பெற்று காஷ்மீரிலுள்ள ஸ்ரீ நகரில் இயற்கையாக மரணம் அடைந்தார் என்றும் அவர் தேவனும் அல்லர் தேவகுமாரனும் அல்லர் எனத் திரும்பத் திரும்ப ஏன் கூறவேண்டும்? என்பதை இந்த அறிவீனர்கள் அறிய மறுக்கிறார்கள். மாக்கத்தில் ஆவேசமாக இருக்கின்ற ஆங்கிலேயர்கள் எனது இக்கூற்றைக் கண்டு என்னை வெறுக்க மாட்டார்களா? ஆகவே கேளுங்கள். அறிவீனர்களே! நான் இந்த அரசை ஒன்றும் புகழவில்லை. இதில் உண்மையென்னவென்றால் இஸ்லாம் மார்க்கத்திலும் அதன் பழக்க வழக்கங்களிலும் அது சிறிதளவும் தலையிடுவதில்லை. அது தனது சொந்த மதத்தை முன்னேறச் செய்வதற்காக நம்மீது ஆயுதங்களை பிரயோகிப்பதில்லை. அது மார்க்கத்திற்காக எவ்வித போரும் புரியதாததனால் திருக்குர்ஆனின் கூற்றுப்படி நாம் இவ்வாறான அரசோடு போர் புரிவதென்பது விலக்கப்பட்டிருக்கிறது. ஏனெனில் இந்த அரசும் எந்த மார்க்கப் போரும் செய்வதில்லை. மேலும் அவர்களது நாட்டில் நாம் நமது பணிகளை தடையின்றி செய்து வருவது போல் மக்காவிலும் மதீனாவிலும் நாம் செய்யமுடியாது. ஆகவே நாம் அவர்களுக்கு நன்றி*

அறிவீனனும் நெறிதவறியவனும் எவ்வித ஆதாரமும் காட்ட முடியாமல் தோல்வியை காண்பானோ அப்போதே அவன் வாள் அல்லது துப்பாக்கியின் பக்கம் தனது கரங்களை நீட்டுகிறான். ஆனால் வேறு வழி இல்லாமல் வாளின் உதவியைக் கொண்டு பரவக் கூடிய ஒரு மதமானது ஒருபோதும் இறைவன் புறமிருந்து வந்திருக்க முடியாது. நீங்கள் இவ்வாறான "ஜிஹாத்" என்னும் அறப்போரை கைவிடாமல் அதன் மீது ஆவேசமுற்று உண்மையாளருக்குத் "தஜ்ஜால்" (பொய்யன்) "முல்ஹித்" (மார்க்கமிழந்தவன்) என்று பெயர் சூட்டுவீர்களேயானால் பின்னர் நாம் "குல்யா அய்யுஹல் காஃபிரூன் லா அஃபுது மாதஃபுதூன்" அதாவது: கூறுவீராக நிராகரிப்பாளர்களே! நீங்கள் வழிபடும் விதத்தில் நான் வழிபடமாட்டேன். *(திருக்குர்ஆன் 109:2,3)* என்னும் இவ்விரண்டு வசனங்களைக் கொண்டு இவ்வுரையை நாம் முடித்துக் கொள்கிறோம்.

உங்களிடையே வேற்றுமையும் விரோதமும் இருந்து வரும் இக்காலத்தில் உங்களது போலி மஸீஹும் போலி மஹ்தியும் யாரையெல்லாம் வாளால் தாக்குவார்கள்? சுன்னிகள் கருத்தின்படி ஷியாக்கள் வாளால் தாக்கப்படுவதற்குத் தகுதியுள்ளவர்களில்லையா?

*செலுத்த வேண்டியது அவசியமேயாகும். என்னை இந்நாட்டில் படைத்திருப்பது இறைவன் புறமிருந்துள்ள ஒரு ஞானமாக இருந்தது. ஆகவே நான் இறைவனது ஞானத்தை அவமதிக்க வேண்டுமா?*

*"வ ஆவைனா ஹுமா இலா ரப்வத்தின் தாதி கராரிவ்வமயீன்" (திருக்குர்ஆன் 23:51) என்னும் இந்த வசனத்தின் மூலம் அல்லாஹ் நமக்கு புரிய வைப்பதாவது, சிலுவை சம்பவத்திற்குப் பின்னர் நாம் ஈஸா மஸீஹை சிலுவையின் ஆபத்திலிருந்து பாதுகாத்து அவரையும் அவரது தாயாரையும் நீரூற்றுகள் நிரம்பிய உயர்ந்ததொரு குன்றின் மீது நாம் அடைக்கலம் அளித்தோம். அது தங்குவதற்கேற்ற வசதியான ஒரு இடமாகும். அதாவது இங்கு கூறப்பட்டுள்ள இடம் இயற்கை வளம் நிரம்பிய காஷ்மீரிலுள்ள ஸ்ரீ நகராகும்.*

*இவ்வாறு எனக்கு இறைவன் குழப்பக்காரர்களின் கரங்கள் எட்ட முடியாத இந்த அரசாகிய இவ்வுயர்ந்த குன்றின் மீது இடம் அளித்துள்ளான். அது தங்குவதற்கேற்ற வசதியான ஒரு இடமாகும். இந்நாட்டில் உண்மையான ஞானங்களின் ஊற்றுகள் ஓடிக் கொண்டிருக்கின்றன. மேலும் குழப்பக்காரர்களின் தாக்குதல் களிலிருந்தும் நமக்குச் சாந்தியும் அடைக்கலமும் கிடைத்து வருகிறது. இப்படியிருக்கும் போது நாம் இந்த அரசின் நன்மைகளுக்கெல்லாம் நன்றி செலுத்த வேண்டியது நமது கடமையில்லையா? - நூலாசிரியர்.*





ஷியாக்களின் கருத்தின்படி சுன்னிகள் அனைவரும் வாளால் அழிக்கப்படுவதற்குத் தகுதியுள்ளவர்களில்லையா? ஆகவே உங்களின் நம்பிக்கையின்படி உங்களிலுள்ள பிரிவினர்களே தண்டனைக்குத் தகுதியுள்ளவர்களாகயிருக்கையில் நீங்கள் யார் யாரிடமெல்லாம் ஜிஹாத் செய்வீர்கள்? ஆனால் இறைவனுக்கு வாள் தேவை இல்லை என்பதனை நினைவில் கொள்ளுங்கள். அவன் தனது மார்க்கத்தை வானத்தின் அடையாளங்களைக் கொண்டு பூமியின் மீது பரவச் செய்வான். அதனை எவராலும் தடை செய்யவே முடியாது.

இனி ஹஸ்ரத் ஈசா (அலை) ஒருபோதும் வானத்திலிருந்து இறங்கி வரமாட்டார் என்பதை நீங்கள் ஞாபகம் வையுங்கள். ஏனெனில் "ஃபலம்மா தவப்ஃபைத் தனீ" (பொருள்: எப்போது நீ என்னை மரணிக்கச் செய்தாயோ - திருக்குர்ஆன் 5:118) என்ற திரு வசனத்தின் மூலமாக கியாமத்தென்னும் இறுதிநாளில் அவர் கொடுக்க இருக்கும் ஒப்புதல் வாக்குமூலத்தில் மீண்டும் இவ்வுலகிற்கு அவர் வரமாட்டார் என்பதை அவர் ஒப்புக் கொண்டிருப்பது தெளிவாக காணப்படுகிறது. மேலும் கிறித்தவர்கள் கெட்டழிந்து போனதைக் குறித்து நான் ஒன்றும் அறியேன் என்பதே இறுதி நாளில் தம் வாயால் அவர் கூறும் காரணமாகும். அவர் கியாமத்துக்கு முன் உலகிற்கு வந்திருந்தால் கிறித்தவர்கள் கெட்டுப் போனதைக் குறித்து நான் ஏதும் அறியேன் என்ற இப்பதிலையா அவர் அளித்திருப்பார்? இதனால் அவர் மீண்டும் உலகிற்குப் போகவில்லை என்பதை இத்திருவசனம் மூலமாக அவர் தெளிவாக ஒப்புக் கொண்டிருக்கிறார்.

மேலும் அவர் கியாமத்துக்கு முன் வரக்கூடியவராகவும் சரியாக நாற்பது ஆண்டுகள் (ஆட்சி புரிபவராகவும்) இருந்தால் எனக்கு கிறிஸ்தவர்களின் நிலைமைகள் பற்றி ஒன்றுமே தெரியாது என்று கூறுவதென்பது இறைவன் முன்னால் அவர் பொய் கூறியதாகிவிடும். இதற்கு மாறாக எனது இரண்டாவது வருகையின் போது ஏறக்குறைய நாற்பது கோடி கிறிஸ்தவர்கள் உலகில் இருந்தார்கள். அவர்கள் அனைவரையும் கண்டேன். அவர்கள் கெட்டுப் போனதைக் குறித்து நான் நன்றாய் அறிவேன். எல்லா கிறிஸ்தவர்களையும் முஸ்லிம்களாக ஆக்கியதில் நான் சன்மானம் பெற தகுதியுள்ளவனாய் இருக்கிறேன். சிலுவைகளை உடைத்தேன் என்றெல்லாம் அவர் கூறியிருக்க வேண்டும். நான் ஏதும் அறியேன் என்று ஈசா கூறுவது பெரும் பொய்யாகிவிடும். சுருங்கச் சொல்லின் முதல் மஸீஹ் மீண்டும்

உலகிற்கு வரமாட்டார் என்பதை இத்திருவசனத்தின் மூலம் அவர் மிக தெளிவாக ஒப்புக் கொண்டிருக்கிறார். மேலும், அவர் மரணமடைந்து விட்டார் என்பதே உண்மையாகும்.* மேலும் ஸ்ரீ நகர் மஹல்லா

** தெற்கு இத்தாலியில் மிகவும் பிரசித்தி பெற்ற "கரெய்யர் டலாஸீரா" என்ற பெயருள்ள ஓர் ஏடு ஆச்சரியமான செய்தியொன்றை பிரசுரித்திருக்கிறது. 1879ம் ஆண்டு ஜுலை மாதம் 13ந்தேதி ஜெரூஸலத்தில் குர்மரா என்ற பெயருள்ள ஒரு வயோதிக சன்னியாசி ஒருவர் தனது வாழ்நாளில் புகழ்பெற்ற இறை நேசராக இருந்தார். அவர் தனக்குப் பின் சில சொத்துக்களை விட்டுப் போனார். அந்நாட்டு ஆளுனர் அவருடைய உறவினர்களைத் தேடிப்பிடித்து இரண்டு லட்சம் பிரேங்க் (அதாவது 1,18,750/- ரூபாய்) அவர்களிடம் ஒப்படைத்தார். இதில் பல நாடுகளின் நாணயங்களும் இருந்தன. அச்சன்னியாசி நீண்ட காலமாக இருந்து வந்த குகையிலிருந்து இவை பெறப்பட்டன. மேலும் அப்பணத்துடன் சில காகிதங்களும் அந்த உறவினர்களுக்குக் கிடைத்தன. ஆனால் அவற்றை அவர்களால் படிக்க முடியவில்லை. இப்ரானி மொழி அறிந்திருந்த சில பண்டிதர்களுக்கு அக்கடிதங்களை வாசிக்கக் கூடிய சந்தர்ப்பம் கிடைத்தது.*

*அக்கடிதங்கள் மிகவும் பழமையான இப்ரானி மொழியில் இருப்பதைக் கண்டு ஆச்சரியப்பட்டார்கள். அவர்கள் அவற்றை படித்த போது அவற்றில் பின்வரும் வாக்கியங்கள் இடம் பெற்று இருந்தன.*

*மர்யத்தின் குமாரரான மஸீஹ் (இயேசு)வின் ஊழியனும் மீனவருமாகிய பேதுரு என்கிற நான் இறைவனது நாமத்திலும் அவனது விருப்பத்தின்படியும் கூறுகிறேன் எனத் தொடங்கும் அக்கடிதம் பின்வருமாறு முடிவடைகிறது.*

*"பேதுரு மீனவனாகிய நான் மஸீஹ் (இயேசு)வின் பெயரில் என் 90-வது வயதில் எனது எஜமானனும் தலைவருமாகிய மர்யத்தின் குமாரனாகிய யஸூஹ் மஸீஹ் (இயேசு மஸீஹ்) உடைய மரணத்திற்கு மூன்று ஃபஸஹ் பெருநாளைக்குப் பின் (மூன்று ஆண்டுகளுக்கு பின்னர்) இறைவனுடைய பரிசுத்த வீட்டுக்கு சமீபம் போலீர் என்னும் இடத்தில் இந்த அன்பு நிறைந்த சொற்களை எழுத முடிவு செய்தேன்."*

*இக்குறிப்பு பேதுருவின் காலத்திலுள்ளவை என அப்பண்டிதர்கள் முடிவு செய்துள்ளார்கள். லண்டன் பைபிள் ஸொஸைட்டியின் கருத்தும் இதுவேயாகும். அவற்றை நன்றாய் பரிசோதித்த பின்னர் பைபிள் ஸொஸைட்டி இதற்கு நான்கு லட்சம் லேரா அதாவது ரூபாய். 2,37,500/- அதன் உரிமையாளருக்குக் கொடுத்து அக்கடிதங்களை வாங்க விரும்பியது.*





கான்யாரில் அவரது கல்லறை இருக்கிறது.* இனி இறைவன் தானாக இறங்கி வருவான். சத்தியத்தோடு போர் புரியும் மக்களை எதிர்த்து அவனே போர்புரிவான். இறைவன் சண்டை செய்வதென்பது ஆட்சேபத்திற்குரியதொன்றல்ல. ஏனெனில் அது அடையாளங்களை கொண்டதாய் அமைந்திருக்கும். ஆனால் மனித சண்டை செய்வதோ ஆட்சேபணைக்குரியதாகும். ஏனெனில் அது பலாத்காரத்தை கொண்டதாகும்.

## ஒரு இஸ்ரவேலரின் சாட்சியம்

மஸீஹின் அடக்கஸ்தலத்தைப் பற்றி தவ்ராத் வேதத்தின் ஒரு இஸ்ரவேல் பண்டிதரின் சாட்சியம்:-

*மர்யத்தின் குமாரரான இயேசு (இவ்விருவர் மீது சலாம் உண்டாவதாக) அவர் கூறியதாவது.*

*என் இறைவா! நான் எதனை தீமையாகக் கருதுகின்றேனோ, அதனை வெல்லுவதற்கு நான் தகுதியுள்ளவன் அல்லன். மேலும் நான் விரும்பிய நன்மையை என்னால் பெறமுடியவில்லை. ஆனால் மற்றவர்கள் தங்களது பிரதிபலனைத் தங்களது கரங்களிலேயே வைத்துக் கொண்டிருக் கிறார்கள். ஆனால் நான் அவ்வாறு இல்லை. ஆயினும் எனது பெருமை எனது வேலையிலேயே இருக்கிறது. என்னைவிட மோசமான நிலையிலுள்ள வேறொரு மனிதன் இல்லை.*

*இறைவா! எல்லோரையும் விட உன்னத நிலையில் இருந்து வரக் கூடிய நீ எனது பாவத்தை மன்னித்தருள்வாயாக.*

*இறைவா! நான் எனது பகைவர்களின் குற்றச்சாட்டுகளுக்கு காரணமுள்ளவனாய் இருக்குமளவுக்கு நீ என்னை ஆக்கிவிடாதே! நீ என்னை எனது நண்பர்களின் பார்வையில் இழிவுள்ளவனாய் ஆக்கிவிடாதே! எனது இறையச்சம் என்னைத் துன்பங்களில் ஆழ்த்தி விடக் கூடாது. இந்த உலகமே எனது பெரும் ஆசைக்குரிய இடமாகவும் எனது குறிக்கோளாகவும் ஆக்கிவிடாதே! மேலும் என் மீது கருணை காட்டாத மனிதனை என் மீது ஆதிக்கம் செலுத்துபவனாக ஆக்கிவிடாதே!*

*கருணைக் கடலான என் இறைவா! உனது கருணைக்காக வேண்டி நீ அவ்வாறே செய்தருள்வாயாக. மேலும் நீயோ உனது கருணை தேவைப்படக் கூடிய அனைவர் மீதும் நீ கருணைக் காட்டக் கூடியவனாய் விளங்குகின்றாய்.*

** ஸ்ரீநகரில் இருக்கும் கல்லறையானது யூதர்களின் நபிமார்களின் கல்லறை போன்று உண்டாகக்கப்பட்டிருப்பதாக ஒரு யூதரும் அதை உறுதிப்படுத்திக் கூறியுள்ளார்.*

மிர்ஸா குலாம் அஹ்மத் காதியானி வசம் நான் கண்ட சித்திரமும் ஆராய்ச்சியும் அவை உண்மையானவையே என்பதற்கு நான் சாட்சியம் அளிக்கிறேன். அந்தக் கல்லறை இஸ்ரவேலர்களுடையதைப் போலிருக்கிறது. இஸ்ரவேலர்களின் தலைவர்களின் கல்லறைகள் இவ்வாறே காணப்படுகின்றன.

எனது சாட்சியத்தை எழுதிய போது அவ்வடக்கஸ்தலத்தின் சித்திரத்தை நான் பார்த்தேன். (ஆங்கில ஆண்டு 1899 ஜூன் மாதம் 12-ம் நாள்)

ஸல்மான்யூசுப் யஸ்ஹாக் தாஜீர்

யூதரான ஸலமான் என்பவர் என் முன்னிலையில் இந்த சாட்சியத்தை எழுதினார்.

முஃப்தி முஹம்மத் ஸாதிக் பேஹர்வி கிளார்க் அக்கவுண்ட்டென்ட் ஜெனரல் அலுவலகம், (எழுத்தர் மாநில கணக்காய்வுத் தலைவர் அலுவலகம்) லாஹூர்.

“அஷ்ஹது பில்லாஹி இன்ன ஹாதல் கிதாப்ப கதபஹு ஸல்மான் இப்னி யூசுஃப் வ இன்னஹு ரஜுலும் மின் அக்காபிர பனீ இஸ்ராயீல்”

ஒப்பம்: செய்யத் அப்துல்லாஹ் பக்தாதி.

மொழி பெயர்ப்பு: நிச்சயமாக இந்த எழுத்து ஸல்மான் பின் யூசுஃப் அவர்களால் எழுதப்பட்டதாகும். மேலும் நிச்சயமாக அவர் இஸ்ரவேலர்களின் தலைவர்களைச் சார்ந்த ஒருவர் என்பதாக இறைவனைக் கொண்டு நான் சாட்சியம் அளிக்கிறேன்.

ஒப்பம்: செய்யது அப்துல்லாஹ் பக்தாதி

மௌலவிகளை நினைக்கும் பொழுது அவர்கள் மீது பரிதாபமே ஏற்படுகின்றது. அவர்களிடையே நேர்மை காணப்படுமானால் தக்வா என்னும் இறையச்சத்திற்குரிய வழியைக் கடைப்பிடிப்பதன் மூலம் ஒவ்வொரு விதத்திலும் தங்களை திருப்திப் படுத்தியிருப்பார்கள். இறைவன் நல்ல ஆன்மாக்களை திருப்திப்படுத்தியுள்ளான். ஆனால் அபூஜஹிலின் மண்ணால் படைக்கப்பட்ட மக்கள் அபூஜஹிலால் ஏற்றுக் கொள்ளப்பட்ட அவ்வழியையே மேற்கொள்கிறார்கள். மீரட்டிலிருந்து ஒரு மவ்லவி சாஹிப் பதிவுத் தபால் மூலமாக அனுப்பியுள்ள ஒரு கடிதத்தில் அமர்தசரஸில் நத்வத்துல் உலமா





என்னும் ஆலிம்களின் மாநாடு நடைபெறுவதால் அங்கு வந்து வாக்குவாதம் செய்ய வேண்டும் என்று அறிவித்திருக்கிறார்.

அறிவீர்களாக! அவ்விரோதிகளுக்கு நல்லெண்ண மிருக்குமாயின் மேலும் வெற்றி தோல்வியைப் பற்றிய எண்ணம் அவர்களுக்கு இல்லாமலிருந்தால் அவர்கள் தங்களைத் திருப்திபடுத்துவதற்காக வேண்டி நத்வா போன்றவர்களின் தேவை எதற்கு? நாம் நத்வாவின் ஆலிம்களை அமிர்தசரஸின் ஆலிம்களிலிருந்து வேறுபட்டவர்களாக நினைக்கவில்லை. அவர்கள் ஒரே நம்பிக்கை ஒரே இனம் ஒரே அடிப்படையைக் கொண்டவர்களாகவே இருக்கின்றார்கள். காதியானுக்கு வருகை தருவதில் ஒவ்வொருவருக்கும் உரிமையுண்டு. ஆனால் வாக்குவாதத்திற்காக அல்லாமல் உண்மையை அறிய வேண்டும் என்ற நோக்கத்திற்காக மாத்திரமே வரவேண்டும். நாங்கள் ஆற்றும் உரைகளை அவர்கள் கேட்கட்டும். சந்தேகம் இருக்குமானால் பணிவு மரியாதை இவற்றின் வழிமுறைகள் மூலம் தங்களது சந்தேகங்களை நிவர்த்தி செய்து கொள்ளட்டும். அவர்கள் காதியானில் தங்கும் வரை அவர்கள் நமது விருந்தாளியாகவே கருதப்படுவார்கள். ஆகவே எங்களுக்கு நத்வா போன்றவர்களின் அவசியமுமில்லை. மேலும் அவர்களின் பக்கம் நாம் செல்ல வேண்டிய தேவையுமில்லை. இவர்கள் அனைவரும் உண்மைக்குப் பகைவர்களாவர்.

ஆயினும் உண்மை உலகில் பரவிக் கொண்டே போகிறது. இறைவன் இன்றிலிருந்து இருபது ஆண்டுகளுக்கு முன்னர் பறாஹீனே அஹ்மதிய்யாவில் தனது வெளிப்பாட்டின் மூலம் மக்கள் உம்மை தோல்வி அடையச் செய்ய பெரும் முயற்சி எடுத்துக் கொள்வார்கள். அதற்காக அவர்கள் முழு மூச்சுடன் செயல்படுவார்கள். என்றாலும், இறுதியில் நான் உம்மை பெரும் சமுதாயமாக உருவாக்குவேன் என்று வெளிப்படுத்தியுள்ளது இறைவனின் மாபெரும் அற்புதமில்லையா? இது என்னோடு ஒரு மனிதனும் இல்லாத காலத்திலுள்ள இறைவெளிப்பாடாகும். பின்னர் எனது வாதம் வெளிவந்ததும் விரோதிகள் அதற்கு விரோதமாக முழு மூச்சுடன் முனைந்து செயல்பட்டனர். இறுதியில் மேலே குறிப்பிட்ட முன்னறிவிப்பின் படி இந்த இயக்கம் பரவி விட்டது. மேலும் இன்று வரை அது பிரிட்டிஷ் இந்தியாவில் ஒரு லட்சத்தை விடச் சிறிது அதிகம் மக்களைக் கொண்டதாய்ப் பெருகி வளர்ந்துள்ளது.

நத்வத்துல் உலமாவிற்கு மரணத்தைப் பற்றிய ஞாபகம் இருக்குமேயானால் பராஹீனே அஹ்மதிய்யாவையும் அரசு காகிதங்களையும் பார்த்து விட்டு இது அற்புதமா? இல்லையா? என்று கூறட்டும். மேலும் திருக்குர்ஆனும் அற்புதமும் ஆகிய இவ்விரண்டும் எடுத்துக் காட்டியிருக்கும்போது எந்த நோக்கத்திற்காக இப்போது வாக்குவாதம் செய்ய வேண்டும்.

இவ்வாறே இந்நாட்டிலுள்ள ஷேக்மாரும் பீர்மாரும் அவர்களது சீடர்களும் மார்க்கத்தோடு சம்பந்தமில்லாமல் பித்அத் என்னும் தங்களது நவீன (தீய) பழக்க வழக்கங்களில் இரவு பகலாக மூழ்கிக் கிடக்கின்றனர். அவர்களுக்கு இஸ்லாத்தின் கஷ்டநஷ்டங்களைப் பற்றியோ ஆபத்துக்களைப் பற்றியோ எவ்வித அக்கறையும், அறிவும் இருப்பதில்லை. அவர்களின் கூட்டங்களுக்கு நீங்கள் செல்வீர்களேயானால் குர்ஆன் ஹதீதுகளுக்குப் பதிலாக விதவிதமான வீணை வாத்தியங்களையும், மேளதாளம், பாட்டு கச்சேரி முதலான பித்அத் என்னும் நவீன பழக்க வழக்கங்களையே நீங்கள் காண்பீர்கள். இவ்வாறு இருந்தும் அவர்கள் முஸ்லிம்களின் ஆன்மீக தலைவர் என்று கூறிக்கொள்வதோடு எம்பெருமானார் (ஸல்) அவர்களைப் பின் பற்றியவர்களாகப் பெருமைப்பட்டுக் கொள்கிறார்கள். மேலும் அவர்களில் சிலர் பெண்களின் உடைகளை அணிந்து கொள்கிறார்கள். கரங்களில் மருதோன்றியை பூசிக் கொள்கிறார்கள். வளையல்களை அணிந்து கொள்கிறார்கள். தங்களது கூட்டங்களில் திருக்குர்ஆனை விட கவிதைகளைப் படிப்பதையே பெரிதும் விரும்புகிறார்கள். எனவே இது அகன்று விடும் என்று எண்ண முடியாத அளவிற்கு பழமையான கறையாகும். இருப்பினும் இறைவன் தனது வல்லமைகளை வெளிப்படுத்துவான். மேலும் இஸ்லாத்திற்குப் பாதுகாவலனாகவும் இருப்பான்.





## பெண்களுக்கு சில அறிவுரைகள்

இக்காலத்தில் நமது பெண்களிடம் பித்அத் என்னும் நவீன பழக்க வழக்கங்களின் மூழ்கிக் கிடக்கின்றனர். அவர்கள், பலதார மணத்தைப் பற்றிய விஷயத்தை மிகத் தீய கண்ணோட்டத்துடன் பார்க்கிறார்கள். அதனைப் பற்றி அவர்களுக்கு நம்பிக்கையில்லை என்றே கூறவேண்டும். இறைச் சட்டம் தன்னுள் எல்லாவிதமான சிகிச்சைமுறைகளையும் கொண்டுள்ளது என்பதனை அவர்கள் அறியவில்லை. இஸ்லாத்தில் பலதார மணத்தைப் பற்றிய விஷயம் இடம் பெறாமல் இருந்தால் ஆண்களுக்கு இரண்டாம் திருமணம் செய்ய வேண்டிய நிலை உண்டாகும் போது இஸ்லாம் மார்க்கச் சட்டத்தில் அதற்கு எந்த வழியுமில்லை என்று ஆகிவிடும். உதாரணமாக, ஒரு பெண், புத்தி சுவாதீனமாக இருந்தால் அல்லது தொழுநோயாளியாக இருந்தால் அல்லது ஒன்றுமே செய்ய முடியாத நிரந்தரமான நோயால் பீடிக்கப்பட்டவளாக இருந்தால் அப்பெண் இரக்கம் காட்ட வேண்டிய நிலையில் இருக்கிறாள். ஆனால் அவள் பயனற்றவளாகவும் இருக்கிறாள். கணவனும் தனிமையாக இருக்கும் நிலையில் பொறுமை செய்ய முடியாதவனாக இருந்தால் அவனும் கருணைக்குத் தகுதியுள்ளவனாவான். இந்நிலையில் அக்கணவனுக்கு மறுமணம் செய்வதற்கு அனுமதி வழங்காமலிருப்பது அவனது ஆண் தன்மைக்கு செய்யும் அநியாயம் ஆகும். உண்மையில் இறை சட்டமானது இவ்விஷயங்களை முன் வைத்து ஆண்களுக்கு இவ்வழியைத் திறந்து வைத்திருக்கிறது. மேலும் தவிர்க்கமுடியாத சமயத்தில் பெண்களும் உரிய பாதையைத் திறந்து வைத்திருக்கிறது. கணவனும், மனைவிக்கு உதவாமல் போனால் அவள் நீதிபதி மூலமாக தலாக்குக்கு நிகராக இருக்கும் “குலா” (மண விலக்கு) பெறலாம்.

இறைசட்டம் ஒரு மருந்து கடைக்கு ஒப்பானதாக இருக்கிறது. அக்கடையில் எல்லா நோய்களுக்கும் தேவையான மருந்து கிடைக்காவிட்டால் அக்கடையானது சரியாக நடைபெறமுடியாது. எனவே ஆண்களுக்கு இரண்டாவது திருமணம் செய்ய கட்டாயப்படுத்தக் கூடிய சில பிரச்சனைகள் உண்டாகி விடுகிறதென்பது உண்மை இல்லையா? என்பதைச் சிந்தித்துப் பாருங்கள். எந்த மார்க்கச் சட்டத்தில் எல்லாப் பிரச்சனைகளுக்கும் தக்க பரிகாரம் காணப்படமாட்டாதோ அந்த மார்க்கச் சட்டத்தால் என்ன பயன்?

கவனியுங்கள்! விபசாரம் மாத்திரமே பைபிளின் புதிய ஏற்பாட்டில் விவாகரத்து செய்யும் விஷயத்தில் உரிய நிபந்தனையாக இருக்கிறது. மேலும் கணவனையும் மனைவியையும் உயிர் விரோதிகளாக ஆக்கி விடும். ஏனெனில் ஏனைய நூற்றுக்கணக்கான காரணங்கள் இருக்கின்றன. அவை பற்றி அதில் எதுவும் கூறப்படவில்லை. இதனால் கிறிஸ்தவ சமுதாயம் இக்குறையை சகிக்க முடியாததால் இறுதியில் அமெரிக்காவில் விவாகரத்துக்குரிய ஒரு சட்டத்தை நிறைவேற்ற நேர்ந்தது. இச்சட்டத்தால் பைபிளின் புதிய ஏற்பாடு எங்கு போனது என்பது பற்றி இப்போது சிந்தியுங்கள்.

பெண்களே! நீங்கள் கவலைப்படாதீர்கள். உங்களுக்கு அருளப்பட்ட வேதம் புதிய ஏற்பாட்டைப் போன்று மனிதனின் தலையீடு அதற்கு அவசியமானதல்ல. இந்த வேதத்தில் ஆண்களது உரிமைகள் பாதுகாக்கப்பட்டிருப்பது போலவே பெண்களது உரிமைகளும் பாதுகாக்கப்பட்டுள்ளன. கணவன் பலதார மணம் செய்வதில் மனைவிக்கு வெறுப்பு உண்டாகுமேயானால் அவள் நீதிபதி மூலமாக "குலா" வென்னும் மணவிலக்கு பெறமுடியும். முஸ்லிம்களிடையே உண்டாகவிருக்கும் பலவிதமான நிலைகளை முன் வைத்து, இஸ்லாம் மார்க்கச் சட்டங்கள் குறைபாடுள்ளவையாக ஆகாமலிருக்கும் பொருட்டுத் தனது சட்டத்தில் அவற்றை குறிப்பிட்டிருக்க வேண்டியது இறைவனுக்கு மிகவும் அவசியமானதாக இருந்தது.

ஆகவே பெண்களே! உங்களது கணவன்மார்கள் மறுமணம் செய்ய விரும்பும் போது நீங்கள் இறைவனை குறை கூறாதீர்கள். மேலும் இறைவன் உங்களைச் சங்கடங்களிலிருந்தும் சோதனைகளிலிருந்தும் காப்பாற்றும் பொருட்டு அவனிடம் பிரார்த்தனை செய்து வாருங்கள். எந்த ஒரு மனிதன் இருமனைவிமார்களை திருமணம் செய்த பின் அவர்களோடு நடு நிலையோடு நடந்து கொள்ள மாட்டானோ அவன் சந்தேகமின்றி பெரும் அநியாயக்காரனாகவும் இறைவனுக்கு பதில் கூற வேண்டியவனாகவுமிருக்கின்றான். ஆயினும் நீங்களும் இறைவனுக்கு கீழ்ப்படிபவர்களாகவும் அவனது கோபத்திற்கு ஆளாகக் கூடியவர்களாகவும் ஆகாதிருப்பீர்களாக. ஒவ்வொருவரும் அவர்களது செயல்களைப் பற்றி கேட்கப்படுவார்கள். நீங்கள் இறைவனது பார்வையில் நல்லவர்களாக மாறினால் உங்களின் கணவனும்





நல்லவனாக ஆக்கப்படுவான். இஸ்லாம் மார்க்கச் சட்டமானது பல்வேறு நலன்களை முன்வைத்து பலதார மணத்தை ஆகுமானதாகத் தீர்மானித்தபோதிலும், கழா-வ-கத்ர் என்னும் விதியின் சட்டங்கள் உங்களுக்காகத் திறந்து வைக்கப்பட்டுள்ளன. இஸ்லாம் மார்க்கச் சட்டங்களை உங்களால் சகிக்க முடியாதென்றால், துஆ மூலமாக கலா-வ-கத்ர் என்னும் விதியின் சட்டங்களைக் கொண்டு பயன் பெற முயற்சி செய்யுங்கள். ஏனெனில், கழா-வ-கத்ர் என்னும் இறைவன் வகுத்த விதியின் சட்டங்கள் இஸ்லாம் மார்க்கச் சட்டங்களையும் வெல்லக் கூடியவையாயிருக்கின்றன. நீங்கள் தக்வா என்னும் இறையச்சத்துடன் செயல்படுங்கள். உலகத்தோடும் அதன் அலங்காரத்தோடும் கவர்ச்சி அடைந்து விடாதீர்கள். உயர் குலத்தின் பெயரால் பெருமைப்படாதீர்கள். எப்பெண்ணையும் ஏளனம் செய்யவோ நகைக்கவோ செய்யாதீர்கள். கணவன்மார்களின் சக்திக்கு அப்பாற்பட்ட விஷயங்களுக்காக அவர்களை வற்புறுத்தாதீர்கள். நீங்கள் நிரபராதிகளாகவும் பரிசுத்தவான்களாகவும் கல்லறைகளில் பிரவேசிக்க முயற்சி செய்யுங்கள்.

இறைவனின் கடமைகளான தொழுகை, ஸக்காத்து, முதலானவவற்றை செயலாற்றுவதில் எவ்வித சோம்பலையும் மேற்கொள்ளாதீர்கள். உங்களின் கணவன்மார்களுக்கு மனதாலும், உயிராலும் கட்டுப்பட்டவர்களாயிருங்கள். அவர்களது கவுரவத்திற்குரிய பெரும்பாலான பாகம் உங்களின் கரங்களிலேயே இருக்கின்றது. நீங்கள் இறைவனிடத்தில் நல்ல பெண்மணிகளாகவும், பணிவுள்ளவர்களாகவும் கருதப்படுவதற்காக நீங்கள் உங்களது பொறுப்புகளை நல்லவிதமாக நிறைவேற்றுங்கள். வீணாகச் செலவு செய்யாதீர்கள். கணவன்மார்களின் சொத்துக்களை வீணாக விரயம் செய்யாதீர்கள். மோசம் செய்யாதீர்கள், திருடாதீர்கள், குறை கூறிக் கொண்டிருக்காதீர்கள். ஒரு பெண் இன்னொரு பெண் மீது அல்லது ஆண் மீது வீண்பழி சுமத்தாதீர்கள்.

## முடிவுரை

நமது ஜமாஅத்தில் இறை அச்சம் அதிகரிக்கவும் பூமியின் மீது பொங்கி எழுந்து கொண்டிருக்கும் இறைவனது கோபம் அவர்கள் மீது உண்டாகாமலிருக்கவும் அதற்கு அவர்கள் தகுதியுள்ளவர்களாக மாறவும் பிளேக் என்னும் கொடிய வியாதி இருந்து வரும் நாள்களில் அவர்கள் சிறப்பாக காப்பாற்றப்படவேண்டும் என்ற நோக்கங்களுக்காகவே இந்த எல்லா அறிவுரைகளையும் நாம் இங்கு எழுதியுள்ளோம். உண்மையான தக்வா என்னும் இறையச்சமே (பரிதாபம் அது மிகவும் குறைவாகவே காணப்படுகிறது.) இறைவனுக்கு திருப்தி அளிக்கக் கூடியதாக இருக்கிறது. மேலும் சாதாரண நிலையில் அல்லாமல் அடையாளம் என்ற நிலையில் முழுமையான இறை அடியானையே ஆபத்துகளிலிருந்து இறைவன் காப்பாற்றுகிறான். ஒவ்வொரு வஞ்சகனும் அல்லது அறிவீனனும் தன்னை இறை அடியான் என வாதம் புரிகிறான். ஆனால் எவர் இறை அடையாளத்தைக் கொண்டு இறை அடியாராக நிரூபிக்கப்படுவாரோ அவரே உண்மையான இறை அடியார் ஆவார். நான் இறைவனை நேசிக்கிறேன் என்று ஒவ்வொருவனும் கூறிக் கொள்ளமுடியும். ஆனால் நேசிப்பதை வானத்தின் சாட்சியத்தைக் கொண்டு நிரூபித்தால்தான் அவன் இறைவனை நேசிப்பவனாவான். தன்னுடைய மதமே உண்மையானது என ஒவ்வொருவரும் கூறிக்கொள்கிறார். ஆனால் எவருக்கு இவ்வுலகிலேயே (ஆன்மீக) ஒளி கிடைக்ககின்றதோ அவர் சார்ந்துள்ள மதமே உண்மையானதாகும். ஒவ்வொருவரும் தனக்கு இரட்சிப்புக் கிடைக்கும் எனக் கூறிக் கொள்கிறார். ஆனால் எவர் இதே உலகில் இரட்சிப்பின் ஒளியைக் காண்பாரோ அவரே அக்கூற்றில் உண்மையானவராக இருக்கிறார். ஆகவே நீங்கள் ஒவ்வொரு ஆபத்திலிருந்தும் இரட்சிப்பு பெறும் பொருட்டு இறைவனுக்குப் பிரியமுள்ளவர்களாக மாற முயலுங்கள். முழுமை தன்மையுள்ள இறை அடியாரே பிளேக்கிலிருந்து நிச்சயமாகப் காப்பாற்றப்படுவார். ஏனெனில் அவர் இறைவனின் பாதுகாப்பிலேயே இருந்து வருகிறார். ஆகவே நீங்கள் முழுமையான இறையச்சமுடையவர்களாக மாறுங்கள். இறைவன் பிளேக்கைக் குறித்து கூறியவற்றையெல்லாம் நீங்கள் கேட்டிருக்கின்றீர்கள். அது ஒரு கோபத்தின் நெருப்பாய் இருக்கிறது. ஆகவே நீங்கள் அந்நெருப்பிலிருந்து உங்களைக் காப்பாற்றிக் கொள்ளுங்கள்.





எந்த மனிதர் என்னை உண்மையாகப் பின்பற்றுகிறாரோ எவரிடம் எவ்வித மோசமும், சோம்பலும் கவனமின்மையும் காணப்படுவதில்லையோ, எவர் நன்மையுடன் தீமையை கலக்கிறதில்லையோ அவரே காப்பாற்றப்படுவார். இதற்கு மாறாக எவன் இவ்வழியில் சோம்பேறித்தனமாக கால் எடுத்து வைப்பானோ மேலும் தக்வா என்னும் இறையச்சத்தின் வழிகளில் முழுமையாகச் செயல்படுவதில்லையோ அல்லது உலக இச்சைகளில் மூழ்கிக் கிடக்கின்றானோ அவன் தன்னைத்தானே சோதனையில் ஆழ்த்துகிறான். ஆகவே நீங்கள் எல்லா வகையிலும் இறைவனுக்குக் கீழ்ப்படியுங்கள்.

தன்னை பைஅத் என்னும் உடன்படிக்கையில் இணைத்துக் கொண்ட ஒருவர் தனது பொருளைக் கொண்டு இந்த ஜமாஅத்திற்கு ஊழியம் செய்ய இது உரிய நேரமாகும். எந்த மனிதர் ஒரு பைசா கொடுக்க சக்தியுள்ளவராய் இருப்பாரோ அவர் இந்த ஜமாஅத்தின் செலவுக்காக ஒவ்வொரு மாதமும் ஒரு பைசா வீதம் கொடுத்து வர வேண்டும். மேலும் எவரால் மாதாமாதம் ஒரு ரூபாய் கொடுக்க முடியுமோ அவர் மாதாமாதம் ஒரு ரூபாய் வீதம் கொடுத்து வரவேண்டும்.

ஏனெனில் (உணவு தயாரித்து இலவசமாக விநியோகிக்கும் உணவு விடுதியாகிய) லங்கர் கானாவின் செலவுகளைத் தவிர மார்க்கப் பணிகளுக்காகவும் பெரும் அளவிலான பணம் தேவைப்படுகிறது. நூற்றுக்கணக்கான விருந்தாளிகள் வருகை தருகிறார்கள். ஆயினும் போதிய வசதி இல்லாததனால் விருந்தாளிகளுக்குத் தேவைப்படக் கூடிய வசதியான வீடு அமையவில்லை. தேவையான அளவுக்கு கட்டில்களுக்கான ஏற்பாடும் இல்லை. பள்ளி வாசலை விரிவுபடுத்த வேண்டிய அவசியமும் ஏற்பட்டிருக்கிறது. பிரசுரங்கள் பிரச்சார விஷயத்திலும் நமது நிலை விரோதிகளை விட மிகவும் பலவீனமாகவே இருக்கிறது. கிறிஸ்தவர்களின் சார்பாக மாதம், ஐம்பதாயிரம் பத்திரிக்கைகளும் மத சம்பந்தமான பிரசுரங்களும் பிரசுரமாகும்போது நமது சார்பாக மாதாமாதம் ஆயிரம் பத்திரிக்கை தொடர்ச்சியாக வெளியிட முடியவில்லை. ஆகவே இப்பணிகளுக்காக பைஅத் செய்த ஒவ்வொருவரும் இறைவன் அவர்களுக்கு வழங்கியதிலிருந்து அவர்களால் முடிந்தவரை கூடுதலாக பணவுதவி செய்ய வேண்டும். குறைந்த உதவியாக இருந்தாலும் மாதாமாதம்

தடை இன்றி வந்து கொண்டிருக்க வேண்டும். இவ்வுதவி நீண்ட காலம் வரை மறந்து விட்டு ஏதாவதொரு நேரத்தில் தானாகவே செய்யும் உதவியை விட மேலானதாகும். ஒவ்வொரு மனிதனின் உண்மைத் தன்மையும் அவனது சேவையைக் கொண்டே அறியப்படும்.

அன்புக்குரியவர்களே! இது மார்க்க வளர்ச்சிக்காகவும் அதன் குறிக்கோள்களை நிறைவேற்றுவதற்காகவும் சேவை செய்வதற்கான தருணமாகும். இந்ததருணத்தை ஒரு பாக்கியமாக கருதுங்கள். இது பின்னர் ஒரு போதும் உங்கள் கைக்கு வரப்போவதில்லை. ஸக்காத்து கொடுக்கக் கூடியவர் தனது ஸக்காத்தை இவ்விடத்திற்கே அனுப்ப வேண்டும். ஒவ்வொரு மனிதனும் வீணாக செலவு செய்வதிலிருந்தும் தன்னைப் பாதுகாத்துக் கொள்ள வேண்டும். அப்பணத்தை இவ்வழியில் ஈடுபடுத்த வேண்டும். இறைவனது அருட்கொடையையும் ரூஹுல் குத்ஸ் என்னும் பரிசுத்த ஆவியின் சன்மானத்தையும் பெற ஒவ்வொரு விதத்திலும் உள்ளத் தூய்மையுடன் செயல்படுங்கள். ஏனெனில் இந்த ஜமாஅத்தில் சேர்ந்தவர்களுக்காகவே இந்த சன்மானம் இருக்கிறது.

நமது நபி (ஸல்) அவர்களுக்கு தோற்றமளித்த பரிசுத்த ஆவியின் தோற்றமானது மற்றவர்களிடம் தோற்றமளித்ததை விட மேன்மையானதாகும். பரிசுத்த ஆவி சில நேரம் ஒரு நபி மீது புறாவின் உருவத்தில் வெளியானது. சில நேரம் இன்னொரு நபி அல்லது அவதாரத்தின் மீது பசுவின் உருவத்தில் வெளியானது. சிலர் மீது ஆமை, மீன் உருவத்தில் வெளியானது. பரிபூரண மனிதரான நமது நபி (ஸல்) அவர்கள் தோன்றாதவரை மனித உருவில் தோன்றக் கூடிய நேரம் வரவில்லை. எம்பெருமானார் (ஸல்) அவர்கள் தோன்றியபோது அவர்கள் முழுமையான மனிதரான காரணத்தால் பரிசுத்த ஆவியும் அவர்கள் மீது மனிதனின் உருவிலேயே வெளியானது. இதனால் பரிசுத்த ஆவியின் சக்தியான "தஜல்லி" என்னும் சிறப்பும் வலிமையும் கொண்ட பிரகாரசமானது பூமியிலிருந்து வானத்தின் எல்லை வரை நிரம்பிவிட்டது. இதனால் திருக்குர்ஆனின் போதனையானது இணைவைப்பதில் இருந்து பாதுகாக்கப்பட்டது. ஆனால் கிறித்தவ மதத்தின் வழி காட்டி மீது பரிசுத்த ஆவி மிகவும் பலவீனமான புறாவின் உருவில் வெளியானதால் தூய்மையற்ற ஆவியான ஷெய்த்தான் இம்மதத்தை வென்று விட்டான். அவன் தனது பெருமையையும் சக்தியையும் ஒரு பெரும் மலைப்பாம்பு தாக்குவதைப் போன்று





வெளிப்படுத்தினான். இதன் காரணத்தாலேயே திருக்குர்ஆன் கிறிஸ்தவர்களது வழி கேட்டை உலகத்திலுள்ள அனைத்து வழிகேடுகளிலிருந்தும் முதன்மையானதாக கணக்கிட்டுள்ளது. மேலும் மனிதனை இறைவனாகவும், இறை மகனாகவும் ஆக்கியிருப்பதன் மூலம் பூமியின் மீது ஒரு மாபெரும் பாவம் இழைக்கப்பட்டுள்ளதால் வானமும் பூமியும் உடைந்து சிதறுண்டு போகலாம் என்றும் அது கூறுகிறது.

திருக்குர்ஆனின் ஆரம்பத்திலும் கிறிஸ்தவர்களது கொள்கைக்கு மறுப்பு உள்ளது. மேலும் அவர்களது விஷயமும் இடம் பெற்றுள்ளது. எவ்வாறெனில், "இய்யாக் நஃபுது", "வலல்லால்லீன்" என்னும் திருவசனங்களிலிருந்து நன்கு விளங்கிக் கொள்ள முடியும். மேலும் திருக்குர்ஆனின் இறுதியிலும் கிறிஸ்தவர்களது கொள்கைக்கு மறுப்பு உள்ளது. இதனை "குல் ஹுவல்லாஹு அஹத் அல்லாஹுஸ் ஸமத் லம் யலித் வலம்யூலத்" (திருக்குர்ஆன் 112:2-4) என்னும் அதிகாரத்திலிருந்து புரிந்து கொள்ள முடியும். மேலும் திருக்குர்ஆனின் மத்திய பகுதியிலும் கிறித்தவ மதத்தின் குழப்பத்தைப் பற்றிய விஷயம் இடம் பெற்றிருக்கின்றது. இதனை "தகா துஸ் ஸமாவாத்து யத்த ஃபத்தர்ன மின்ஹு (திருக்குர்ஆன் 19:91) என்னும் திருவசனத்திலிருந்து விளங்கிக் கொள்ள முடியும். உலகம் தோன்றிய காலத்திலிருந்து இதுவரை படைப்பினங்களை வழிபடுதல், வஞ்சித்தல் ஆகியவற்றின் முறைகளைப் பற்றி இதுபோன்று ஒருபோதும் வலியுறுத்தப்படவில்லை என்று திருக்குர்ஆனிலிருந்து விளங்குகிறது. இதன் காரணத்தாலேயே முபாஹலா வுக்காவும் (ஒருவர் மற்றவரின் சாபத்திற்காக வேண்டி துஆச் செய்தல்) கிறிஸ்தவர்களே அழைக்கப்பட்டார்கள். வேறு எந்த இணை வைப்பவரும் அதற்காக அழைக்கப்படவில்லை.

இதற்கு முன் பரிசுத்த ஆவி, பறவைகள் மிருகங்களின் உருவில் வெளியாகிக் கொண்டிருந்ததன் இரகசியமென்ன? இதனை அறியக் கூடியவர்கள் தமாகவே அறிந்து கொள்ளட்டும். நமது திருநபி (ஸல்) அவர்களது மனிதத்தன்மையானது மிகவும் சக்தி வாய்ந்ததாக இருந்த காரணத்தால் அது பரிசுத்த ஆவியையும் மனிதத் தன்மையின் பக்கம் இழுத்து வந்தது என்ற குறிப்பை மட்டும் நாம் கூறிக்கொள்கிறோம். ஆகவே நீங்கள் தேர்ந்தெடுக்கப்பட்ட இப்படிப்பட்ட ஒரு நபியைப் பின்பற்றியவர்களாக இருந்து கொண்டு ஏன் உங்களது உற்சாகத்தை இழக்கிறீர்கள்?

நீங்கள் உண்மையிலும் தூய்மையிலும் நிலைத்து நிற்பதைக் கண்டு வானத்திலுள்ள மலக்குகளும் வியப்படைந்து உங்களுக்காக அவர்கள் துஆச் செய்வதற்கு தகுந்தாற்போல் நீங்கள் உங்களின் முன்மாதிரியை எடுத்துக் காட்டுங்கள். உங்களுக்கு வாழ்வு கிடைப்பதற்காக ஒரு மரணத்தை ஏற்றுக் கொள்ளுங்கள். இறைவன் உங்கள் உள்ளத்தில் இறங்குவதற்காக, மன இச்சைகளை விட்டும் அதனை தூய்மைப்படுத்துங்கள். ஒரு பக்கத்தை முழுமையாக துண்டித்து விட்டு மற்றொரு பக்கத்தோடு முழுமையான முறையில் தொடர்பை ஏற்படுத்துகள். இறைவன் உங்களுக்கு உதவு புரிவானாக!

இப்போது இதனை முடித்துகொள்கிறேன். மேலும் எனது இந்த நற்போதனை எனக்கும் உங்களுக்கும் மிகவும் பயனுள்ள வகையில் அமையட்டுமாக! நீங்கள் இந்தப் பூமியின் நட்சத்திரங்களாக விளங்கும் பொருட்டு உங்களில் ஒரு நல்ல மாற்றம் உண்டாவதாக! உங்களின் இறைவனிடமிருந்து உங்களுக்கு கிடைத்த ஒளியிலிருந்து இவ்வுலகம் பேரொளி பெறுவதற்காக இறைவனிடம் பிரார்த்திக்கின்றேன். ஆமீன், ஸும்ம ஆமீன். (அவ்வாறே ஆகுக. மீண்டும் மீண்டும் அவ்வாறே ஆவதாக)

“யா இபாதல்லாஹி உதக்கிருக்கும் அய்யா மல்லாஹி வ உதக்கிருக்கும் தக்வல் குலூபி இன்னஹூ மன்ய் எஃதி ரப்பஹு முஜ்ரிமன் ஃபஇன்னலஹு ஜஹன்னம். லா யமூத்து ஃபீஹா வலா எஹ்யா. பலா துக்லிது இலா ஸீனத்தித் துன்யா வஸூரிஹா வத்தக் குல்லஹ வஸ்தயீனூ பிஸ்ஸப்ரி வஸ்ஸலாத்தி இன்னல்லாஹ வமலாஇக்க தஹூ யுஸல்லூன அலன்னபிய்யி யா அய்யயுஹல்லதீன ஆமனூ ஸல்லூ அலைஹி வஸல்லிமூ தஸ்லீமா. அல்லாஹும்ம ஸல்லி அலா முஹம்மதின் வஅலா ஆலி முஹம்மதின்வ் வ பாரிக் வஸல்லிம்.”

பொருள் : அல்லாஹ்வின் நல்லடியார்களே! அவனது (தண்டனைகளின்) நாட்களைப் பற்றி உங்களுக்கு நான் நினைவூட்டுகிறேன். மேலும் உங்கள் இதயங்களில் இறையச்சமானது என்றென்றும் குடி கொண்டிருக்க வேண்டும் என்பதையும் உங்களுக்கு நினைவூட்டுகிறேன். தன்னுடைய இறைவனிடம் எவன் குற்றவாளியாகச் செல்கின்றானோ நிச்சயமாக அவனக்கு நரக வேதனை காத்துக் கொண்டிருக்கிறது. அவன் அந்த நரக வேதனையிலிருந்து மரணம் அடையவும் மாட்டான். உயிரோடு





மீளவும் மாட்டான். எனவே நீங்கள் இவ்வுலக அலங்காரத்திலும் அதன் வசீகர வலையிலும் ஒருபோதும் சிக்கிவிடவேண்டாம். இறைவனுக்கு அஞ்சிக் கொண்டிருங்கள். பொறுமையைக் கொண்டும் (துஆ) தொழுகையைக் கொண்டும் அவனிடம் உதவி தேடுங்கள். நிச்சயமாக அல்லாஹ் இந்த நபியின் மீது அருளைப் பொழிகிறான். மலக்குகளும் அல்லாஹ்விடம் அருளைப் பொழியுமாறு வேண்டுகின்றனர். நம்பிக்கை கொண்டவர்களே! நீங்களும் அவர்கள் மீது துரூத் (ஸலவாத்து) ஓதுவதுடன் அவர்களின் மீது அருளை பொழிய துஆச் செய்யுங்கள்.

அல்லாஹ்வே! முஹம்மது (ஸல்) அவர்கள் மீதும் அவர்களைப் பின்பற்றுவோர் மீதும் அருள் புரிவாயாக, மேலும் அவர்களுக்கு அளவற்ற பெரும் அபிவிருத்திகளையும் சமாதானத்தையும் வழங்குவாயாக.

## பிளேக் நோய் பற்றிய முன்னறிவிப்பு (ஃபார்ஸி கவிதை வடிவில்)

அடையாளமானது எவரின் அதிகாரத்திலும் இல்லை. ஆனால் நான் இறைவன் புறமிருந்து ஓர் இடத்தின் அடையாளத்தை தெரிவிக்கிறேன்.

எவர் விரைந்து வந்து எனது நான்கு சுவர்களுக்குள் அடைக்கலம் பெறுவாரோ அவரே பிளேக் வியாதியிலிருந்து இரட்சிப்புப் பெறும் பாக்கியசாலியாக இருக்கிறார்.

என் இறைவன் மீதும் அவனது மகிமையின் மீதும் ஆணையாக ! எனது இந்த எல்லா விஷயங்களும் அந்தப் பரிசுத்த இறைவனின் முன்னறிவிப்பிலிருந்து (வஹி மூலமாக) எனக்கு வந்தவையாகும்.

என்னை நிராகரித்த காரணத்தால் எவனுடைய உள்ளம் கருமை நிறமாகிவிட்டதோ, அவனுக்காக இவ்விஷயம் ஒன்றே போதுமானதாகும். மேலும் எவ்வித வாதப்பிரதி வாதமும் தேவை இல்லை.

நான் செய்யும் வார்த்தைப்பாடானது பொய்யானதெென நிரூபிக்கப்பட்டால், நீங்கள் அனைவரும் என்னோடு போர் செய்ய எழுவீர்களாக. ஐயமின்றி இது உங்களுக்கு இயன்றதேயாகும்.

# வீட்டை விரிவுபடுத்துவது தொடர்பாக சந்தாவிற்கான விண்ணப்பம்

எதிர் காலத்தில் பிளேக் எனும் நோய் நாட்டில் பரவுவதற்கான அச்சம் உள்ளது. நமது வீட்டில் சில பகுதிகளில் ஆண்களும் விருந்தாளிகளாக இருக்கின்றனர். சில பகுதிகளில் பெண்கள் மிக நெரிசலான நிலையில் உள்ளனர்.

அல்லாஹ் ஜல்லஷானாஹு (சகல சிறப்புகளும், மகத்துவமும் கொண்ட அவ்விறைவன்) இந்த வீட்டின் நான்கு சுவர்களுக்குள் இருப்பவர்களை குறிப்பாக பாதுகாப்பதாக வாக்குறுதி வழங்கியுள்ளான் என்பதை நீங்கள் கேட்டிருக்கின்றீர்கள்.

இப்போது இறந்து போன குலாம் ஹைதர் சாஹிப் அவர்களின் வீட்டில் நமக்குள்ள பங்கையும் மற்ற பகுதியை விலைக்கும் கொடுப்பதற்கு இந்த சொத்தில் நமது பங்குதாரர்கள் சம்மதம் தெரிவித்துள்ளனர். எனது அறிவில் இந்த மாளிகையானது நமது மாளிகையின் ஒரு பகுதியாக இருக்கும். இதனை சீரமைப்பதற்கு ரூபாய் இரண்டாயிரம் செலவாகலாம்.

பிளேக் நோயின் அபாயமான காலம் மிக அருகில் இருப்பதால் இந்த வீடானது இறைவனின் வஹியின் மூலம் கிடைத்த நற்செய்திகளின் அடிப்படையில் பிளேக் எனும் கடல் சீற்றத்திலிருந்து (மக்களை காப்பாற்றும்) கப்பலாக இருக்கும். யாருக்கெல்லாம் இந்த நற்செய்தியின் வாக்குறுதியில் பங்கு கிடைக்கும் என்பது நமக்கு தெரியாது. எனவே இந்த பணி மிக விரைவில் செய்து முடிக்க வேண்டியது ஒன்றாகும்.

படைப்பாளவனாகவும் உணவு வழங்கக் கூடியவனாகவும் (பரிபாலிக்கின்றவனாகவும்) நமது செயல்களை பார்க்கின்றவனாகவும் இருக்கும் இறைவன் மீது நம்பிக்கை வைத்தவாறு நாம் முயற்சி செய்ய வேண்டும். நமது இந்த வீடு, கப்பலாக இருப்பதை நான் பார்க்கின்றேன். ஆனால் இந்த கப்பலில் ஏற (சவாரி செய்ய) எந்த ஒரு ஆணுக்கும் பெண்ணுக்கும் இடமில்லை. எனவே இதை விரிவுபடுத்துவதற்கான தேவை ஏற்பட்டுள்ளது.

வஸ்ஸலாமு அலா மனித்த பஅல் ஹுதா. நேர்வழியை பின்பற்றுவர் மீது அல்லாஹ்வின் சாந்தி உண்டாவதாக.

**வெளியிடுபவர் : மிர்ஸா குலாம் அஹ்மத் காதியானி**